இதுவரையில் உனக்குப் பதினேழுவருடங்களாயின. ஆக உனக்கு இருபத்துமூன்று வயதுசென்று, இருபத்துநான்காவது வயதன்றோ? நான் துக்கமெல்லாந்தீர்ந்து இன்பமடைவேனென்றே எண்ணி இதுவரையும் காலத்தைக் கழித்தேன்; இதுகாறும் சக்களத்திகளுக்குக் கீழ்ப்படிந்திருந்தே மூப்பையடைந்தேன்; இனிமேலும் நீங்காத் துன்பத்தை நான் பொறுத்திரேன்; முழுமதிபோன்ற உன் திருமுகத்தையுங் காணுமல் யான் எங்ஙனம் உய்ந்திருப்பேன்? விரதங்களினுலும், யோகங்களினுலும், மற்றும் பற்பல வருத்தமான முயற்சிகளினுலும், உன்னை நான்மிகுதியும் அருமையாக வளர்த்தேனன்றோ? மழைகாலத்தில் மேன்மேலும் பெருகிவருகின்ற சிறந்த நதியின் வெள்ளந் தாக்கின மாத்திரையில் அதின் கரையிடிந்து கரைந்து அழிவதுபோல, இந்நீங்காத்துன்ப வெள்ளத்தால் மோதப்பட்ட என்னுள்ளமும் இடிந்து கரைந்து நைந்தன்றோ போய்விடல் வேண்டும்! அவ்வண்ணம் போகாமையினுல், இவ்வுள்ளம் அழிவற்ற சிலைபோன்றதென நினைக்கின்றேன். இறப்பென்பதே எனக்கில்லையோ? யமனுலகத்தில் எனக்கு இடந்தானில்லையோ? இல்லாவிடின் துயரங்கொண்டு கூவுகின்ற பெண்மானைச் சிங்கம்பிடித்து முறித்துக்கொண்டு போவதுபோல யமன் என்னையேன் கொண்டுபோகவில்லை? என் மனம் எஃகினுலே செய்யப்பட்டதோ? அல்லாவிடின், பிளந்தாவது சிதறியாவது ஏன் போகவில்லை? இவ்வகைத் துன்பங்களையடைந்து மழியாமையால், இனி எனக்கு மரணமேயில்லை போலும். காலமல்லாக் காலத்தில் எவர்க்கும் மரணங்கிடைக்காதென்பது உறுதியன்றோ? களர் நிலத்தில் விதைத்த விதைபோல நான் செய்த தவங்களும், விரதங்களும், தானங்களும், தருமங்களும், பலனற்றன வாயினவே! மனிதர்களுக்கு நினைத்தபொழுதே இறக்குந் திறமையிருக்குமாயின், கன்றைவிட்டுப்பிரிந்த பசுப்போல, உன்னைவிட்டுப்பிரியும் யானும் உயிரைவிட்டு யமலோகம்போய்ச் சேர்வேன். உன்னைவிட்டு நான்மாத்திரம் இங்குப் பிழைத்திருப்பதில் பயன்யாது? பசு கன்றுசென்றவழியே போவதுபோல நானும் உன்னுடன் காட்டுக்கு வருகின்றேன்; என்றிவ்வண்ணம் பிடித்துக் கட்டப்பட்ட பிள்ளையை நோக்கிக் கின்னரி புலம்புவதுபோல வாய்விட்டுப் புலம்பியழுதாள்.

அயோத்தியாகாண்டத்தில் இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்தச்சருக்கத்தில் (தசஸப்தசவர்ஷாணி தவஜாதஸ்யராகவ) என்று ஸ்ரீராமபிரானை நோக்கிக் கோஸலை பதினேழுவயதுள்ளவராகக்கூறினுள். பாலகாண்டத்தில் சக்கரவர்த்தி விசுவாமித்திரரை நோக்கி, (ஊனஷோடசவர்ஷோமே ராமோராஜீவலோசன:) என்று ஸ்ரீராமபிரான் பதினுறுவயதுக்குங் குறைந்தவனென்றுரைத்தமையால், விவாஹத்திற்கு முன்பே, ஸ்ரீராமபிரானுக்குப் பன்னிரண்டு வயதுக்கு மே

லாகி இருக்கவேண்டுமென்பதில் ஐயமேயில்லை. (பாலோத்வாதசவர்ஷோயம் அருக்தாஸ்த்ரச்சராகவ:) என்று, மாரீசன் ராவணனைக் குறித்து, ஸ்ரீராமபிரான் விசுவாமித்திரர் யாகத்திற்கு வருங்காலையில், பன்னிரண்டுவயதுள்ளவனென்று கூறினான். (உஷித்வாத்வாதசஸமா இக்ஷ்வாகூணும் நிவேசநே) என்றும், (தத்ரத்ரயோதசேவர்ஷே ராஜாமந்த்ரயதப்ரபு:) என்றும், (மமபர்த்தாமஹாதேஜா வயஸாபஞ்சவிம்சக:) என்றும், (அஷ்டாதசஹிவர்ஷாணி மமஜன்மநிகண்யதே) என்றும், சீதாபிராட்டியார் வனவாசம் புறப்படும்போது ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்து வயதென்றும், தமக்குப் பதினெட்டுவயதென்றும், அருளிச்செய்கின்றார். இவற்றுள் சீதாபிராட்டியாரது வாக்கியத்தையும், மாரீசன் வாக்கியத்தையும் பற்றி, ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்து வயதெனவும், கோஸலையின் வாக்கியத்தைப்பற்றிப் பதினேழு வயதெனவும், சக்கரவர்த்தி வாக்கியத்தைப்பற்றி, இருபத்தெட்டு வயதெனவும், தோற்றுகின்றமையால், இவ்வேறுபாட்டுக்குக் காரணம் யாதோ வெனின், சீதா மாரீசர்களின் வாக்கியப்படி இருபத்தைந்து வயதென்பதே உண்மை. கோஸலை வாக்கியத்திலும், (ச) என்றிருப்பதினால், மற்றொரு (ஸப்த) என்னும் பதத்தைச் சேர்த்து, இருபத்துநான்கு சென்று இருபத்தைந்தாம் வயதென்றே பொருள் கூறவேண்டு மாதலால், விரோதமில்லை. கர்ப்பவாசம் முதல், எட்டாவது வருஷத்தில் அந்தணர்களுக்கும், பதினோராவது வருஷத்தில் க்ஷத்திரியர்களுக்கும், பன்னிரண்டாவது வருஷத்தில் வைசியர்களுக்கும், உபநயனம் செய்யவேண்டுமென்று விதியிருக்கின்றமையால், உபநயனத்துக்கு முன் ஏழுவருஷங்கள் சென்றனவென்றும், பின் பதினேழுவருஷங்கள் ஆயினவென்றும் பொருள்; கோஸலை வாக்கியத்துக்குக் கூறுவது சரியோவெனில், பதினோராவது வருஷமென ஒருமையாற்கூறாது, வருஷங்களிலெனப் பன்மையாற் கூறினமையால், ஒன்பதாவது பத்தாவது வருஷங்களிலும், ராஜர்களுக்கு உபநயனஞ் செய்யலாகுமெனப் பொருள் கொள்ளவேண்டு மாதலால், விரோதமில்லையெனக் கொள்க. சக்கரவர்த்தியார் வாக்கியத்திலும், பதினாறுவயதுக்குங் குறைந்தவ னென்பதனால், பன்னிரண்டு வயதுள்ளவனென்றே மாரீசன் வாக்கியத்துக் கிசையப் பொருள் கூறினமையால், விரோதமில்லை. ஆதலின் ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்து வயதும், சீதாபிராட்டியார்க்குப் பதினெட்டுவயதுஞ் சென்றனவெனக் கொள்க. இங்ஙனமாயின், திருக்கல்யாண காலத்தில், சீதாபிராட்டியார்க்கு ஆறுவயதும், ஸ்ரீராமபிரானுக்குப் பன்னிரண்டு வயதும் ஆயினவெனக் கொள்ளவேண்டுதலால், (பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வைவமேபிதா) என்று தமக்கு விவாஹஞ்செய்வதற்கு முன்பே யௌவனம் வந்ததாகக்கூறிய சீதாபிராட்டியாரது வாக்கியம் பொருந்துமோவெனின், ஸ்ரீமஹாலக்ஷ்மியே அயோநிஜையாகப் பூமியிற் பிறந்திருக்கின்றமையால், அவளுக்கு ஆறுவயதிலே யௌவனப்பருவம் வருவது வியப்பன்றெனக் கொள்க. ஸ்ரீமஹாலக்ஷ்மி இலங்கையில் ஓர் தடாகத்தில் தாமரை மலரிற்பிறந்து, அங்கிருந்து பூமிக்குள் பிரவேசித்து, மூன்றுவருஷமிருந்து, பிற்பு மிதிலையில் பூமியினின்று வெளியே அவதாரஞ்செய்தனளென வேறு புராணத்திலிருக்கின்றமையால், அக்கணக்கின்படி சீதாபிராட்டியார்க்குத் திருமணக்காலத்தில் ஒன்பதுவயது சென்றமையால், யௌவனம் வரக்குறையில்லையே; பதினெட்டுவயது என்றது, மிதிலையில் அவதாரஞ்செய்தது முதல் கணக்கிட்டு அருளிச்செய்தமையால் விரோதமில்லை. சிலர் ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தெட்டு வயதென மொழிவார்கள். அவர் மொழி சீதாபிராட்டியாரது வாக்கியத்தோடும், மாரீசன்வாக்கியத்தோடும் பேதப்படுகின்றமையால், உண்மையல்லவெனக் கொள்ளவேண்டு மாதலால், அங்ஙனங் கூறுவோர் கருத்தியையாதெனவுணர்க.

## இருபத்தேோராவதுஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் வனம்புகத் தடைசெய்த தம்பிக்குந் தாய்க்கும் நீதி யருளிச் செய்தது.

அவ்வகையாகப் புலம்புகின்ற கோஸலவரசன் திருமகளை நோக்கி, இளையபெருமாள் தம்மெண்ணத்தை வெளிப்பட உரைசெய்ய இதுவே சமயமெனச் சொல்லலுற்றனர். தாயீரோ! ஸ்ரீராமபிரான் கைகேயிக்காக ராஜ்ஜியலக்ஷ்மியை விட்டுவிட்டு, வனவாசத்துக் கெழுந்தருளுவது எனக்கும் தகுதியாகத் தோற்றவில்லை; வயது சென்றவரும், காமவிகாரங் கொண்டவரும், போக விருப்புடையவரும், அறிவி னிலை குலைந்தவருமாகிய சக்கரவர்த்தியார் கைகேயியினு லேவப்பட்டவராய், எதுதான் கட்டளைசெய்யார்? ஸ்ரீராமபிரானை நாட்டிலிராமல் காட்டுக்கு ஓட்டிவிடும்படி இவரென்ன அபராதஞ்செய்தார்? என்ன குற்றஞ்செய்தார்? எப்பொழுதும் பிரியாதிருக்கின்றநானு மிவர் சிறிதுங் குற்றஞ்செய்யக் கண்டிலேன்; பகைஞனுயினும் புறத்தில், ஸ்ரீராமபிரானைத் துதிசெய்கின்றானே யன்றிச் சிறிதும் பழிக்கக் கேட்டிலேன்; கடவுள் போன்றவரும், வஞ்சம் சிறிது மறியாதவரும், ஐம்புலன்களையும் வென்றவரும், மருவலரிடத்தும் அன்புசெய்பவருமாகிய சற்புத்திரனைக் காரணமின்றி, தருமமுணர்ந்த யாவனுயினும், காடுசெல்லவிடுப்பனே? மிகுதியும் மூப்பை யுடையாராயினும், மீண்டும் பாலன் போலக் காமவேட்கைகொண்டு மெய்ம்மறந்து கிடக்கின்ற வேந்தர் வேந்தர் மொழியை அரசுநெறியுணர்ந்த எந்தப்புத்திரனுகிலும் இதயத்தில் கொண்டு அதற்குட்பட்டு நடப்பானே? இச்செய்தியை மன்னர் பெருமான் அறிவதற்கு முன்னமே என்னுடன் கூடித் திருவபிஷேகங் கொண்டு, இந்நகரத்தை ஸ்ரீராமபிரான் தம்வசஞ் செய்துகொள்ளக் கடவர். வில்லைக் கையிலேந்தி யருகிலிருக்கும் என்னால் பாதுகாக்கப்பட்டு, காலாந்தகன்போல எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமபிரானை எதிர்த்து ஆஜ்ஞையை மீறி நடக்கவல்லவன் யாவன்? பரதனைச்சேர்ந்த யாவராயினும், ஒருகால் தடைசெய்வாராயின், அவர்களை யெல்லாங் கூர்மையுள்ள கணைகளால் துணித்துக் கொல்வேன்; சூரனுயினும், எப்பொழுதும் பொறுமைபூண்டு சாதுவாக இருப்பானுயின், அவன் யாவராலும் அவமதிசெய்யப் படுகின்றானன்றோ? கைகேயி வார்த்தையைக் கேட்டு இம்மஹாராஜரும் தீங்குசெய்வாராயின், அவரையுங் கொல்வோம்; அல்லது பிடித்துக் கட்டிவிடுவோம்;—

గురోరప్యవలిప్తస్య కార్యాకార్యమజానతః।
ఉత్పథం ప్రతిపన్నస్య కార్యం భవతి శాసనం॥

குரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத꞉ ।
உத்பதம்ப்ரதிபன்னஸ்ய கார்யம்பவதிசாஸநம் ॥

செய்யத்தக்கதும் செய்யத்தகாததுமறியாமல், கர்வத்தினால் அவ்வழியில் செல்லுகின்றவன் குருவாயிருந்தாலும், அவனைத் தீச்செயல் செய்யவிடாமல் தடைசெய்து, அடக்கவேண்டியதே தருமச்செய்கை. ஸ்ரீராமபிரானுக்குரிய இந்த ராஜ்ஜியத்தை என்னபலத்தினால், என்ன காரணத்தினால் கைகேயிக்குக்கொடுக்க நினைக்கின்றார் மஹாராஜர்? ஸ்ரீராமபிரானையும் என்னையும் பகைத்து, அரசுப்பெருஞ்செல்வத்தைப் பரதனுக்குக் கொடுக்கும்படி அவருக்கு என்னதிறமை யிருக்கின்றது? என்தாயே! நான் உள்ளூற உமது திருமகனாரிடத்தில் பத்திதலைக்கொண்டவன்; இவர்திருவுளத்துக் கிசையநடப்பதே என்கருத்து. இவ்வண்ணம் என் சத்தியத்தின் மேலும், வில்லின் மேலும், தானத்தின் மேலும், யாகத்தின் மேலும் ஆணையிட்டு, உமக்கு உறுதிசெய்து கொடுக்கின்றேன்;—

దీప్తమగ్నిమరణ్యంవా యదిరామఃప్రవేక్ష్యతి।
ప్రవిష్టంతత్రమాందేవిత్వంపూర్వమవధారయ॥

தீப்தமக்னிமரண்யம்வா யதிராமஃப்ரவேக்ஷ்யதி |
ப்ரவிஷ்டம்தத்ரமாம்தேவி த்வம்பூர்வமவதாரய ||

ஸ்ரீராமபிரான் எரிகின்றதீயில் விழுவராயினும், தண்டகாரணியம் புகுவராயினும், என்னையவர்க்கு முன்பே தீயில் வீழ்ந்தவனாகவும், அரணியம் புகுந்தவனாகவும் நீர் நம்புவீராக. இனி உம்முடைய துயரத்தைச் சூரியன் இருளை நீக்குவதுபோல அடியேன் நீக்கி, இன்பமுறச் செய்வேன்; என் திறமையை நீரும் கண்ணாரக்காண்பீராக, ஸ்ரீராமபிரானும் காண்பர், என்றிவ்வண்ணம் அருளிச்செய்தனர். இவ்வாறு அருளிச்செய்த இளையபெருமாளுடைய மொழியைக் கேட்டுக் கோஸலை தேவியார் ஸ்ரீராமபிரானை நோக்கி, அப்பா, என்னருமைச்செல்வமகனே! என் சக்களத்தியின் நீதியற்ற சொல்லைக்கேட்டுப் பெற்றதாயாகிய என்மொழியைக் கேளாமல், என்னை விட்டுக் கானகஞ்செல்வது நலமன்று; தம்பி லக்ஷ்மணன் மொழியைக் கேட்டுணர்ந்தாயன்றோ? இதன்மேல் உன் உள்ளத்துக்கு யாது நலமெனத் தோன்றுமோ அவ்வண்ணம் ஆராய்ந்து செய்வாய். நீ தரும முணர்ந்தவனன்றோ? தருமஞ்செய்யவேண்டு மென்பதே உன்னெண்ண மாயின், தாய்க்குத் தொண்டுசெய்வதே சிறந்த தருமமாதலால், நீ என்சொற்படி இங்கிருந்தே எனக்குப் பணிசெய்வாயாக. காசியப மஹாமுனிவர் இல்லறம் வழுவாமல், தம் திருமாளிகையிலிருந்தே தம் தாய்க்குத் தொழும்புசெய்து, அதனால் நற்பேறு பெற்றாரன்றோ? மஹாராஜர் பிதாவாதலால், அவர் சொல்லைத் தவறலாகாதென்பது உனக்குக் கருத்தாகில், நான் மாதாவாதலால், என் சொல்லையும் தவறலாகாதன்றோ? நானுனக்கு வனம்போகும்படி அனுமதி கொடுப்பதில்லை; நீ இவ்விடந்துறந்து

வனம் போகக் கூடாதென்று மறுக்கின்றேனுதலால், நீ இவ்விடத்தைத் துறந்து போகக்கூடாது. உன்னைப் பிரிந்த பின் இன்புற்று உயிர் பிழைப்பதினால், எனக்குச்சிறிதும் பயனில்லை; உன்னுடன் கூடிப்புல்லைத்தின்று பிழைத்தாலும் எனக்குத் துன்பமில்லை; என்னை விட்டு நீ வனம்புகுவாயாயின், நானிங்குப் பரமபதத்தைக்கருதி இறத்தலைநோக்கிக் கொண்டு, உயிர் மாய்வேனே அல்லாமல், உயிர் வைத்திரேன். அநந்தரம், பிப்பலாதமுனிவர் திறத்தில்செய்த அதர்மத்தினாலும், மாதாவின் பணி தவறிய அதர்மத்தாலும், சமுத்திரராஜன் பிரஹ்மஹத்திசெய்தவ னடையத்தக்க துன்பத்தையடைந்ததுபோல இந்த அதர்மத்தால் நீயும் உலகமெல்லாமறியத்தக்க துன்பத்தை யடைவாய்; என்றிவ்வண்ணம் புலம்பா நின்றனள். அங்ஙனம் புலம்புகின்ற தம் மாதாவை நோக்கி ஸ்ரீராமபிரான்தருமவழிகோணுமல் அருளிச்செய்கின்றார்.

தாயாரே! தந்தையார் ஏவுதலைக் கடந்து நடக்க எனக்குத் திறமையில்லை; நான் உம்மைத்தலைவணங்கி வேண்டிக்கொள்ளுகின்றேன்; நான் வனவாசம்போக எண்ணங்கொண்டிருக்கின்றேன்; கண்டுமஹாமுனிவர் தந்தையின் வாக்கியத்தின்படி பசுக்கொலை செய்தனர்; நம்பெரியோர்களாகிய சாகரர்கள் அறுபதினாயிரம் பேர்களும், பிதாவின் மொழியினாலே நிலத்தைத் தோண்டிப் பாதலஞ்சென்று, கபிலமஹாரிஷியால் மரணத்தையு மடைந்தனர்கள்; பரசுராமருந் தந்தை வாக்கியத்தின்படிக் கோடாலியால் தம்மை ஈன்றுளாகியரேணுகையை வெட்டிக் கொலைசெய்தனர். மற்றும் பல பெரியோர்கள் பிதாவின் வாக்கியத்தைப் பாதுகாப்பதற்காகப் பற்பல செயல்களைச் செய்திருக்கின்றார்கள். நானும் தந்தையின் சொற்படி நடப்பேனே அன்றி அதைச்சிறிதும் வழுவேன். நானொருவனே இப்பொழுது புதிதாக உமக்கு விரோதமாகத் தருமத்தைக்கற்பித்துரைசெய்யவில்லை, மேற்சொன்ன இவர்களெல்லோருஞ் செய்தே யிருக்கின்றார்கள். பெரியோர்கள் நடந்து தேய்ந்தவழியிலே நானுஞ் செல்லுவேனல்லது அதை வழுவிடவேன். பிதாவின் வாக்கியத்தின்படி நடப்பவன் எவனும் இந்நிலவுலகில் இகழ்வையடையான், புகழ்ச்சியையே அடைவானென்றிவ்வகையாக நீதியருளிச் செய்து, இளையபெருமாளையும் நோக்கி, லக்ஷ்மணா! உனக்கு என்மேலுள்ள பத்திமையையும், விசுவாசத்தையும், உன்தோளாண்மையையும், வலிமையையும், சௌரியத்தையும், நான்நன்கறிந்திருக்கின்றேன். என்தாயானவர் தருமத்தின்நுட்பத்தையறியாமல் மிகத் துன்பமடைகின்றார். யாவுமுணர்ந்த நீயும், அதற்கிணங்கி யுரைப்பது தகுமோ? உலகத்தில் தருமமன்றோ சிறந்தது? தருமத்திலன்றோ வாய்மை நிலைமைபெற்றிருக்கின்றது? நம் பிதாவின் வாக்கியம், தருமத்தைச் சார்ந்ததேயன்றித் தருமத்தைச்சாரா

ததன்று; தந்தைமொழியையாயினும், தாயின் மொழியையாயினும், அந்தணன்மொழியையாயினும், செய்வேனென முன்பு வஞ்சினஞ் செய்து, பின்பு செய்யாமல் தருமத்தையுணர்ந்த நான் தவறுவேனோ? நான் பிதாவினது வாக்கியத்தின் வரம்புகடந்து ஒருகாலும் நடவேன்; தந்தையின் சொற்படிக் கைகேயியார் எனக்குக் கட்டளைசெய்தனர். நானுமதனைச்செய்வேனென ஒப்புக்கொண்டேன். அம்மொழியை நான்பொய்ம்மையாகச் செய்யேன். வஞ்சகத்தை மேற்கொண்ட இத் தியஎண்ணத்தைவிட்டுக் கொடுமைநீங்கிச் சமம்பூண்டு தருமத்தை மேற் கொண்டு என்கருத்துக்கிணங்க நடப்பாயாகவென் றிவ்வண்ணம் அன்பு கூர்ந்தருளிச்செய்து, மீளவும் கோஸலையைநோக்கிக்கைகூப்பி வந்த னஞ்செய்து அருளிச்செய்கிறார்.

என்தாயரே! நான் வனஞ்செல்லுகின்றேன்; நீர் அருள் செய்து அனுமதி யளிக்கக்கடவீர். என் உயிரின்மேலாணையிட்டு வேண் டிக்கொள்ளுகின்றேன். இதற்குக் குறுக்குச்சொல்லாமல் வழியிலெ னக்கு நன்மையுண்டாகும்படி ஆசீர்வாதஞ்செய்தருள்வீர். நான்பதி னான்கு வருஷம் வனவாசஞ் செய்து என் பிரதிஜ்ஞையை முற்று வித்து சுவர்க்கத்தினின்றும் வீழ்ந்த, யயாதிப்புரவலன் மீண்டும் விண்ணுலகஞ்சேர்ந்து மகிழ்ந்ததுபோல, மீண்டு வந்திங்கு மகிழ்ச்சியு டன் உமக்குப் பணிசெய்து உம்மொழியையும், நிறைவேற்றுவேன். சோகத்தை யுள்ளடக்கிக்கொள்ளீர், துன்பமுறவேண்டாம்; பிதாவின் மொழியைப்பாதுகாத்து மறுபடி இங்குவருவேன். தாயீரே! நீரும், நானும், சீதையும், லக்ஷ்மணனும், சுமித்திரையுமாகிய எல்லோரும், தந்தையின் கட்டளைப்படியே நடக்கவேண்டும்; அவ்வாறு நடப்பதே அநாதியான சிறந்ததருமம். தாயரே! துன்பத்தையுள்ளடக்கிக் கொ ண்டு தந்தையின்சொற்படி நான்வனவாசம் போவதற்கு அனுமதி செய்யக்கடவீ ரென்றிவ்வண்ணம் தருமநெறிகோணுமல் ஒரேபிடி யாக வுரைசெய்தனர். கோஸலை அதுகேட்டு மைந்தனைப்பிரியும் பிரி வைச்சகிக்கமாட்டாமல், உடனே மூர்ச்சையடைந்து சிறிதுபொழுது கழித்து மூர்ச்சை தெளிந்தெழுந்து, ஸ்ரீராமனை நோக்கி, குழந்தாய், என்னரும்புதல்வனே! உனக்குத் தந்தைபோலத் தாயாகிய நானுங் குருவன்றோ? நான் உன்னை அன்பினால் வளர்த்தமையினாலும், தேக சம்பந்தத்தினாலும், நீ வனம்புகநான் விடைகொடுப்பதில்லை; துன்பம டைந்த என்னைவிட்டு நீ போவது தகுதியற்றது; உன்னைப் பிரிந்தபின் எனக்குப் பிழைத்திருப்பதினாலென்னபயன்? பிதிருலக மடைவதினா லாகிலும், தேவருலகமடைவதினாலாகிலும், என்ன பயன்? உன்திருமு கத்துக்கெதிரில் முகூர்த்தகாலம் வாழ்ந்திருந்தாலும், அதுவேஎல்லா இன்பங்களிலுஞ் சிறந்ததாகும் என்றிவ்வண்ணஞ் சோகத்தோடு உரை செய்தனள். ஸ்ரீராமசந்திரர் அவ்வுரையைத் திருச்செவிசார்த்தியும்,

மனிதர் பலர்கூடிக் கொள்ளிக்கட்டைகளைக் கையிலெடுத்துக்கொண்டு, காட்டில் தன்வழிபற்றிச் செல்லுகின்ற மதயானையைத் தடைசெய்யி னும், அது மீளாமல் தன்வழியே செல்லுவதுபோலத் தன் மனநிலை குன்றாமல் வனஞ்செல்லவே துணிவுகொண்டு, சோகங்கொண்ட தம் திருத்தாயையும், தம்பியையும் நோக்கித் தனித்தனி இன்சொல்கூறித் தேற்றுபவராயினர். இலக்ஷ்மணா! என்மீது உனக்குள்ள பத்தியை யும், வலிமையையும், நான் நன்கறிவே னாயினும், என் கருத்தினை நீ யுணராமல் என்மாதாவுடன்கூடி என்னைத் துன்பமுறச்செயலாகு மோ? இவ்வுலகினில் தருமம் அடியாகவுள்ள நற்பயன்களுக்குக் காரண மாக அறம் பொருளின்பங்களன்றோ காணப்பட்டன? அவற்றுள்ளும், அறமின்றிப் பொருளின்பங்கள்மட்டும் பயன்படா; தருமமொன்றே முதற்காரணமாகும் மனத்துக்கினியாளும், கட்டழகியும், நன்மக்களைப் பெற்றவளுமாகிய மனையாளொருத்தியே முறையே அறம்பொரு ளின் பங்களென்னும் மூன்றுபேறுகளையும் தருகின்றனளன்றோ? அல்லா விடினும் எந்த தருமத்தால் அர்த்தகாம மோக்ஷங்கள் சித்தியாகா விடினும் தருமமேனும் வளருமோ, அத்தன்மையதாகிய அறத் தைச்செய்ய முயற்சி செய்யவேண்டும்; தருமத்துக்கிசையாத பொரு ளின்பங்களை ஒருகாலும் செய்யலாகாது; பொருளின்பங்களை மாத்தி ரம் தேடுவோர் யாவர்க்கும் பகைஞராகின்றனர்களல்லரோ?

గురుశ్చరాజాచపితాచవృద్ధః క్రోధాత్ప్రహర్షాద్యదివాపికామాత్।
యద్వ్యాదిశేత్కార్యమవేక్ష్యధర్మం కస్తన్నకుర్యాదనృశంసవృత్తిః॥

குருச்சராஜாசபிதாசவ்ருத்த: க்ரோதாத்ப்ரஹர்ஷாத்யதிவாபிகாமாத்।
யத்வ்யாதிசேத்கார்யமவேக்ஷ்யதர்மம் கஸ்தன்னகுர்யாதந்ருசம்ஸவ்ருத்தி:॥

'ஆசாரியனும், புரவலனும், தந்தையும், மூப்பினருமாகிய ஒருவர் சிற்றத்தினாலாயினும், பெருமகிழ்வினாலாயினும், காமத்தினாலாயினும், வாய்மை தவறாமையாதியாகிய அறத்தைக் காக்கும்பொருட்டு யா தேனுமொரு காரியத்தைச் செய்யக்கடவையெனத் தம் புத்திரனை நோக்கி ஏவுவாராயின், தீச் செயல் புரிபவனல்லாத எவன்தான் அக் காரியத்தை யாவனுடன் செய்து, தந்தையைப் பாதகத்திலழுந்தாமல் பாதுகாவான்? ஆதலின் அடா, என்னருமைத் தம்பி! நான் நம் தந்தை யாருடைய கட்டளையை முறையேசெய்து முடிக்காமல் தவறவிடேன். புரவலர் பெருமான் நம்மிருவருக்குங் குரு; என் தாய்க்கும் பர்த்தா? ஆதலின் நம்மூவருள் ஒருவரும் அவர் கட்டளைக்குக் கேடு நினைப்பது தகுதியன்று; அவரே நமக்கு தருமம்; அன்றியும் வாய்மையாளரும், அறநெறி யொழுகுபவரும், மன்னர் மன்னருமாகிய மஹாராஜர் உய்ந்திருக்கையில், என் தாய், கணவனில்லாத கைம்பெண்வேறு தஞ்சமின்றி மகன் போகுமிடமே போவதுபோல, அரசர் பிரானை

விட்டு, என்பின் வனம் வ்ருவேனென்பதும் தகுதியாமோ? என்தாயே! எனக்கு வனம் செல்ல விடைகொடுத்து, ஆசீர்வாதஞ்செய் தனுப்புவீராக; வாய்மையினல் யயாதி மீளவும் பொன்னுலக மடைந்தாற்போல யானும் மீண்டு வருவேன்.—

యశోహ్యహంకేవలరాజ్యకారణాత్ నపృష్ఠతఃకర్తుమలంమహోదయం।
అదీర్ఘకాలేనతుదేవిజీవితే వృణేవరామద్యమహీమధర్మతః॥

யசோஹ்யஹம்கேவலராஜ்யகாரணத் நப்ருஷ்டதஃகர்த்துமலம்மஹோதயம் |
அதீர்க்ககாலேநதுதேவிஜீவிதே வ்ருணேவராமத்யமஹீமதர்மதஃ ||

யாக்கையென்பது அழியுந் தன்மையுடையதேயன்றி, நெடுநாள் நிலைபெற்று வாழ்வதன்று; அதன்மேற்கொண்ட விருப்பினல் இழிவாகிய இவ்வரசுச் செல்வத்தின் பொருட்டு, உடலழிந்தும், உலகமுள்ளவரையும் அழிவற்று நிலைபெற்று மேன்மைபயக்கும் புகழினைப் பின்புறத்து நிற்கச்செய்து நில்லேன்; ஆதலின் தருமவழிசென்று, புகழினைப் பெறுவேனேயல்லது, தருமத்தைத்தவறி அற்பமாகிய இந்தப் பூமியையாள நான் விருப்பமுறேன்; என்றிவ்வண்ணம் தாய்க்கும் தம்பிக்கும் நீதிமொழி யருளிச்செய்து மனந்தேற்றி, பேராற்றலுடைமையால் தண்டகாவனம் புகுவதிலே துணிவுகொண்டு, தம் திருத்தாயைத் தம்மிதயத்துள் வலம்செய்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

சக்கரவர்த்தித் திருமகனர் இளையபெருமாளைத் தேற்றியது.



அநந்தரம் இளையபெருமாள் திருத்தமையனரருளிச்செய்த நீதிமொழிகளைக் கேட்டுணர்ந்தனராயினும், அவர்மீதுள்ள பத்தியின் மிகுதியினல், அவருக்குக் கடுந்துயரம் வாய்த்ததேயெனச் சோகமும், கைகேயி இவ்வண்ணஞ் செய்தனளேயெனக் கடுஞ்சினமுங்கொண்டு, கண்கள் சிவந்து, கட்டுண்ட மதயானை போலப் பெருமூச்செறிந்து நின்றனர். சக்கரவர்த்தித் திருமகனர், அவரைக் கடாக்ஷித்துத் தம்மீதுள்ள அன்பினல்,இவ்வண்ண மிருக்கின்ருனெனத் திருவுளத்துணர்ந்து, ஊக்கத்தையும், தோள்வலியையும் மேற்கொண்டு, அடா தம்பி! இதென்ன, அறிவிலர்போல வருந்துகின்றனை? சினத்தையுஞ் சோகத்தையும் உள்ளடக்கித் தீரமொன்றையே மேற்கொண்டு, என்னபிஷேகத் துக்குத் தடைநேர்ந்ததுமன்றி, வனவாசமும் போகும்படி

நேரிட்ட இவ்வவமானத்தைச் சிறிதும் பாராட்டாமல், மிக்கமகிழ்ச்சி கொண்டவனாகி, என்னபிஷேகத்துக்காகச் சேர்த்த பண்டங்களையெல்லாமெடுத்துதறிவிட்டு, அபாயமிலாச் செய்கைகளைச் செய்யக்கடவை. அடா, லக்ஷ்மணா! சுமித்திரைபெற்ற நற்காதலனே! என் அபிஷேகத்திற்குவேண்டிய பண்டங்களை மனமகிழ்ச்சியோடு சேர்த்ததுபோல நான் காடுறையப் போவதற்குரிய கருவிகளையும், உள்ளமகிழ்வோடு சேர்க்கக்கடவை. எனக்கு அபிஷேகம் ஆகவில்லையேயென மனம் நெகிழ்கின்ற என் அன்னையார் வருந்தாதவண்ணம், நீ துன்பங்கொள்ளாமல் மகிழ்வுடனிருந்து, அவரை மனந்தேறும்படி செய்யக்கடவை. நான் வனத்திற்குப் புறப்படாதிருக்குமளவும், ஒருகால் எனக்கு அபிஷேகமாகிவிடுமோவென்று கைகேயியார் தவித்துநிற்பார். அவரும் அவ்வண்ணஞ் சங்கையுறாதபடி முயலக்கடவை. நான் இதுகாறும் பிதாவினிடத்திலாவது, மாதாக்களிடத்திலாவது, அறிந்தாயினும், அறியாமலாயினும், ஏதேனும் அபராதஞ்செய்ததாக எனக்குச் சிறிதுந் தோற்றவில்லை. பொய்ம்மொழி யுரையாதவரும், சொல்லியசொல் தவறாதவரும், சிறந்த பராக்கிரமமுடையவருமாகிய தமப்பனாரும் கைகேயிக்கு வரங்கொடுத்தபடி யான் செய்யாவிடின் நரகம் நேரிடுமேயென அஞ்சுகின்ற அந்த அச்சந்தீர்ந்து மனமகிழக்கடவர். நான் அவர் வரமளித்தபடி அபிஷேகங்கொள்வதை நிறுத்தி வனவாசம் போகாவிடின், வாய்மை வழுவிப் போயினோமேயென என் தந்தையார் மனந் தவிப்பாரல்லது உகந்தருளார். அவர்மனம் வருந்தினால், என் மனமும் மிக வருத்தமுறுமேயல்லது சிறிதும் மகிழ்வுறாது. லக்ஷ்மணா! ஆதலால், அபிஷேகங்கொள்ளும் முயற்சியைத் தவிர்த்து, இப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டு வனம்புக விரும்புகின்றேன்; என்னை வனத்துக்குச்செல்ல விடுத்துக் கேகயராஜன்மகள்மனமகிழ்வுகொண்டு, பரதனை யழைப்பித்து அபிஷேகஞ் செய்விப்பார். நான் மரவுரியுடுத்துச் சடைதிரித்துக்கொண்டு தவசியாகிக் கானகஞ்சென்றாலல்லது கைகேயியார் மனமகிழ்வுறார். நான் வனவாஸம் போகவேண்டுமென்று யார் போதனை செய்தார்களோ, அதைக்கேட்ட யார்க்கு அவ்வண்ணமொக்குமெனத் தோன்றியதோ, அவர்களையும், சத்தியத்திற் கட்டுண்ட சக்கரவர்த்தியாரையும் வருத்தமுறச்செய்ய என் மனந் துணிவுகொள்ளவில்லை, எனக்கும் இவ்விஷயத்தில் சிறிதும் துன்பம் தோற்றவில்லை. ஆதலின், இனிக் காலநீட்டியாமல், நானிப்பொழுதே புறப்பட்டு வனஞ் செல்வேன். தம்பி! நான் கானுறையப் போவதற்கு விதியே காரணமன்றி, வேறுகாரணமில்லை; அங்ஙனமல்லாவிடின், என்பால் மிக்க அன்புள்ள கைகேயியார்க்கு என்னைக் காடு செல்லவிட வேண்டுமென எண்ணமுண்டாவதற்குக் காரணம் யாது? லக்ஷ்மணா! பெற்றதாயாரிடத்துப்போலவே மற்றத்தாயார்களிடத்தும் நான் வேற்றுமையின்றிக்

குற்றேவல் செய்துவந்தே னென்பதையும், கைகேயியாரும் பரதனிடத்துப்போலவே என்னிடத்திலும் மிக அன்புள்ளவரா யிருந்தனரென்பதையும், நீ நன்கறிந் திருக்கின்றனையன்றோ ? அத்தன்மையராகிய கேகயன் திருமகளார் என்னபிஷேகத்தை ஏன் தடைசெய்யவேண்டும்? நான் காடுறைதல் வேண்டுமென எண்ணங்கொண்டு, உரைக்கத்தகாத வன்மொழிகளை யுரைத்தாரென்பதற்கு விதியேயன்றி வேறொன்றுங் காரணமாகாதெதன நான் நம்புகின்றேன். அங்ஙனமல்லாவிடின், நற்குண நற்செய்கையுடைய கேகயராஜன் மகளும், தன் பர்த்தாமுன்பாக இவ்வண்ணம் கொடுமொழிகளை நாணமற்று மொழிவரோ ? யாவராலுந் தடுக்கவொண்ணாத விதியே என்மீதும், கைகேயியார்மீதும், வீழ்ந்ததென்பதில் சந்தேஹமேயில்லை. சுமித்திராதேவி குமாரா ! கட்புலனாகாமல் அதன்விளைவினாலேயே கண்டறியப்படுகின்ற விதியை எதிர்த்து அதனோடு போர்செய்யவல்லவன் யாவனுளன் ? இன்பந்தருவதும், துன்பந்தருவதும், அச்சமுறுத்துவதும், சினமுறச் செய்வதும், பயன் பெறுவிப்பதும், பயனை இழப்பிப்பதும், படைப்பதும், துடைப்பதுமாகிய இவையெல்லாந் தெய்வச்செயல்களேயன்றோ? ஐம்புலன்களையும்வென்று கடுந்தவஞ்செய்கின்ற முனிவர்களும், தெய்வத்தால் பிடிக்கப்பட்டவர்களாகிக் காமமுஞ் சினமுங்கொண்டு, விடுதலரிய நியமங்களைத் தவிர்ந்துத் தவந்துறந்து நிலைகுலைந்தனர்களன்றோ? ஒருவன் ஒருகாரியத்தைசெய்து முடிக்கத் தொடங்குகையில், யாரும் விரோதமான எண்ணங்கொள்ளா திருக்கையிலே அதற்குத் தற்செயலாய்த் தடைநேர்ந்து, மாறாததுன்பமோ இன்பமோ விளைகின்றதே அது தெய்வத்தின் செயலே யன்றி, வேறாகுமோ இவை அனைத்தையும் கூறியினால் உண்மையாக ஆராயுங்கால் எனக்கு அபிஷேகம் நின்று விட்டதேயெனச் சிறிதும் துன்பமுண்டாகவில்லை. நீயும் சிறிதும் மனம் வருந்தாமல் என் கருத்துக்கிசைந்து, என்னபிஷேகத்தின் முயற்சியை விட்டுவிடக்கடவை. அடா, லக்ஷ்மணா ! அபிஷேகத்தின்பொருட்டுச் சித்தஞ்செய்யப்பட்ட இந்தப் பூர்ணகும்பங்களே நான் தவசியாக விரதஸ்நாநஞ்செய்வதற்குப் பயன்படக்கடவன. அதுதானெனக்கேன் ? இவை அரசன் உடைமைப்பொருள்களெனப் படுதலால், இவற்றால் நான் விரதஸ்நாநஞ்செய்வ துசிதமன்று. வனத்திற்சென்று நானே என் கையினால் கொண்டுவரும் தீர்த்தமே விரதஸ்நாநத்துக் குபயோகமாகக்கடவது. தம்பி, லக்ஷ்மணா ! அரசுச் செல்வம்போயிற்றேயென நீ சிறிதும் துன்பமுறல்வேண்டாம்; இராச்சியமேயாயினென்ன ? வனமேயாயினென்ன ? ஆராயுங்கால், அரசுச்செல்வத்திலும் காடுறைதலே சிறந்தது. செங்கோல் வழுவாமல், உலகத்தாரெல்லோர்க்கும் இனியனாகி அரசுசெய்து எல்லோரையும் மகிழ்விப்பதென்பது மிகுதியும் வருத்த மாகியதன்றோ? வனத்துக்குச்சென்றால், ஒருசிந்தையு மின்றிப்பற்

பல விநோதங்களைப் பார்த்துக்கொண்டு, சிறந்த தவங்களையும், விக்கினமின்றிச் செய்துகொண்டு மகிழ்வுறலாகுமன்றோ? இதனை உணர்ந்து நீ உள்ளங்களிப்படைக.

న లక్ష్మణాస్మిన్ ఖలు కర్మవిఘ్నే మాతా యవీయస్యతిశంకనీయా।
దైవాభిపన్నా హి వదత్యనిష్టం జానాసి దైవం చ తథా ప్రభావం॥

நலக்ஷ்மணாஸ்மின்கலுகர்மவிக்னே மாதாயவீயஸ்யதிசங்கனீயா |
தைவாபிபன்னாஹிவதத்யநிஷ்டம் ஜாநாஸிதைவஞ்சததாப்ரபாவம் ||

தம்பி, இல்ட்சுமணா! நம்மிளையதாயார் அபிஷேகத்தைத் தடைசெய்தனரெனச் சிறிதும் அவர்மீது சினங்கொள்ளற்க; தெய்வத்தினாலேவப்பட்டவராகி, அவர் அநிஷ்டமுரைத்தனரேயன்றி வேறில்லை; தைவம் அத்தன்மையதாகிய மகிமையுடையதென நீ யறியாயோ? இனியாயினும், நீ கோபசோகங்களை நீக்கி, மனமகிழ்வுறக் கடவையென் றிவ்வண்ணம் நீதிகூறி மனந்தேற்றி யருளினார்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துமூன்றாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரானை வனம்போகவேண்டாமென இளையபெருமாள் மறுத்தது.

இவ்வண்ணஞ் சக்கரவர்த்தித்திருமகனா ரருளிச்செய்தலும், அதிலுடன்பாடின்மையால் இளையபெருமாள் தலைகுனிந்தவண்ணமே அதனைக்கேட்டு; திருத்தமையனார் யார்சொல்லியுங் கேளாமல் தருமத்தையே கடைப்பிடித்தனரென மகிழ்ச்சியையும், ராஜ்ஜியம் பாதுகாக்கவல்ல இவர்க்குக் காடு புகும்படியான காலம் நேரிட்டதேயெனக் கடுந்துன்பத்தையு மடைந்தவராகித் திருவபிஷேகத்தைத் தடைசெய்தவர்மீது சினம் பெருகப்பெருகப் புருவங்களை நெரித்துப் பெட்டியிலடைத்துக் கோல்கொண்டு தூண்டிய நச்சரவம்போலப் பெருமூச்செறிந்து, சினங்கொண்ட சிங்கம்போலப் பார்ப்பவர்கள் அச்சங்கொள்ளத்தக்க முகமுடையவராய், மதயானையின் துதிக்கைபோன்ற தம் திருக்கரத்தின் நுனியை யுதறிக்கொண்டு, கழுத்தைத் தோண்மேலெடுத்துக் கடைக்கண்ணினால் தமையனை நோக்கி, என்னய்யனே! தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்யாது விட்டாரென உலகத்தார் பழிப்பார்களென்று நினைத்துத் தேவரீர் வனவாஸஞ்செல்ல முயற்சி செய்வது சிறிதும் தகுதியற்றது; இவ்விஷயத்தில் தேவரீர் மயக்கங்கொண்டிருக்கின்றீரோ? தேவரீரைப்போன்ற மஹாசூரர்கள், தேவரீர் அருளிச்செய்தவண்ண முரைசெய்வார்களா? சௌரியமுள்ளவர்களி

டத்துத் தெய்வமென்பது தாழ்ந்ததேயன்றி, வீரமுடையதாகாதன்ரோ? நம் விஷயத்தில் திறமையற்று ஒடுங்கிக்கிடக்கின்ற தெய்வத்தைத் தேவரீர் எடுத்துப் புகழ்வது புதுமையானது! தாய் தந்தையர்களது சொல்லைத் தவறுவது குற்றமென நினைக்கின்றீரே; அது தவருகாது. அவர்கள் சாதுக்களாகித் தருமமாக வாஜ்ஞைசெய்தால், அதைச் செய்யாவிடின் பாவமணுகுமேயன்றி, அவர்கள் வஞ்சங்கொண்டு முறையல்லாதன வுரைசெயில், அதனைச் செய்யாதொழியின் பாவமணுகுமோ? அவ்விருவர்களும் தீயோர்களென்று தேவருக்கேன் சங்கைதோற்றவில்லை? இவ்வுலகில் அகத்திற் கசடுகொண்டு புறத்தில் தருமமுள்ளவர்கள்போல நடிப்பவர்களும் பலருளரெனத் தேவர் அறிந்திலீர்போலும். அவ்விருவரும் கசடற்றவர்களாயின், தேவரீருடைய திருவபிஷேகத்தை ஏன் தடுக்கின்றனர்கள்? அன்றியும், அரசர் கைகேயிக்கு முன்பு வரங்கொடுத்திருந்தாரென்பதும் பொய், அஃது உண்மையாயின், அவள் முன்னமேவரத்தைப் பெற்றுக்கொண்டிராளோ? இவரும் அப்பொழுதே அதனை நிறைவேற்றியிராரோ? ஆதலின், அது பசும்பொய்; இவர்க்குக் கைகேயிமீதுள்ள காதலினுல், அவள் சொற்படி தேவரீரைக் காட்டிலோட்டக் கருதி, உலகத்தார் முன் தம்பழியைக் கழித்துக்கொள்வதற்காக, இருவருங்கூடி இவ்வண்ணம் ஆலோசனை செய்துகொண்டனர்களெனவே நம்பவேண்டும். மூத்த திருக்குமாரராகிய தேவரீர் எழுந்தருளியிருக்கையில், தேவரீரைவிட்டு மற்றொருவனுக்கு முடிசூட்ட முயற்சிசெய்தது, உலகநீதிக்கு விரோதமாகியதன்ரோ? என்னய்யனே! தேவரீரைவிட்டு மற்றொருவன் முடிசூட்டிக்கொள்வதைக் கண்ணுற்று, அடியேன் சிறிதுபொழுதும் பொறுத்திரேன்; இவ்விஷயத்தில் அடியேன் செய்யும் பிழையைத் தேவரீர் பொறுத்தருளல்வேண்டும். எவ்விதத்திலும் தந்தையின்மொழியைப் பாதுகாப்பதே தருமமென்கிற திருவுள்ளத்தினுல், வனம்புகுவேனல்லது திருமுடி பொறுக்கேனென மருள்கொண்டருளிச்செய்கின்றீர்; அது தருமமாயினும், எனக்குப் பகையேயன்றிச் செய்யத்தக்க தாகாது. கருதியவாறு செய்து முடித்துக்கொள்ளுந் திறமையுடையவரன்ரோ தேவரீர்! அங்ஙனமிருக்க, பெண்ணறிவுக்கு வசப்பட்டு மயங்கிய தந்தையின் நீதியற்ற வாக்கியுத்தைச் செய்ய ஏன் முயலுகின்றீர்? தாய் தந்தைகள் பரதனுக்கு அபிஷேகஞ் செய்விப்பதன்பொருட்டே கபடஞ்செய்து நம்மைக் காட்டுக்குச் செல்லவிட இங்ஙனம் நினைத்தார்களெனத் தேவரீர் நன்குணராவிடினும், என்னய்யன் தருமமல்லாததைத் தருமமென மருள்கொண்டு, கடுந்துன்பத்தை யுறுகின்ருரே யென்னுந் துன்பம் எனக்கு ஒருபொழுதும் நீங்காது. அவ்வண்ணந் தேவரீர் செய்வதும் இகழத்தக்கதேயன்றித் தருமமாகாது. காமாதுரர்களாயும், நமக்குத் தாய் தந்தையரென்னும் பெயர்பெற்ற பகை

ஞர்களுமாகிய அவ்விருவர்களுடைய எண்ணத்தைத் தேரீவர் எவ்வண்ணஞ்செய்ய முயல்கின்றீர்? இவ்வண்ணம் நேர்ந்தது, தெய்வத்தின் செயலேயன்றித் தாய் தந்தைகளின் செயலன்றெனத் தேவரீருக்கு நம்புதலிருப்பினும், அதுசெய்யத்தக்கதாக அடியேனுக்குச்சிறிதும் தோற்றவில்லை; அஃது தேவரால் நீக்கத்தக்கதேயாகும்.

విక్లబోవీర్యహీనోయ స్సదైవమనువర్తతే।
వీరాస్సంభావితాత్మానో నదైవంపర్యుపాసతే॥
దైవంపురుషకారేణ యస్సమర్థఃప్రబాధితుం।
నదైవేనవిపన్నార్థః పురుషస్సోవసీదతి॥

விக்லபோவீர்யஹீநோயஸ் ஸதைவமனுவர்த்ததே ।
வீராஸ்ஸம்பாவிதாத்மாநோ நதைவம்பர்யுபாஸதே ॥
தைவம்புருஷகாரேண யஸ்ஸமர்த்தஃப்ரபாதிதும் ।
நதைவேநவிபன்னார்த்தஃ புருஷஸ்ஸோவஸீததி ॥

யாவனொருவன் அச்சமுற்றவனும், திறமையற்றவனுமா யிருப்பானோ, அவனே விதிவிதியென்று விதியை யனுசரிப்பான்; யாவர் ஊக்கமுற்றுப் பயமற்றவரும், திறமையுற்றவருமா யிருப்பார்களோ, அவர்கள் விதியென்பதைச் சிறிதும் மதிக்கமாட்டார்கள்; தம் திறமையினால் விதியைத் தடுக்கவல்லவர், ஒருகாலுந் தெய்வத்தால் கெடுதியடைந்து வருந்தார்கள். ஊழின் திறமையையும், ஆண்மையின் திறமையையும், ஜனங்கள் இப்பொழுதே காணப்போகின்றார்கள். ஊழின்வலி, ஆண்மகன்வலி இவற்றின் ஏற்றத்தாழ்ச்சி இப்பொழுது வெளிப்பட விளங்கப்போகின்றன. மதமேறித் தடையின்றிக் கொழுத்துத் திரிகின்ற களிறுபோன்ற தெய்வமன்றோ, தேவரீருடைய ராஜ்ஜியாபிஷேகத்தைத் தடைசெய்ததென வருளிச்செய்தீர்? அத்தெய்வத்தை யான் ஆண்மையினால் தடுத்தோட்டி விடுகின்றேன், கடாக்ஷித் தருள்வீராக. அஷ்டதிக்குப்பாலர்களும், மற்றும் மூவுலகிலுமுள்ள சூரர்களுங்கூடி எதிர்த்து, தேவரீருடைய திருவபிஷேகத்தைத் தடைசெய்ய முயற்சிசெய்யினும், தடுக்க வல்லவராகார்கள். அங்ஙனமிருக்க, நம்பிதாவொருவன் தடுக்க வல்லவனாவானோ? யாவர்கள் கூடித் துராலோசனைசெய்து தேவரீரை அரண்ணியததிற் கெழுந்தருளிப் பதினான்குவருஷம் வாஸஞ்செய்ய வேண்டுமென்றார்களோ, அவர்களே பதினான்குவருஷம் அரணியஞ்சென்று வாஸஞ்செய்யக்கடவர்கள். கைகேயிக்கும், மஹாராஜனுக்கும், தேவரீரைக் காட்டிலோட்டிப் பரதனுக்குப் பட்டங்கட்ட வேண்டு மென்பதன்றோ எண்ணம்? அவ்வெண்ணத்தை யான்கெடுத்து விடுகின்றேன். தெய்வமும் என் ஆண்மைக்கஞ்சி நடக்குமாதலால், என் ஆண்மையோடு பகைத்தவர்களுக்கு ஊழின்வலி ஒருகாலு முண்டாகாது. எனது கொடிய ஆண்மை எவ்வண்ணந் துன்பந்தருமோ, அவ்

வண்ணம் இன்பந்தருவதற்குத் தெய்வமும் திறமையுள்ள தாகாது. தேவரீர் அரணியத்திற் கெழுந்தருளுவது இப்பொழுதன்று; அநேக மாயிரம் வருஷங்கள் தேவரீர் லோகபரிபாலனஞ் செய்யவேண்டும், அதன் பின்னர் தேவரீருடைய திருக்குமாரர்கள் இவ்வுலகத்தை யாளக் கடவர்கள், அப்பொழுது திருக்குமாரர்களிடத்தில் இவ்விராஜியத்தை நிலைக்கச்செய்து, முன்னோர்கள் நடந்தவாறு தேவரீரும் வனவாசத்துக் கெழுந்தருளக்கடவீர். நம்தந்தை உறுதியற்ற மனமுடையராதலால், இப்பொழுதுநாம் அபிஷேகங்கொண்டோமாயின் பின்பொருகால்மாறு தல் நேரிடின் பெருநகைப்புக் கிடமாகுமெனக் கருதி இவ்வபிஷேகங் கொள்ள விருப்பமில்லை யென்பீரோ? அப்படியாயின், அங்ஙனம் ஐயங் கொள்ளற்க; கடலைக் கரைகாப்பதுபோல் அடியேன் தேவரீருடைய ராஜியத்தைப் புரளவிடாமல் காத்தளிப்பேன். இவ்வண்ணம் வஞ்சி னஞ்செய்து கொடுக்கின்றேன். இவ்வஞ்சினத்தைத் தவறினேனாயின், வீரலோகம் பெறாமல் நரகில்விழக்கடவேன். ஆதலின் மங்களகரமான திரவியங்களைக்கொண்டு இன்றே அபிஷேகஞ் செய்துகொள்ளக்கட வீர்; ராஜியபரிபாலனத்தில் தேவரீர் ஊக்கமுடையீராகக் கடவீர். அடி யேனொருவனே இதற்கெதிர்த்துவரும் வேந்தர்களைத் தடுத்தடித்து மடித்துத் துரத்திவிட வல்லேன்.

నశోభార్థావిమౌబాహూ నధనుర్భూషణాయమే।
నాసిరాబన్ధనార్థాయ నశరాస్తంభహేతవః॥
అమిత్రమర్దనార్థమ్మే సర్వమేతచ్చతుష్టయం॥

நசோபார்த்தாவிமௌபாஹூ நதனுர்ப்பூஷணாயமே ।
நாஸிராபந்தநார்த்தாய நஸராஸ்தம்பஹேதவஃ ॥
அமித்ரமர்தனார்த்தம்மே ஸர்வமேதச்சதுஷ்டயம் ॥

எனது இவ்விரண்டு தோள்களும், அழகுக்காக அமைக்கப்பட்ட வையல்ல; இக்கோதண்டமும் அலங்காரஞ் செய்வதன்பொருட்டன் று; வாளும் அழகுக்குக்கட்டிக்கொள்ளும் பொருட்டன்று; இக்கணை களும் ஊன்றிநடப்பதின் பொருட்டல்ல; இந்நான்கும் பகைவர்களைக் கொல்வதன் பொருட்டன்றோ எனக்கு அமைந்திருக்கின்றன! சாணை பிடித்துக் கூர்மையாகிய இவ்வாளைக்கையிற்பிடித்து யான் போர்முகத் திற் செல்லுகையில் தேவேந்திரனே எதிர்த்துவரினும், அவனையும் மதிக் காமல்வென்று வெற்றிக்கொள்வேனே யல்லது பொறுத்திரேன். என் கூரியவாளினால் வெட்டுண்டு சிதறிக் கிடக்கின்ற நால்வகைப்படை களின் உடல்களி னுறுப்புகளினால் நிறைந்து நடப்பதற்கு மிடமின்றிப் பூமிமுழுமையும் இப்பொழுது பயங்கரமாகப்போகின்றது பாரும், என் வாளின்முனையினால் வெட்டுண்டு வாள் எலும்புகளில் தாக்குகையில் தீக்கணங்களினால் ஒளியுள்ளனவா யெரிகின்ற குன்றுகள்போலவும்,

மின்னுடன்கூடிய காளமேகங்கள்போலவும் பகைஞர்களது களிறுகள் தரையில் வீழப்போகின்றன. யான் உடும்புத்தோலினால் கைவிரலை மறைத்துக்கட்டிக் கோதண்டத்தைக் கையிலேந்திப் போர்முகத்தில் நிற்கையில், யாவனென்னை யெதிர்த்து ஆண்மைகாட்ட வல்லவன்! பல கணைகள் தொடுத்தொரு சூரனையும், ஒரேபாணந்தொடுத்துப் பல வீரர்களையும், கொல்லுமாறு, தேர்யானை குதிரைகாளால்களின் நுட்பஉறுப்புகளில் சரங்களைத் தொடுத்தெய்வேன். இப்பொழுதுதான் எனது அஸ்திரப்பயிற்சித் திறமையின் பிரதாபம், தந்தையினரசாளுகையைக் கெடுப்பதற்காகவும், தேவரீருக்கதனை நிலைக்கச்செய்வ தற்காகவும், வெளிப்பட விளங்கப்போகின்றது. நற்சாந்த மப்புவதற்கும், தோள்வளைகளணிவதற்கும், இரவலர்களுக்குப் பொருள்களை யீவதற்கும், அன்பர்களைப்பாதுகாப்பதற்கும் தகுந்தனவான அடியேனுடைய இவ்விரண்டுகரங்களும் இப்பொழுது தேவரீருடைய திருவபிஷேகத்தைத் தடைசெய்பவர்களைத் தடுக்கும் விஷயத்தில் தேவரீருக்குக் குற்றேவல்செய்யக்கடவன. அடியவர்களுக்கு மெய்யராகிய என்னய்யனே! தேவரீருக்கு விரோதிகள் எவரேயாயினும், அவர்களது உயிரையும் இப்பொழுதே மாய்த்துக் கீர்த்தியையும் கெடுத்து உறவினறையும் வேரறுத்து அவமானஞ் செய்யக்கடவேன்; இந்த ஏவலைத் தேவரீர் அடியேனுக்கருளிச்செய்யக் கடவீர். இந்த வியனுலகமுழுதும் தேவரீருக்கு வயப்பட்டு நிலைத்திருக்கு மாறுசெய்யும்படி அடியேனுக்குக் கட்டளைசெய்தருளக்கடவீர். அடியேன் தேவரீருக்குக் குற்றேவலாளனன்றோ! என்றிவ்வண்ணம் சினத்தோடும், சோகத்தோடும், விண்ணப்பஞ்செய்தனர். சக்கரவர்த்தித்திருமகனார் அவ்விண்ணப்பத்தைத் திருவுளத்திற்கொண்டனராயினும், சிறிதும் மனந்தளராமல் இளையபெருமாளைக் கடாக்ஷித்துத்தம் திருக்கரத்தால் அவரதுகண்ணீரைத் துடைத்து நன்மொழிகூறித் தேற்றி,அடா, என்னருமையிளைஞனே! நீ எங்ஙனமுரைசெயினும், என்மனம் வேறுபடாது; நான் பிதாவின் மொழியைப் பரிபாலனஞ் செய்வதிலேயே உறுதியுள்ளவனென நம்பக்கடவை;இதுவே நல்லவழியாகுமல்லது நீ யுரைப்பது சிறிதும் நல்லவழியாகாது. இனி நீ என்னை மறுப்பதை யொழிந்து என்கருத்துக்கிசைந்து நடந்துகொள்ளக் கடவையென முடிவு அருளிச்செய்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்துநான்காவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் தான்வனம்போகத் தாயைச் சம்மதிக்கச்செய்தது.

ஸ்ரீசக்கரவர்த்தித் திருமகனார் இவ்வண்ணம் யாவர்சொல்லியும் கேளாமல் பித்ருவாக்கிய பரிபாலனத்திலேயே உறுதிகொண்டிருப்ப

தைக் கோஸலராஜன் திருமகள் நன்குணர்ந்து இனி இவனைத்தடுப்ப தில் பயனில்லையெனத் தேர்ந்து கண்ணீர்பெருக்கி, அந்தோ! என்னரு மை மகன் சக்கரவர்த்திக்குப்பிறந்து எல்லாவுயிர்களுக்கு மினியனாகவு மிருந்தும், திக்கற்றவன்போல் வனஞ்சென்று பிச்சையெடுத்து எங் ஙனம்பிழைத்திருப்பான்! இவனுடைய ஏவலாளர்களும், அடிமையர்க ளும், அறுசுவையுண்டிகளையுமுண்டு மகிழ்ந்திருக்க இவன்மட்டும் காடு சென்று கந்தமூலபலங்களை எப்படி உண்ணலாம்! ஸ்ரீராமன் வனவாஸம் போகின்றானென்பதைக்கேட்டுஎவன்தான் இஃது ஒக்குமெனஉடன்படு வான்! இதைக்கேட்டவர்எவர்க்குத் தான் அச்சந்தோற்றாது? ஆ! விதி யின் வலிமை மிகச்சிறந்தது! நற்குண நற்செய்கையுடையனாகி, யாவர் க்கு மினியனாகிய ஸ்ரீராமனும் அதனால் காட்டிலோட்டப்படுகின்றா னன்றோ? என்னருமைத் திருமகனாகிய ஸ்ரீராமா! நீ லோகாபிராம னாக விருந்து என்னைப்பிரிந்து கானகத்துக்குச் செல்லுகின்றனையே! உனது பிரிவினால் என் உள்ளத்தினுள்தோன்றிய சோகமென்னுந் தீயானது, உன்திருமுகத்தைக்காணாமை யென்னுங் காற்றினால் தூண் டப்பட்டு, புலம்புவதனாலாகிய துயரமென்னும் விறகையும், அழுவதி னாலாகிய கண்ணீரென்னும் ஓமஞ்செய்யப்பட்ட ஆஹுதியையுமுடைய தாகி, கவலையினாலாகிய கொதிப்பென்னும் மிகுந்த புகையுடன்கூடி, நெட்டுயிர்ப்பினாலாகிய ஆயாசத்தினால் வளர்க்கப்பட்டதாகிப், பனி காலம்நீங்கிய பின்னர் காட்டுத்தீ புதல்களைப்பற்றி யெரிப்பதுபோல என்னைப்பற்றி யொடுக்கியெரித்துவிடுமே! நீயாகிய கார்முகில் ஆனந்த மென்னும் மழைபொழிந்தாலல்லது அத்தீயணையாதே! யான் எவ் வண்ணம் பொறுத்திருப்பேன்! பசுவானது தன்கன்று சென்றவிடம் செல்லாமல் தூரநின்று அதனைப்பார்த்துப் பொறுத்திருக்குமோ! என் திருமகனே! நானும் நீ செல்லுமிடமே வருவேன்; என்றிவ்வகையாக மிகுதியும் துயர்கொண் டுரைசெய்தனள். கோஸலையின் திருமகனும் தாயின் மொழியைக்கேட்டு மீளவுந் தாயைநோக்கி, என் தாயீரே! மஹா ராஜர் கைகேயிதேவியினால் வஞ்சனைசெய்யப்பட்டு மிகவுந் துன்பமுற் றிருக்கின்றனர். யானும் அரணியஞ்சென்று, நீரும் அவரருகிலிரு ந்து உபசாரஞ்செய்யாமல் என்னுடன்வந்து விடுவீராகில், பின்பு அவர் கணப்பொழுதும் உயிருய்ந்திரா ரென நான் உறுதியாயுரைப்பேன்.—

భర్తుః కిలపరిత్యాగో నృశంసః కేవలం స్త్రియాః।
సభవత్యా నకర్తవ్యో మనసాపి వికర్హితః॥

பர்த்துஃகிலபரித்யாகோ ந்ருசம்ஸஃகேவலம்ஸ்திரியாஃ।
ஸபவத்யாநகர்த்தவ்யோ மனஸாபிவிகர்ஹிதஃ॥

குலமகள்கணவனைவிட்டுப் பிரிந்துபோவதென்பதுமிகக்கொடியது. அ ங்ஙனம்செய்தல்உலகத்தார்பழிப்புக்குள்ளாகுமாதலின், நீர்மனத்திலும், அவ்வண்ணங் கொள்ளலாகாது. என்தந்தையார் ஜீவித்திருக்குமளவும், நீர்

அவர்க்குப் பணிசெய்யக்கடவீர். இதுதான் பெண்களுக்குத் தொன்மை யான தருமமென்று மேலோர் அருளிச்செய்திருக்கின்றன ரென்ற னர். கோஸலையும் தன் திருமகன் வாக்கியத்தைக் கேட்டு நன்காராய்ந்து மிக மகிழ்ச்சி கொண்டவளாகி, என் பெறலரும் புதல்வனே! நீ யுரை செய்த வண்ணமே யான் நடந்துகொள்வேனென உடன்பாடுரைத்தனள்.

ஸ்ரீராமசந்திரர் மீளவும் கௌஸல்யாதேவியை நோக்கி, என்தாயீரே! மஹாராஜர் நம் எல்லோர்க்கும் இறையும், குருவும், போஷகருமாயிருத்தலால், நாமிருவருமே சக்கரவர்த்தியார் கட்டளையை வழுவாமல் பாதுகாக்கவேண்டும்; ஒன்பதும் ஐந்துங்கூடிய இவ்வருஷங்களைத் தகுதியாக யானரணியத்தி லெளிதில் கழித்துவிட்டு, மீண்டிங்கெய்தி நின் கட்டளையின்படி மகிழ்ந்து நடப்பேனென உரைசெய்தனன். ஆயினும், ஸ்ரீராமபிரானது பிரிவைப் பொறுக்கமாட்டாமல், என் செல்வமகனே! இச்சக்களத்திகளினடுவில் வாசஞ்செய்ய என்னாலாகாது; ஆதலின், என்னையும் அரணியத்திற்கு அழைத்துக்கொண்டு போகக்கடவை; அவ்விடத்துயான் ஒரு பெண்மான்போலவிருந்து காலங்கழிக்கிறேன் என்றுகூறிக் கோஸலை யழுது புலம்பினாள். அதுகேட்டு ஸ்ரீராமபத்திரருஞ் சோகங்கொண்டவராய்த் தாயைநோக்கி, அம்மா! நீர் இவ்வண்ணம் உரைசெய்வது தகுமோ? குலமகளுக்கு நாயகனே தெய்வம்; நாயகனே பிரபு; உமக்கும் எனக்கும் மஹாராஜரே பிரபுவாவார்; லோக நாதராகிய மஹாராஜா பிழைத்திருக்கையில், நாம் அநாதர்களல்லோம். அன்றியும், நான் வனஞ்சென்று பரதன் அபிஷேகங்கொண்ட போதிலும், உமக்குக் குறைவுநேரிடாது; கைகேயி மனம் வேறாயிருக்கினும், பரதன் அத்தன்மையனல்லன்; அவன் தருமசிந்தையுடையவனும், தார்மிகனும், எல்லாவுயிர்களுக்கு மினியனுமானவன்; ஆதலின், அவன் உமது திருவுளத்தின்படி நடப்பானல்லது வேறாக நடவான். நான் வனம்போன பின்பு மஹாராஜர் புத்திரசோகத்தால் வருந்தாதவண்ணம் நீர் ஊக்கத்துடன் அவர்க்கு உபசாரஞ்செய்து பாதுகாத்துத் தேற்றக் கடவீர். மிகக் கொடிய புத்திரசோகம் அவரைப் பற்றி எரிக்காதவண்ணம் நீர் பாதுகாக்கக்கடவீர்.

వ్రతోపవాసనిరతా యానారీపరమోత్తమా।
భర్తారంనానువర్తేత సాతుపాపగతిర్భవేత్॥
భర్తుశ్శుశ్రూషయానారీ లభతేస్వర్గముత్తమం।
అపియానిర్నమస్కార నివృత్తాదేవపూజనాత్॥

வ்ரதோபவாஸநிரதா யாநாரீபரமோத்தமா।
பர்த்தாரம்நாநுவர்த்தேத ஸாதுபாபகதிர்ப்பவேத்॥
பர்த்துச்சுச்ரூஷயாநாரீ லபதேஸ்வர்க்கமுத்தமம்।
அபியாநிர்நமஸ்காரா நிவ்ருத்தாதேவபூஜநாத்॥

யாவளொருத்தி விரதோபவாசங்கள்செய்து, பரபுருஷனைக்கண்ணுற் பாராமல் பரிசுத்தையாகி யிருந்தும், தன் பர்த்தாவை அவமதித்து அவனுக் கிசையாதிருக்கின்றனளோ, அவள் நரகத்தை யடைவளே யல்லது நற்கதி யடையாள்; யாவளொருத்தி தேவதாபூசை செய்யாதவளும், பெரியோர்களைத் தொழாதவளுமாய்க் கொடியளாயிருந்தும், தன் பர்த்தாவின் மனத்துக் கிசைந்தபடி ஏவல்செய்து, தன் பர்த்தாவை மகிழ்விப்பாளோ, அவள் சிறந்த வானுலகத்தையே யடைவாள், கெடுதி யடையாள். ஆதலின், குலமகள் பர்த்தாவுக்குப் பணியே செய்யக்கடவள். இதுவே அநாதியாகிய தருமமென வேதத்திலும் ஓதப்படுகின்றது; ஸ்மிருதிகளிலுங் கூறப்படுகின்றது. ஆதலின், என் தாயரே! நீரும் மஹாராஜாவுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டே, என் பொருட்டு வேள்வி முதலிய காரியங்களில் நன்மலர்களினால் தேவதைகளைப் பூசனைசெய்து, வேதியர்களுக்கும் பொருளளித்து, எனக்கு நன்மையுண்டாகவேண்டுமெனப் பிரார்த்தனை செய்துகொண்டு நான் மீண்டு வருங்காலத்தையே எதிர்பார்த்திருக்கக்கடவீர். இவ்வண்ணம் நீர் நியமமுடையீராய்க்கணவனுக்குத் தொண்டுசெய்து வருவீராயின், மஹாராஜரும் என் பிரிவாலுண்டான சோகத்தைப் பொறுத்துப் பிழைத்திருப்பார். நான் மீண்டு வந்த பின்னர், நீர் மிகுதியும் மகிழ்ச்சியை யடைவீரென்று மனந்தேற்றி யருளிச்செய்தனர். கௌஸலியாதேவி அதனைக்கேட்டுப் புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவளாய்த் தன் மகனைநோக்கி, ஸ்ரீராமா! காடுசெல்வதில் உனக்குற்ற உறுதியைத் தவிர்க்கயான் வல்லவளல்லள். விதியைத் தடுப்பதற்கு யாராலும் முடியாதன்றோ? ஆதலின், என்திருமகனே! நீ மிகுதியும் ஊக்கத்துடன் போய்வரக்கடவை. உனக்கெப்பொழுதும் நன்மையே யுண்டாகக்கடவது. நீ வனஞ்சென்று, தந்தையொழியை நிறைவேற்றிப் பெரும்பேறுபெற்றவனாய் மீண்டு வந்தபின்னர், உன்னைக்கண்டு நான் பெருமகிழ்வுகொண்டு வாழ்வேன்; தெய்வகதி யாவர்க்கும் எண்ணுவதற்கு அரியது. தெய்வமன்றோ என்னையும் போய்வாவென்று விடைகொடுக்கும்படி செய்கின்றது; ஆதலின், என்திருமகனே! நீ சுகமாகச் செல்லக்கடவை. திரும்பிவந்தபின் என்னை மகிழ்விப்பாய்; இந்தக் காலமே அந்தக்காலமாகுமா? ஆகுமாகில், நீ ஜடாஜினதாரியாகித் திரும்பிவரக்கண்டு மகிழ்வுருவேனன்றோ? என்றிவ்வண்ணம் மொழிந்து பிரயாணகாலத்தில் சோகங்கொண்டு தடைசெய்வதும், புலம்பிக் கதறுவதும் சுபமானவை யல்லவெனத்தேர்ந்து சோகத்தையுள்ளடக்கி, மகிழ்வுடன் போய்வாவென விடையுரைத்து, ஸ்ரீராமபிரானது நன்மையையே மனத்தில் கருதிக்கொண்டு கவலையுற்று வீற்றிருந்தனள்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்துநான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்.

கோஸலை ஸ்ரீராமபிரானுக்கு ஆசீர்வாதஞ்செய்து செல்லவிடுத்தல்.



அநந்தரம் கோஸலை சோகத்தை யுள்ளடக்கிக் கைகால்களைச் சுத்தி செய்து, ஆசமனம்பண்ணித் தூயளாகி, ஸ்ரீராமபிரானுக்கு ஆசீர்வாதஞ் செய்யலாயினள். அடா, என்னருமைத்திருமகனாகிய ஸ்ரீரகுகுலதிலகா! உன்னுள்ளத்திலுறுதியைத் தடைசெய்ய யாராலும் முடியவில்லை யாதலால், நீ சுகமாக வனஞ்சென்று, விரைவில் மீண்டு இனிது வாக்கடவை. ஒருபொழுதும் நல்லொழுக்கம் வழுவாமலிருக்கக்கடவை. அடா, ராகவ சார்த்தூலா! எவ்வளவு துன்பம் நேரிடினும், எத்தருமத்தைக் கைவிடலாகாதென நீ இடைவிடாது காத்துவருகின்றனையோ, அத்தருமம் உன்னைப் பாதுகாக்கக்கடவது. என் அழிவில்லாப் பெருவாழ்வே! நற்சந்திகளிலும், தேவாலயங்களிலும், நீ தினந்தோறும் எத்தேவுகளுக்கு வந்தனஞ்செய்கின்றனையோ, அத்தேவர்களும் நீ காட்டில் மஹரிஷிகளுடன் வாசஞ்செய்கையில், உன்னைக் காத்தருளக்கடவர்கள். விசுவாமித்திரமகாமுனிவர் உனக்கருள்செய்தளித்த கணைகளும் உன்னைக் கர்க்கக்கடவன. மாதாபிதாக்களுக்குத் திருப்பணிசெய்ததினாலும், சத்தியத்தினாலும், காக்கப்பட்டவனாகி, நீ நெடுநாள் வாழ்வாயாக; ஸமித்துகளும், தருப்பங்களும், பவித்திரங்களும், ஓமம் வளர்த்து மிடங்களும், கடவுளர் மந்திரங்களும், தேவதாபூசைக்காகச் செய்த இடங்களும், மலைகளும், மரங்களும், கிளைகளும், மடுக்களும், பறவைகளும், பன்னகங்களும், சிங்கங்களும், உன் திருமேனியைக் காக்கக்கடவன. சாத்திய தேவர்களும், விசுவேதேவர்களும், மருத்துக்களும், மஹரிஷிகளும், தாதாவிதாதா பூஷாபகன் அரியமன் என்னுந் தேவர்களும், இன்திரன் முதலிய லோகபாலர்களும், பக்ஷம், மாசம், ரிது, ஸம்வத்ஸரங்களும், இரவும், பகலும், முகூர்த்தமும், உனக்கெப்பொழுதும் நன்மையையே பயக்கக்கடவர்கள். தியானமும், யோகமும், தருமமும், உன்னை இடைவிடாது காக்கக்கடவன. ஸநத்குமாரரும், ஷண்முகனும், சோமனும், பிருஹஸ்பதியும், ஸப்தரிஷிகளும், நாரதரும், உன்னை எல்லாவிடங்களிலும் காத்தருளக்கடவர்கள். மற்றும் எல்லாவிடங்களிலும், நன்கறியும்படி யுள்ளவர்களும், திக்குக்கும் விதிக்குக்கும் இறைவர்களும், என்னால் துதிசெய்யப்பட்டவர்களாகிய தேவர்களெல்லோரும், வனத்தி லுன்னை அல்லும் பகலும் பாதுகாத்தருளக்கடவர்கள். ஏழுகுலாசலங்களும், ஏழுகடல்களும், வருணனும், குபேரனும், தேவலோகமும், ஆகாயமும், பூமியும், எல்லா நதிகளும், நக்ஷத்திரங்களும், நவக்கிரஹங்களும், அவைகளுக்குத் தலைவர்களும், இராப்பகல்களும், காலைமாலை சந்திகளும், வனவாசியாகிய உன்னைப் பாது

காக்கக் கடவர்கள். ஆறு ரிதுக்களும், பன்னிரண்டு மாசங்களும், வருஷங்களும், முகூர்த்தங்களும், நாழிகைகளும், விநாடிகளும், திசைகளும், உன் பொருட்டு நன்மையளிக்கக்கடவன. முனிவேஷங்கொண்டு நீ வனத்தில் சஞ்சரிக்கையில், தேவர்களும், தைத்தியர்களும், உனக்குச் சுகத்தையே பயக்கக்கடவர்கள். அரக்கர்களிடத்தும், பிசாசர்களிடத்தும், கண்டவர்கள் அச்சமுறத்தக்க தீச்செயல் புரியும் மற்றுமுள்ள மாம்ஸத்தைத் தின்னுந் துஷ்ட ஜந்துக்களிடத்தும், உனக்கு ஒருகாலும் அச்சந்தோன்றாமையுண்டாகக்கடவது. வானரங்களும், தேள்களும், காட்டீக்களும், கொதுகுகளும், மலைப்பாம்புகளும், புழுக்களும், கொடி செடி புதர்களினாலிருண்டு கோரமாகிய வனத்தி லுனக்குப் பீடைசெய்யாதன வாகக்கடவன. பெரிய யானைகளும், சிங்கங்களும், புலிகளும், கரடிகளும், காட்டுப்பன்றிகளும், காட்டெருமைகளும், உனக்குப் பீடைசெய்யாதிருக்கக்கடவன. அடா என் திருமகனே! மானிடரைக்கொலைபுரிந் துண்ணும் தீயவிலங்குகளும் என்னாலிங்கு வழிபாடு செய்யப்பட்டனவாகி, உன்னை வருத்தாதிருக்கக் கடவன. நீ செல்லும் வழிகளும் மங்கலகரங்களாகக்கடவன. உனது தோள்வலிகளும் பயன்பெறக்கடவன. என்னருமைத் திருமகனே! பேறுகளெல்லாங் கைகூடுவதன்பொருட்டு நீ நன்குசென்று, மீண்டுவருவாயாக. ஆகாயத்திலும், பூமியிலும், இருக்கின்ற தேவர்களெல்லோர்களிடத்தினின்றும் உனக்கு மங்கலமுண்டாகக் கடவது. உனக்குப் பகைஞர்களுளராயினும், அவர்களும் உனக்கு நன்மையே செய்யக்கடவர்கள். தேவகுருவும், சோமனும், சூரியனும், குபேரனும், யமனும், என்னால் பூசனைசெய்யப்பட்டவர்களாகித் தண்டகாரணியத்தில் வாஸஞ்செய்கின்ற உன்னைப் பாதுகாத்தருளக்கடவர்கள். அக்கினியும், வாயுவும், புகையும், ரிஷிகளுரைக்கின்ற மந்திரங்களும், உன்னைக் காக்கக்கடவன. எல்லா உலகங்களையும் படைக்கும் பிரமனும், அவற்றையளிக்கும் ஸ்ரீமந் நாராயணனும், மஹாரிஷிகளும், மற்றுமுள்ள தேவர்களும், வனவாசியாகிய உன்னைப் பாதுகாத்தருளக்கடவர்களென ஆசீர்வதித்தனள். இவ்வண்ணம் கோஸலராஜன் திருமகள் கந்தபுஷ்ப தூபதீபாதிகளினாலும், தோத்திரங்களினாலும், தேவதைகளெல்லோரையும் பூசனைசெய்து, பெரியனாகிய அந்தணனைக்கொண்டு தீவளர்த்தி, நெய், வெண்மை நிறமுள்ள மாலைகள், ஸமித்துக்கள், வெள்ளைக்கடுகு முதலியவற்றால் ஓமஞ்செய்வித்து, மிகுந்த ஹவிஸ்ஸினால் வெளியிற்செய்யத்தக்க பலியைச் செய்வித்துத் துன்பம் விலகச்செய்யும் கன்மங்களையும், நன்மை பெருகும்படி செய்யும் கன்மங்களையும், தேன், தயிர், அக்ஷதை, நெய்களால் முடிப்பித்து, வேதியர்களைக்கொண்டு நலந்தருமொழிகளை ஓதுவித்துப் புரோஹிதருக்கும், மற்றுமுள்ள வேதியர்களுக்கும் தக்கபடி தக்ஷிணைகொடுத்து, அவர்களையும் மகிழ்வித்தனள். பின்னர் தன் மகனை நோக்கி, ஸ்ரீ ராமா! தேவேந்திரன் விருத்திராஸுரனைக்கொலைசெய்யப் புறப்படுகையில் அவனுக்குண்டாகிய மங்கலமுனக்கு முண்டாகக்கடவது. வைநதே

யன் அமிர்தம் கொண்டுவரப் புறப்படுகையில் வினதாதேவி அவன் பொருட்டு வேண்டிய மங்கலமு முனக்குண்டாகக் கடவது. அமிர்த மதனஞ் செய்யுங் காலையில், தைதேயர்களுடன் போர்செய்ய முயன்றதேவர்களுக்கு அதிதிசெய்த மங்கலமும் உனக்குண்டாகக்கடவது. ஸ்ரீமந்நாராயணன் வாமனுவதாரஞ்செய்து மூவுலகங்களையும் மூன்றடியாக அளக்க முயற்சிசெய்கையில் அவருக்குண்டாகிய மங்கலமும் உனக் குண்டாகக் கடவது. மங்கலங்களுக்கும் மங்கலம்செய்யும் ரிதுக்களும், சாகரங்களும், தீவுகளும், வேதங்களும், உலகங்களும், திசைகளும், உனக்கு மங்கலமளிக்கடவன என்றிவ்வண்ணம் ஆசீர்வாதஞ்செய்து, சிரத்தில் அக்ஷதையிட்டுச் சந்தனமப்பி இடுக்கண்யாவையும் போக்கவல்ல மூலிகையைக் கையில்கட்டி மந்திரித்து ரக்ஷைசெய்து, மனத்தில் சோகங்கொண்டவளாயினும் அதனைப் புறத்தில் சிறிதும் வெளிவிடாமல் மகிழ்வுகொண்டவளாகி, ஸ்ரீகோதண்டராமனை எடுத்தணைத்து உச்சிமோந்து மகிழ்ந்து, ஸ்ரீராமா! நீ குறையென்பதின்றி மகிழ்ந்தவனுகிச் சுகமாப் போய்வருவாயாக. நீ வனவாஸந்தீர்ந்து திரும்பி இங்கெய்தி யபிஷேகங்கொண்டு அரசநீதிவழுவாமல் ராஜ்ஜிய பரிபாலனஞ்செய்கையில், நான் கண்கள் குளிரக்கண்டு மகிழ்வேன். நீ யவ்வண்ணம் அரசுசெய்துகொண்டு சீதாதேவியினுடைய காதலையும், என்னுடைய விருப்பையும், நிறைவுறச் செய்க. குழந்தாய் ஸ்ரீராமா! இப்பொழுது நீ சுகமாக வெழுந்து செல்லக்கடவை. என்னல் பூசனைசெய்யப்பட்ட ஹரிஹராதி தேவர்களும், மஹாரிஷிகளும், பூதங்களும், தானவதைதேயமஹோரகர்களும், பத்துத் திசைகளும், நெடுநாள் வனவாஸஞ்செய்யும் உன்கருத்துக்கிணங்க நலங்களையே செய்யக்கடவர்களென்று ஆசீர்வதித்தனள். இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரனுக்கு ஆசீர்வாதம் முதலிய விதிகளை முறைப்படி செய்து முடித்துச் சோகத்தையடக்கியும், புத்திரவாச்சலியத்தால் சோகத்தையடக்க முடியாமல், கண்ணீர் பெருகத் தன் குமாரனை வலம் வந்து, பல முறை எடுத்தணைத்துத் தழுவிக்கொண்டனள்.

తథాచదేవ్యాసకృత్ప్రదక్షిణో నిపీడ్యమాతుశ్చరణౌపునఃపునః।
జగామసీతానిలయంమహాయశాః సరాఘవఃప్రజ్వలితస్స్వయాశ్రియా॥

ததாசதேவ்யாஸக்ருதப்ரதக்ஷிணோ நிபீட்யமாதுச்சரணௌபுந: புந:।
ஜகாமஸீதாநிலயம்மஹாயசா: ஸராகவ:ப்ரஜ்வலிதஸ்ஸ்வயாஸ்ரியா ॥

சிறந்த புகழ்பெற்றவரும் இயற்கையாகிய தமது திருமேனியொளியால் விளங்குகின்றவரும், பிதாவின் வாக்கிய பரிபாலனத்தில் உறுதி கொண்டவருமாகிய அந்த ஸ்ரீராமசந்திரர் தம்மாதாவினுல் அவ்வண்ணம் ஆசீர்வசனஞ்செய்து வலஞ்செய்யப்பட்டவராகி, அவளது திருவடி

களைப் பலமுறைபணிந்து விடைபெற்றுக்கொண்டு, சீதாபிராட்டியினரண்மனைநோக்கி எழுந்தருளினார். *

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தாறுவது ஸர்க்கம்.

சக்கரவர்த்தித்திருமகனார் தம்செய்தியைச் சீதாதேவிக்கு அருளிச்செய்தது.

ஸ்ரீராமபிரான் தருமநெறிதவறாதவராய்த் தண்டகாவன மெழுந்தருள உடன்பட்டுத் தம்மாதாவைப்பணிந்து அவளால் ஆசீர்வசனஞ் செய்யப்பட்டவராய் விடைபெற்று மக்கள் நிறைந்த நெடுந்தெருவைத் தம்திருமேனிகாந்தியால் விளங்கச்செய்பவராகி, இவ்வளவு நற்குணமுடையவரான இவர் வனவாஸம் எழுந்தருளுகின்றாரேயெனக் கண்டவரனைவரும் துயரங்கொண்டு தவிக்க சீதாபிராட்டியாரது அரண்மனைக்கெழுந்தருளினார். சீதாபிராட்டியார், இங்குநடந்த சரித்திர மொன்றினையு முணராதவராதலால், தம் பர்த்தாவுக்குத் திருவபிஷேகமாகப் போகின்றதேயென எண்ணித் தேவகாரியங்களை விதிப்படிமுடித்து, அரசுக்குரிய தருமங்களை யுணர்ந்தவராதலின் மனமகிழ்ச்சியுடையவளாகி, ஸ்ரீராமபிரானை இங்கெழுந்தருளுவாரென்றே எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். அத்தருணத்தில் சக்கரவர்த்தித் திருமகனார் அங்கெழுந்தருளித் தமக் கபிஷேகமென மகிழ்வுற்று நிறைந்திருந்த மாந்தர்களைக்கண்டு, வெட்கத்தால் குனிந்து கீழ்நோக்கிச் சென்றனர். அவர் அங்ஙனம் சிந்தைகொண்டு சோகமும், கோபமும், கொண்டவர்போல எழுந்தருளுவதைக்கண்டு சீதாபிராட்டியார் தாமும் சிந்தையுஞ் சோகமுமடைந்து பர்த்தாவைநோக்கி, என் பிராணநாதனே! மகிழ்வடையத்தக்க காலையில் தேவரீர் சோகங்கொண்டிருக்கின்றீரே! இதற்குக் காரணமென்ன? இப்பொழுது பிருஹஸ்பதியை அதிதேவதையாகக்கொண்ட புஷியநக்ஷத்திரம் வந்திருக்கிறதெனப் பண்டிதர்களாகிய அந்தணர்கள் சொல்லுகின்றார்களே; ஆதலின் இஃது திருவபிஷேகங்கொள்ளுங் காலமன்றோ? இப்பொழுது துன்பமடைந்திருக்கக் காரணம் யாது? அதனை யருளிச்செயல் வேண்டும். தேவரீரது திருமுகமண்டலமும், நூறு சலாகைகளுடைய

* இச்சருக்கத்தில்கூறியது கூறலென்னுங் குற்றம் பலசுலோகங்களில்தோற்றுமென்பார்; சிலர், கோஸலை தன் மகன்மீதுள்ள அன்பினாலும், ஆதரத்தினாலும், தேவர் முதலானோர் தாமே தீமைசெய்யாமைக்காகவும், தீமைசெய்பவர்களை மறுப்பதற்காகவும், நன்மைசெய்வதற்காகவும், தன்மகன் பிழைசெய்யினும், அதனைப் பொறுப்பதற்காகவும், சிலரைப் பலவாறு வேண்டிக்கொண்டமையால் அஃது ஒருபொழுதும் குற்றமாகாதெனவுணர்க.



ஸீதாதேவி. ஸ்ரீராமர். இலக்ஷ்மணர்.

தும், நுரைபோல வெண்மை நிறமுள்ளதுமான கொற்றக்குடையால் மறைக்கப்பட்டதாக ஏன் விளங்கவில்லை? நூறிதழ்த் தாமரைபோன்ற திருக்கண்களையுடைய திருமுகம் முழுமதிபோலவும், அன்னம்போலவும், நிலவுகின்ற வெண்சாமரைகளால் வீசப்பட்டதாகி, ஏன் ஒளிசெய்யவில்லை? சிறந்த ஸூத மாகதவந்திகளுந் துதிசெய்கின்றவர்களாகி, ஏன் தேவரீருடன் வரவில்லை? வேதம்வல்ல மறையவர் அபிஷேகங்கொண்ட தேவரீருடைய திருமுடியில் விதிப்படி, தேன் தயிர் முதலியவற்றாலேன் அபிஷேகஞ்செய்யவில்லை? நாடுநகரத்தவரெல்லோரு மேன் பின்றொடர்ந்து வந்திலர்? உற்சவத்தின்பொருட்டுச் செய்யப்பட்டு நான்கு சிறந்த குதிரைகள் கட்டிய புஷியரதமென்னுந் தேர் தேவரீர்முன்பாக ஏன் செல்லவில்லை? நீருண்ட மேகம்போலவும், அஞ்சன மலைபோலவும், விளங்குகின்ற சத்துருஞ்சய மென்னும் யானை ஏன் முன்னடந்திலது? பத்திராஸனமுதலிய அபிஷேகத்துக்குரியன யாவுஞ் சித்தமாயிருக்கத் திருவபிஷேகங்கொள்ளாமல் இவ்வண்ணம் இங்கெழுந்தருளுவதற்குக் காரணம்யாதோ? அதனை யருளிச்செயல்வேண்டும். இதுவரையில் தேவரீர் திருமுகமண்டலம் இங்ஙனம் வேற்றுமை யடைந்ததேயில்லை; திருவுளத்தில் சிறிதும் சந்தோஷமின்றி மிகச்சோகமுற்றிருப்பதுபோல தோற்றுகின்றீரென் றிவ்வண்ணமுரைத்துப் புலம்பினர். சக்கரவர்த்தித் திருமகனார் அதுகேட்டுப் பிராட்டியாரைநோக்கி கேளடிஜானகி! ஸத்தியஸந்தராகிய என்தந்தை கைகேயியார்க்கு முன்பு இரண்டுவரமளித்தனர். இப்பொழுது குலமுறைப்படி சக்கரவர்த்தியார் எனக்கபிஷேகஞ் செய்விக்க முயற்சிசெய்ததைக்கண்டு, நான் பதினான்குவருஷம் வனவாஸஞ் செய்யவேண்டுமென்றும், பரதன் யுவராஜனாகப்பட்டம் பெறல்வேண்டுமென்றுங் கைகேயியார் அவ்விரண்டு வரங்களையும் விரும்பினர். வாய்மை தவறலாகாதெனச் சக்கிரவர்த்தியார், என்னைப் பதினான்குவருஷம் காடுறையச்செல்லும்படி கட்டளையிட்டனர். ஆதலின் நான் வனம் போகப்புறப்பட்டு நின்னைக் கண்டு போவதற்காக இங்குவந்தேன். நீ நற்குலத்திற்பிறந்தவளும், தருமமுணர்ந்தவளும், நல்லொழுக்கமுடையவளுமாதலால், இஃது, நலமேயென் றுடன்பட்டுக்கேட்கக்கடவை.

ఋద్ధియుక్తాహిపురుషా నసహన్తేపరస్తవం।
తస్మాన్నతేగుణాఃకథ్యా భరతస్యాగ్రతోమమ॥

ருத்தியுக்தாஹிபுருஷா நஸஹந்தேபரஸ்தவம்।
தஸ்மாந்நதேகுணாஃகத்யா பரதஸ்யாக்ரதோமம॥

மிகச்செல்வச்செருக்குடையவர்கள் பிறருடையபெருமையைப் பொறுத்திரார்களாதலால், பரதன் இங்குஅபிஷேகங்கொண்டு இளவரசாயிருக்கையில், அவனருகில் என்னுடைய குணங்களை நீ யெடுத்துப் புகழ்ந்துரை

செய்யவேண்டா; அவனேகொடுக்கும் ஆடையணிகளை ஏற்றுக்கொண்டு மகிழ்ந்திருப்பாயாக; விசேஷமாக ஒன்றையும் ஒருகாலும் விரும்பிக்கேட்கவேண்டா. சக்கரவர்த்தியார் இளவரசுப்பட்டத்தை அவனுக்களித்தமையால், அவன்மனத்துக் கிசைந்தபடியிருந்து, அவன்சினங்கொள்ளாமல் அன்புகூர்ந்திருக்குமாறு ஒழுகக்கடவை. யானும் இப்பொழுதே தந்தையார் மொழியை நிறைவேற்றுபவனாய் வனஞ்செல்லுகின்றேன்; நீ மனம் வருந்தாமல் சோகத்தையுள்ளடக்கித்தீரமாகவாழ்ந்திருக்கக்கடவை. யான் கானகஞ்சென்றபின்பு நீ விரதோபவாசங்களில் ஊக்கமுடையவளாய்த் தினந்தோறுங் காலையிலெழுந்து முறைப்படி தேவதாபூசனைசெய்து சக்கரவர்த்தியாரையும், என்னைப்பெற்றதாயரையும், மற்றுமுள்ள தாயர்களையும்,வந்தனஞ்செய்து அவர்களுக்குத் திருத்தொண்டு செய்துவரக்கடவை. நேசத்தினாலும், அன்பினாலும், இதஞ்செய்வதினாலும், என்தாயர்களெல்லோருஞ் சமமாகியவர்களேயன்றிப் பேதமில்லை; என்னுயிரினும் பிரியமான பரதசத்துருக்கின ரிருவர்களையும், பிராதாக்களைப்போலவும் பிள்ளைகளைப்போலவும் பார்த்தருள்செய்யக் கடவையல்லது, பகையென எண்ணற்க. பரதன் இக்குலத்துக்கும் தேசத்துக்கும் அரசனாதலால் அவனுக் கொருபொழுதும் தீங்குசெய்யற்க; அரசர்கள் தமக்கிசைந்தவர்களிடத் தருள்செய்து, தமக்கிசையாதாரிடத்துச் சினங்கொள்ளுகின்றார்களல்லரோ?

ఔరసానపి పుత్రాన్హి త్యజన్త్యహితకారిణః।
సమర్థాన్సంప్రగృహ్ణన్తి జనానపి జనాధిపాః॥

ஔரஸாநபிபுத்ராந்ஹி த்யஜந்த்யஹிதகாரிண꞉ ।
ஸமர்த்தாந்ஸம்ப்ரக்ருஹ்ணந்தி ஜநாநபிஜநாதிபா꞉ ॥

அரசர்கள் தமக்கு நலமல்லன செய்பவர்கள் தம் மைந்தர்களாயினும், அவர்களை விட்டுவிடுகின்றார்கள்; தமக்கு நலஞ்செய்யும் பிறரையுந் தம்மோடு சேர்த்துக்கொள்ளுகின்றார்கள். அடி வைதேஹி! ஆதலின் யுவராஜனாகிய பரதனுக்குக் கோபம் வாராதவண்ணம் நடந்துகொண்டு, தருமத்திலும், மெய்ம்மையிலும், நோன்புகளிலும், விருப்புடையாயாகி யிருக்கக்கடவை. நான் இப்பொழுதே வனஞ்செல்லுகின்றேன்; நீ யிவ்விடத்திலேயே யிருந்துகொண்டு, ஒருவருக்கும் ஒருதீங்குஞ்செய்யாமல், என் சொற்படிசெய்து வாழ்ந்தின்புறக் கடவையென அருளிச்செய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

### ஸ்ரீராமபிரான் ஸீதா லக்ஷ்மணர்களுடன் சக்கரவர்த்தியைக் காண வெழுந்தருளியது.

இவ்வண்ணம் ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் ஸீதாபிராட்டியாருடன் வேதியர்களுக்கு மிகுதியாகப்பொருட் கொடைசெய்துவிட்டு, தந் திருத்தந்தையைக் கண்டு மூவரும் வனமேகும் செய்தியை யறிவித்து விடைபெற்றுக் கொண்டு வனவாசமெழுந்தருள நிச்சயங்கொண்டு, காணற்கரியதாய்ச்சிறந்து விளங்குவதும், ஸீதாபிராட்டியால் மலர் மாலை முதலியவற்றால் அலங்காரஞ் செய்யப்பட்டுள்ளதுமான வில் முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டு வீதியில் எழுந்தருளினார்கள். இச்செய்தி யறிந்து அவரைத் தரிசிக்க அத்திருவயோத்தியிலுள்ள ஜனங்களெல்லோரும், அரசர்களின் மாளிகையி னுச்சியிலும், தேவாலயங்களின் கோபுரத்திலும், நற்செல்வர்களின் மேன் மாளிகையிலும், ஏழுமாடியுள்ள உயர்ந்த வீடுகளின் மீதும் ஏறிக்கொண்டனர்; புறத்திலிருந்து வந்தவர்கள வீதிகள்தோறும் எள்ளின்முனை நுழையவு மிடமின்றி நெருங்கி நின்று கொண்டனர். அவர்கள் கண்ணிழந்தவர்போலவும், பொருளிழந்தவர் போலவும், மக்களைப் பறிகொடுத்தவர்போலவும், இடிவிழுந்தவர்போலவும், முகங்குலைந்து மனங்கலைந்து நொந்தவர்களாகி, அரசற்குரிய வாஹனங்களின்றி அற்பர்போலத் திருவடித்தாமரை யிணைகள் சிவந்து நோவப் பதாதிகளாய், இளவரசுக்குரிய முச்சகநிழற்று முழுமதித் திருக்குடையின்றி வெயிலின் வெப்பத்தால் திருமேனிவாடி, யாவர்க்கும் அன்பருமின்பருமாகிய ஸ்ரீராமசந்திரர் பெரிய பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும் எழுந்தருளுவதுகண்டு சோகஸாகரத்தில் மூழ்கினவர்களாகிப் பலவாறாகப் புலம்பலுற்றனர்கள். எம்பெருமான் வீதியில் எழுந்தருளுகையில், இதுவரையில் நால்வகைப் படைகளும் அலைகடல் பொங்குவது போலச் செல்லுமே; இப்பொழுது அவர் சீதாதேவியுடன் செல்லுகையில், இளையாழ்வாரொருவரே பின் செல்லுகின்றனரே! இவர், நற்செல்வத்தின் நிலைமையறிந்தவரும், கேட்போர்க்குக கேட்டவாறு கொடுத்தருளு மியல்பினரும், தருமநுட்ப மறிந்தவரு மாதலால், தந்தையைப் பொய்யராக்கக் கூடாதென்னும் திருவுள்ளத்தாலன்றோ, பிறர்செயற்கரிய வனவாஸம் செய்யத்துணிந்தனர். அந்தோ! யாவளொருத்தியை இதுவரையில் ஆகாயத்திற் செல்ல வல்லமையுள்ள பூதபிசாசாதிகளும் கண்ணுற வல்லமையற்றன வாயினவோ, அந்தச் சீதாதேவியும், யாவருங் காணும்படி நடுவீதியில் எழுந்தருளுகின்றனளே! நற்சாந்த மப்புவதற்கே யுரியதான சீதா பிராட்டியினது திருமேனி கொடுமையான வெயிலிலும் காற்றிலு மழையிலுமடிப்பட்டு மண்ணிலெழுந் துகளும் படிந்து, உருக்குலைந்துபோகுமந்தோ! இப்பொழுது நம்மஹாராஜா தசரதசக்கரவர்த்தி

பேய் பிடித்துப் பித்தெழுந்து மதிமாறினர் போலும். அவ்வாறிலராயின், மிகப் பிரியமுள்ள நற்புதல்வரைக் காட்டிலோட்ட விருப்பமுறுர்; மைந்த னொருவன் நற்குணமுடையானல்லனாயினும், அவனையும் பெற்றார் புறத்தே ஓட்டார்களே ! இந்த ஸ்ரீராமபிரானுடைய திருக்கல்யாணகுணங்களி லீடுபட்டு இவ்வுலகமெல்லாம் ஸ்ரீராமா ராமாவென்று ஏத்திப்புகழ்ந்து, ஸ்ரீராமமயமாகி யிருக்கின்றதே ! இத்தன்மையனாகிய நற்செல்வத் திருமகனைச் சக்கரவர்த்தியார் ஏன் வனஞ்செல்ல விடுகின்றார் ?

ఆనృశంస్యమనుక్రోశ శ్శ్రుతంశీలందమశ్శమః।
రాఘవంశోభయన్త్యేతే షడ్గుణాఃపురుషోత్తమం॥

ஆந்ருசம்ஸ்யமனுக்ரோசச் ச்ருதம்சீலந்தமச்சம: |
ராகவம்சோபயந்த்யேதே ஷட்குணா:புருஷோத்தமம் ||

நல்லோரைக் கொல்லாமை, துன்பமடைந்தார்மே லருள் சுரந்தளித்தல், பெரியோரிடத்துப் பற்பலநூல்களைக் கற்று ஆராய்ந்து தேறுதல், நற்செய்கை உடைமை, புலன்களை யடக்கித் தன்வசமாக்கிக்கொள்கை, பிழைசெய்தோரிடத்தும் சீற்றங்கொள்ளாது பிழைபொறுத்தல், என்னு மிவ் வாறு குணங்களும், (யஸ்மாத்க்ஷரமதீதோஹ மக்ஷராதபிசோத்தம: | அதோஸ்மி லோகேவேதேச ப்ரதித:புருஷோத்தம:) என்கிறபடி ஸர்வாந்தர்யாமியாகவும், சகல ஜகத்காரணனாகவும், சகல ஜகத்சரண்யனாகவும், சர்வவ்வியாபியாகவு மிருக்கின்றமையால் புருஷோத்தமனென்னுந் திருநாமம்பெற்று (அஹந்தாசரதிர்ப்பூத்வா) என்கிறபடி சக்ரவர்த்தித் திருமகனாக அவதாரஞ் செய்து, ராகவதுரந்தரனென்னும் விருதுபெற்றிருக்கின்ற ஸ்ரீராமபிரானை விளங்கச்செய்கின்றனவன்றோ ? அத்தன்மையனாகிய ஸ்ரீராமபிரானுக்குப் பீடைநேர்ந்தமையால், அவரையே தஞ்சமாகவுடைய நாமெல்லோரும், முதுவேனிற்பருவத்தில் நீர் வற்றுகையில், அந்நீரிலுறையுஞ் ஜந்துக்கள்போல, மிகவும் பீடைசெய்யப்படுகின்றோ மல்லோமோ ? இந்த ஜகத்துக்கெல்லா மிவரே நாயகரன்றோ? இவர்க்குத் துன்பம் நேர்ந்தமையால், வேரற்ற மரம் போல் உலகமெல்லாந் துன்புற்றன. ஒரு மரத்தின் வேரை யறுத்து விடின், பிறகுஅம்மரம் பூ கனி காய்களுடன் செழித்து வளருமோ? தரும தேவதையாகிய ஸ்ரீராமசந்திரரே இவ்வுலகமனைத்துக்கும் வேராகின்றனர்; மற்றுள்ள உயிர்களெல்லாம், அம்மரத்திற்குப் பூ கனி காய் இலை கிளைகளாகின்றார்கள்; ஆதலின் நாமெல்லோரும் இளையபெருமாள் போலப் புறப்பட்டுப் புத்திர மித்திர களத்திராதியர்களுடன் ஸ்ரீராமபிரா னெழுந்தருளும் அரணியத்திற்கு உடன் சென்று மகிழ்வோம். பூந்தோட்டங்களாலும், நிலங்களாலும், மச்சு மாளிகைகளாலும் பயன்யாது ? அவைகளைவிட்டு ஸ்ரீராமபிரானுடன் சென்று, அவர்

இன்பமுறின் இன்பத்தையும், துன்பமுறின் துன்பத்தையும், அடைந்து வாழ்வோம். நாடு விட்டு வனஞ்சென்றவளவில் நமது மாளிகைகள், புதைய லெடுக்கப்பட்டு, அங்கணங்கள் முறிபட்டு, தனதானியம் பசு முதலியன அழிந்து, பின்னும் பல சிறந்த வஸ்துக்கள் எடுபட்டுப் புழுதிகள் படிந்து, கிருஹதேவதைகளால் கைவிடப் பட்டனவாய், எல்லா விடங்களும் எலிகளால் துவாரஞ்செய்யப்பட்டு, தண்ணீர் தெளியாமலும் அகிற்புகை கமழ்வியாமலும் துகள்போக விளக்காமலும் பாழாகி, பலி யாகம் ஜப ஹோம மந்திரங்களுமின்றி, உடைந்த பாஜனங்களை யுடையனவாகி, கெடுங்காலததா லிடிந்து உருக்குலைந்தனவாகுமே; அம்மனைகளைக் கைகேயி யடைந்து மகிழ்வுறக் கடவள். நாம் செல்லுங் காட்டிலுள்ள பாம்புகள் புற்றுக்களையும், சிங்கங்கள் தாழ்வரைகளையும், யானைகள் காடுகளையும், விட்டோடக் கடவன. இந்நகரே காடாகக்கடவது, காடே நகராகக்கடவது. வனத்திலுள்ள ஜந்துக்கள் யாவும் நம்மால் விடப்பட்ட இந்தத் தேசத்தையே யடையக்கடவன. புலி கரடி நாய் நரி மான் பாம்பு முதலிய ஜந்துக்கள் நிறைந்து, புல்லெழுந்து பாழடைந்த தேசத்தைக் கைகேயி பிள்ளையுடனும் பந்துஜனங்களுடனுங் கூடிப்பெற்று மகிழ்க. நாமெல்லோரும், ஸ்ரீராமனுடன் அரணியத்தில் வாழ்ந்து மகிழ்வோம்; என்றிவ்வண்ணம் பலவாறாகப் புலம்பினர்கள். இவ்வாறு உரைக்கின்ற ஜனங்களின் வாக்கியங்களைச் சக்கரவர்த்தித் திருமகன் திருச்செவி சார்த்தியும், சிறிதேனுந் திருவுளத்தில் விகாரங் கொள்ளாமல், மத்த மாதங்கம் போன்ற விக்கிரம முடையவராய், கைலைமலையின் சிகரம்போல வெளுத்துயர்ந்த தந் திருத்தந்தையினது திருமாளிகையை நோக்கி எழுந்தருளினர். ஆங்கு ஸேவகர்கள் அவரைக்கண்டு வினயமுடையராய் நின்றனர். அத்திருமாளிகையினுட்புகுந்த ஸ்ரீராகவன் அங்கே மிகவுந் துன்பமுஞ் சிந்தையுங்கொண்டு வருந்துகின்ற சுமந்திரரைக் கடாக்ஷித்துத் தாம் வனவாஸ மெழுந்தருளுவதற்காகவே இவர் துன்பமுற்றிருக்கின்றாரென்று திருவுளத்தறிந்தும், மகிழ்ச்சி கொண்டவர்போலப் புன்சிரிப்புக்கொண்டவராகி, மஹாராஜருடைய நியமனத்தைத் தடையின்றி விதியின்படி செய்யவேண்டுமென்று நிச்சயங்கொண்டவராய்த் தந்தையிடத்தில் விடைபெற்றுக் கொண்டெழுந்தருள வேண்டுமென்று திருவுளம்பற்றிச் சுமந்திரரை நோக்கி, வாரீர் சுமந்திரரே! நீர் சக்கரவர்த்தியாரிடஞ் சென்று நாமிங்கு வந்திருப்பதைத் தெரிவித்து, சன்னிதியில் செல்ல அனுமதிகேட்டு வரக்கடவீரென்று கட்டளையிட்டனுப்பி யருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்துமூன்றாவது ஸர்க்கம்

முற்றிற்று.

பே. 43.



தேவிகள். தசரதமஹாராஜர். ஸ்ரீராமர். ஸீதாதேவி. இலக்ஷ்மணர். ஸுமந்திரர்.

## முப்பத்து நான்காவது ஸர்க்கம்.

### சக்கரவர்த்தியார் திருமகனுக்கு விடை கொடுத்தது.

---

புண்டரீக பலாச விசாலாக்ஷரும், நீலமேக சியாமளமாகிய திவ்வியமான திருமேனியுடையவரும், ஸ்ரீதாமோதரரும், புருஷோத்தமருமாகிய ஸ்ரீராமசந்திரர் தாம் வந்த செய்தியை மஹாராஜருக்கு அறிவிக்குமாறு கட்டளையிடுதலும், ஸுமந்திரர் அவ்வாஜ்ஞையைச் சிரத்தில்கொண்டு மிகச் சந்தாபமுடையராய் உள்ளேசென்று, கட்டுண்ட மஹா நாகம்போலப் பெருமூச்சுவிட்டும், இராகு கேதுக்களால் பிடிக்கப்பட்ட சூரியன்போல ஒளிகுலைந்தும், நீறு பூத்த நெருப்புபோல உள்ளே வெப்பங்கொண்டும், நீர் வற்றிய தடாகம்போல ஸாரம் வற்றியும், ஐம்புலன்களின் திறமை குலைந்து வருந்துகின்ற மஹாராஜரைக் கண்டு, இருமடங்கான சோக முடையராகி யருகிற்சென்று, மஹாராஜரை நோக்கிக் கைகுவித்து, ஜய விஜயீபவ என்று வாழ்த்தி, கேட்டருளீர் மஹாப்பிரபு! தேவருடைய திருமகனார் பிராஹ்மணர்களுக்கும், பரிசனங்களுக்கும், பொருளனைத்தையும் கொடை செய்துவிட்டு, தேவரைக் காணும்படி அரண்மனை வாயலில் வந்து நிற்கின்றார். சூரியன் கிரணங்கள் சூழ்ந்தொளிர்வதுபோல ரராஜகுணங்கள் நிறைந்தொளிர்பவரான ஸ்ரீராமசந்திரர் தேவரீர் நியமனப்படி வனவாஸஞ்செல்லத் துணிவுடையராகித் தம் பந்துஜனங்களிடத்தில் விடைபெற்றுத் தேவரீரிடத்திலும் நியமனம் பெற்றுக் கொண்டுபோக வந்து நிற்கின்றார்; ஆதலால், அவர் தேவரைக்கண்டு களிக்கக்கடவர். தேவருக்கும் நன்மையுண்டாகக் கடவது. தேவரும் அத்திருமகனைக் கடாக்ஷித்தருளக்கடவீரென்று, பயத்தால் தடுமாறியும், மெதுவாயும் விண்ணப்பஞ்செய்தனர். ஸத்தியவாதியும், தர்மாத்துமாவும், சமுத்திரம்போலக் கம்பீர முடையவரும், ஆகாசம்போலக் களங்கமுறாதவரும், இவ்வுலகங்களுக்கெல்லாம் அரசருமான மஹாராஜர் அதைக் கேட்டு, சுமந்திரரே! நான் என் பத்தினிமார் அனைவர்களுடனும் கூடித் திருமைந்தனைக் காண விரும்புகின்றேன்; ஆதலின், விரைவாக என் மனைவியரெல்லோரையும் இங்கழைத்து வாருமென்று கட்டளையிட்டனர். சுமந்திரர் அவ்வண்ணமேசென்று தேவிகள் யாவரையும் அழைத்து வருகையில், மஹாராஜர் கட்டளையின்படி முந்நூற்றைம்பது தேவிகளும், கோஸலை, ஸுமித்திரைகளைச் சூழ்ந்துகொண்டு, மஹாராஜருடைய சமீபத்தில் வந்து சேர்ந்தனர்கள். சக்கரவர்த்தியும் உடனே சுமந்திரரை நோக்கி, ஸூதரே! நீர் சென்று ஸ்ரீராமபிரானை யழைத்துக்கொண்டு வாருமென்று ஆஜ்ஞைசெய்தனர். தக்ஷணமே சுமந்திரர் ஸ்ரீராமசந்திரரைச் சீதா லக்ஷ்மணர்களுடன் அழைத்துக்கொண்டு மஹாராஜர்க் கெதிராக வரு

கையில், சக்கரவர்த்தியார் ஸ்ரீராமபிரானெழுந்தருளுவதைக் கண்டு, விரைவாகச் சிங்காசனம் விட்டெழுந்து எதிர்கொண்டோடிச் சோகவேகத்தால் ஸ்ரீராமபிரானைத் தழுவாமலே தரையில் தவறி வீழ்ந்து மூர்ச்சை யடைந்தனர். உடனே ஸ்ரீராமபிரான் இளையபெருமாளுடனும் பிராட்டியாருடனும் அவரைப்பற்றி எடுத்தருளினர். அப்பொழுது, ஆ! ஆ! ராமா ராமா வென்னுந் தொனி ஆபரணத் தொனியுடன் கலந்தெழுந் தொலித்தது. சீதாதேவியுடன் ஸ்ரீராம லக்ஷ்மணர்க ளிருவரும், மஹா ராஜரைக் கட்டி யணைத்து கட்டிலின்மீ தெழுந்தருளச் செய்தனர்கள். முகூர்த்தகாலஞ் சென்று மூர்ச்சை தெளிந்தபின்பு சோகக்கடலில் மூழ்கியிருக்கின்ற தந்தையை நோக்கி ஸ்ரீராகவன் கைகூப்பி வந்தனஞ்செய்து, எந்தந்தையரே! அடியேன் வனவாஸம் போகும்பொருட்டுத் தேவரை விடைகேட்கின்றேன்; அடியேனைக் குளிரக் கடாக்ஷித்து வாழ்த்தி விடைகொடுத் தனுப்பக்கடவீர். எங்களெல்லோர்க்குந் தேவரே இறையவரல்லீரோ? இளையோனும், ஸீதையும், என்னுடன் வருவோமென்று வீம்புசெய்கின்றார்கள். இவ்விருவர்களுக்கும் என்னுடன் வரும் பொருட்டு விடைகொடுத்தருளக்கடவீர். அநேககாரணங்களையிட்டு வெகுவாக நான் தடுத்துரைசெய்தும் இவர்கள் கேட்டிலர். ஆதலின், துயரத்தை விட்டு மகிழ்வுகொண்டு எங்களை யனுப்பி யருளக்கடவீர். எல்லா வுயிர்களும் பிரஹ்மாவின் கட்டளையை எதிர்நோக்கி யிருப்பதுபோல, ஸீதாலக்ஷ்மணர்கள் அடியேனாகிய மூவரும் தேவருடைய கட்டளையையே எதிர்நோக்கிக் கொண்டிருக்கின்றோம்; என்று இனிமையாக விண்ணப்பஞ் செய்தனர். இவ்வண்ணந் திருமகனருளிச்செய்த வாக்கியத்தைக்கேட்டு மஹாராஜர் ஸ்ரீராமபிரானை நோக்கி, அடா என்னருமைக் குழந்தாய்! நான் கைகேயியினுடைய வரதானத்தால் மோகங்கொண்டிருக்கின்றமையால், நீ என்னை நிராகரித்துவிட்டுச் சுயமாகவே அபிஷேகங்கொண்டு அரசனாகி, இப்பூமியையாண்டு வாழ்வுறக்கடவையென்று உரைசெய்தனர். ஸ்ரீராமபிரான் அவ்வுரையைக் கேட்டுக் கைகூப்பிக்கொண்டு மீளவுந் தந்தையைநோக்கி, மஹாராஜரே! தேவரே அநேகமாயிரம் வருஷங்கள் இப்பூமிக்கு இறையாக வீற்றிருக்கக்கடவீர்; அடியேன் அரணியத்தில் சுகமாக வாஸஞ்செய்தின்புறுவேன்; என்பொருட்டுத் தேவர் பொய்யராகக்கடவீரல்லீர். பதினான்குவருஷம் காட்டில் விநோதமாக வாஸஞ்செய்து பிரதிஜ்ஞையை நிறைவேற்றி, மீண்டிங்குவந்து தேவரீர் திருவடிகளைத் தொழுது, மகிழ்வுறுவே னென்று அருளிச்செய்தனர். இவ்வண்ணமாக ஸ்ரீராமபிரான் அருளிச்செய்ததைக்கேட்டு, கைகேயியால் அடிக்கடி நிர்ப்பந்தஞ் செய்யப்பட்ட மஹாராஜர் மிகச் சோகங்கொண்டு புலம்பி, ஸத்தியமென்னுங் கயிற்றினால் பிணைத்துக் கட்டப்பட்டவராகி, மிகவும் பிரியமுள்ள செல்வமகனை நோக்கி, அடா என் பெறலரிய நற்புதல்வா! இம்மையினும் மறுமையினும், உனக்கு நன்மை யுண்டாகக்கடவது; எதற்கும் அஞ்சாதவனாகி

வனத்திற்குச்சென்று சீக்கிரமே திரும்பிவரக்கடவை. என் செல்வப்புதல்வனே, நீ ஸத்திய ஸ்வரூபியும், தருமசிந்தை யுடையவனு மாதலால், உன்னுடைய மனவுறுதியைத் திருப்ப யாராலும் முடியாது; ஆயினும், இன்றிரவு மாத்திரமாவது இங்கிருந்து, நாளைத்தினஞ் செல்லக்கடவை. இந்த ஒருதினமாவது உன்னைக்கண்டு மகிழ்வுற்றிருப்பேன்; இன்றிரவுமாத்திரம் என்னையும் உன் தாயையுங் கண்டு களிப்புறச்செய்வாயாக; நாளைத்தினம் சகல போகங்களுடனுங்கூடி வனஞ்சேர்ந்து மகிழ்வுறுவாய்; அடா என் செல்வமகனே! என்பொருட்டுப் பிரியமுள்ளன வெல்லாந் துறந்து கோரமான கானகஞ் செல்ல முயல்வது யாவராலுஞ் செயற்கரியது; குலமுறையைக் கெடுக்கின்ற இக்கொடிய கைகேயியால், வஞ்சனைசெய்யப்பட்ட என்னை நீ மெய்ம்மொழியனாகச் செய்து, கரையேற்றத் துணிவு கொண்டிருக்கின்றனை; நீ எனக்கு மூத்த மகனாதலால், நீ என்னைச் சத்தியவாதியாகச் செய்ய முயற்சிசெய்வதும் வியப்பன்றென்று கூறி விடைகொடுத்து மகிழ்ந்து புகழ்ந்தனர். சக்கரவர்த்தித் திருமகனாரும் சோகங்கொண்டுரைத்த தந்தையின் வாக்கியத்தைத் திருச்செவிசார்த்தி, இளைய பெருமாளுடன் கூடித் தாமுஞ் சோகங்கொண்டவராகித் தந்தையை நோக்கி, என் திருத் தமப்பனாரே! இன்றைத்தினம் தேவரருளால் இஷ்ட போகங்களைப்பெறினும், இனி யடவியில் அவைகளை யார் கொடுப்பார்கள். ஆதலி னிப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டுப் போக வேண்டுவதையே யான் மிகவும் விரும்புகின்றேன்; தனதானியங்கள் நிறைந்து மஹாஜனங்களுடன் கூடி விளங்குகின்ற இந்த ராஜ்ஜியத்தை யான் திருப்பிக்கொடுத்து விடுகிறேன்; இதைத் தேவரீர் பரதன் பொருட்டுக் கொடுத்தருளக்கடவீர். தேவர் மனமகிழ்ந்து கைகேயிக்கு முன்பு வரமளித் திருக்கின்றமையால், அதைப் பரிபாலனஞ்செய்வதன் பொருட்டு வனவாஸம்போக நிச்சயங்கொண்ட என் உறுதி ஒருகாலும் மாறாது; எல்லாவற்றையும் பரதனுக் களிப்பதனால் தேவருடைய வாக்கியம் உண்மையாகக்கடவது. அடியேன் தேவருடைய நியமனத்தின்படி பதினன்கு வருஷம் வனசரர்களுடன் கூடி யரணியத்தில் வாழ்ந்து மகிழ்வேன்; இவ்விஷயத்தில் தேவர் ஆலோசனைசெய்ய வேண்டுவதேயில்லை; இப்பூமியைப் பரதனுக் களித்தருளக்கடவீர்.

నహిమేకాంక్షితంరాజ్యం సుఖమాత్మనివాప్రియం।
యథానిదేశంకర్తుం వై తవైవ రఘునన్దన॥

நஹிமேகாங்க்ஷிதம்ராஜ்யம் ஸுகமாத்மநிவாப்ரியம் |
யதாநிதேசம் கர்த்தும்வை தவைவரகுநந்தந ||

அடியேனுக்குத்தேவருடைய ஆஜ்ஞையை முறைப்படி செய்வதே பிரியமாகு மல்லது, இந்த இராஜ்ஜியமும் அதனடியாக வந்த சிற்றின்பங்களும் பிரியங்களாகா; ஆதலின், தேவருடைய துன்பந் தொலையக்கடவது. இனி

இவ்வண்ணம் அழுது கண்ணீர்களால் நனைந்து வருந்தக்கடவீரல்லீர்; எல்லா நதிகளுக்கும் பதியாகிய ஆழ்கடல் கலக்கமுறுவதுண்டோ? என் திருத்தந்தையாரே! அடியேன் ராஜ்ஜியத்தையாயினும், இன்பங்களையாயினும், ஜானகியையாயினும் இம்மையிலுண்டாகுங் காமங்களையாயினும், வானுலகத்தையாயினும், உயிர்வாழ்வையாயினும், ஒருபொழுதும் நன்குமதியேன்; தேவரைச் சத்தியவாதியும், பொய்யுரையாதவருமாகச் செய்வதொன்றையே நன்குமதிப்பேன்; தேவர் திருமுன்பாகவே இவ்வண்ணம் சத்தியத்தின் மீதும், நல்வினையின் மீதும், ஸத்தியஞ்செய்து கொடுப்பேன்; ஆதலின், கணப்பொழுதாயினுமினிமேலிங்கிருக்க விருப்பமுறேன்; தேவர் துன்பத்தை யடக்கிக்கொள்ளக்கடவீர்; என் உறுதிக்கு மாறுதலில்லை. அன்றியும், கைகேயியாராலும் அடியேன் வனவாஸஞ் செல்லும்படி யாஜ்ஞைசெய்யப்பட்டேன்; போவேனென்று யானும் பிரதிஜ்ஞை செய்து கொடுத்தேன்; ஆதலின், என்னுடைய பிரதிஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்யும் பொருட்டும் இப்பொழுதே வனஞ் செல்வேன்; தேவர் சிறிதுந் துன்புறற்க; யாங்கள் அரணியத்தில் விநோதமாய் வாஸஞ்செய்து மகிழ்வோமல்லது துன்புறோம்; பற்பல மிருகங்களும், பக்ஷிகளும், நிறைந்த வனத்தில் விநோத முண்டாவதற்கும் ஐயமுளதோ?

పితాహి దైవతం తాత దేవతానామపి స్మృతం।
తస్మాద్దైవతమిత్యేవ కరిష్యామి పితుర్వచః॥

பிதாஹிதைவதந்தாத தேவதாநாமபிஸ்ம்ருதம் |
தஸ்மாத்தைவதமித்யெவ கரிஷ்யாமிபிதுர்வச: ||

எல்லாத்தெய்வங்களினும் தந்தையாரே முதன்மையான தெய்வமென்று ஓதப்படுகிறதன்றோ? ஆதலின், தெய்வமென்கிற எண்ணத்தாலே தேவருடைய வாக்கியத்தை யடியேன் பரிபாலனஞ் செய்வேன்; பதினன்கு வருஷங்கள் சென்றபின் மீண்டுவந்து தேவரீரைத் தண்டன் ஸமர்ப்பிக்கின்றேன்; இப்பொழுது பயனற்ற இந்த ஸந்தாபத்தை விடக்கடவீர். கண்ணீர் பெருக்கி அழுகின்ற இங்குள்ள யாவரையுந் தேற்றவல்ல தேவரே இவ்வண்ணம் விகாரங்கொண்டு வருத்தமுறலாமோ? இந்தத் திருநகரியும் நாடும் கூடிய இப்பார் முழுதும் என்னு லளிக்கப்பட்டது; இதைப் பரதனுக்குக் கொடுத்தருளக் கடவீர்; அடியேன் தேவருடைய நியமனத்தை நியமத்துடன் நிறைவேற்றுதற்பொருட்டு வனவாஸஞ்செல்வேன்; என்னு லளிக்கப்பட்ட காடு மலை யாறு கடலடங்கலுமுள்ள இப்பூமியைப் பரதன் பரிபாலனஞ் செய்யக்கடவன். தேவருடைய வரங்களிரண்டும் யதார்த்தங்களாகக் கடவன. அடியேனுக்குத் தேவருடைய நியமனத்தைப் பரிபாலனஞ்செய்யும் விஷயத்திலுள்ள மகிழ்வு ராஜ்ஜியபோகங்களில் சிறிதும் தோற்றவில்லை; ஆதலின்தேவர் சோகத்தை

விட்டுச் சந்தோஷமடையக் கடவீர். தேவரைப் பொய்யராக்கி அடியேன் ராஜ்ஜியத்தையும், போகங்களையும், சீதையையும், உயிர்வாழ்வையும், ஒருபொழுதும்விரும்பேன்; ஆதலின், தேவருடையவிரதம் சத்தியமாகித்தலைக்கட்டக்கடவது. அடியேன் வனஞ்சேர்ந்து, பல மூலங்களைப் புசித்து, ஆறு மலை முதலியவற்றைக் கண்ணுற்றும், பற்பல புதுமைகளைக் கண்டும், சுகத்தையே யடைவேன்; தேவர் இன்புறக் கடவீரென்று விண்ணப்பஞ் செய்தருளினர். மஹாராஜர் இவ்வண்ண மருளிச்செய்த தம் அருமை மகனை யாலிங்கனஞ் செய்து கொண்டு சோகம் பொறுக்காமல் மூர்ச்சை யடைகையில், கைகேயி நீங்கலாக மற்றுள்ள யாவருங் கூவியழ, சுமந்திரரும் மூர்ச்சைகொண்டு விழ, அங்குள்ள யாவரும் ஐயோ ஐயோ வென்று கூவியழுது புலம்பினுர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்துநான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

சுமந்திரர் கைகேயியைப் பழித்துரை செய்தது.



அநந்தரம் சுமந்திரர் மூர்ச்சை தெளிந் தெழுந்து கைகேயிமீது கொண்ட கோபத்தினுல், தலையை யசைத்து அடிக்கடி பெருமூச்சு விட்டுக் கைமேல் கையை வைத்து முறுக்கிப் பற்களைக் கடகடவென்று நெரித்துக் கண்களிரண்டுஞ் சிவந்து, முன்புற்றவண்ணம் மாறிக் கடுந்துன்பமும் கோபமுங் கொண்டு, மஹாராஜருடைய திருவுளத்தையும் அறிந்து, கைகேயியின் மனம் நடுக்கமுறுமாறு கொடிய வச்சிராயுதங்கள் போலவும், கூர்மையான விஷமூட்டிய சரங்கள் போலவு முள்ள கொடிய வாக்கியங்களால் கைகேயியின் மர்மங்களெல்லாவற்றையும் பிளப்பவர்போ லவளைநோக்கிக் கூறுகின்றனர்: அடி பாவி கைகேயி ! இவ்வுலக மனைத்துக்கும் பர்த்தாவும், உனக்குப் பதியுமாகிய இந்த மஹாராஜரையே நீ விட்டு விட்டமையால், உனக்கிவ்வுலகினில் செய்யத்தகாத தீச்செய்கையொன்றுமில்லை; நீ இவ்வண்ணஞ் செய்வதினுல், பதியின் கொலையும், கடையில் இக்குலத்தின் கொலையும், உன்னைச் சேருமென்று நம்பு

கின்றேன்; இல்லையாகில், மகேந்திரனைப்போலவெல்லவொண்ணாதவரும், பருவதராஜனைப்போல அசைக்க வொண்ணாதவரும், பெருங்கடலைபோலக் கலக்க வொண்ணாதவருமாகிய மஹாராஜரை இவ்வண்ணந் தாபமுறச் செய்வாயோ! நீ கோரியவற்றை யெல்லாங் கொடுப்பவரும், பர்த்தாவுமாகிய இவரை நீ யவமதி செய்யற்க; பெண்களுக்குப் பர்த்தாவின் இஷ்டப்படி நடப்பதே யன்றோ, பிள்ளையின் இஷ்டப்படி நடப்பதைக் காட்டிலும் சிறந்தது? மஹாராஜர் தபோவனஞ் சென்றபின்னர், வயதின் முறைப்படி ராஜகுமாரர்கள் ராஜ்ஜியத்தைப் பெறுவதென்னு மிக்குல முறையை நீ கெடுக்கக் கருதுகின்றாயே? உன்னுடைய எண்ணத்தின்படி பரதனே ராஜனாகி யரசாட்சி செய்யக்கடவன்; நாங்களெல்லோரும் ஸ்ரீராமபிரா னெழுந்தருளும் வனத்திற்கே செல்லுகின்றோம்; உன்னுடைய தேசத்தில் பிராஹ்மணர்களில் ஒருவராகிலும் வாஸஞ்செய்யக் கடவர்களல்லர்; அத்தன்மையதாகிய செயலையே நீ செய்ய நினைக்கின்றனையே! உன்னுடைய இத்தன்மையதாகிய நடக்கையைக் கண்டு யான் மிகவும் ஆச்சரிய முறுகின்றேன். உன் சரியையைக் கண்டு, இந்த மேதினியும் பிளந்திலதே! உன்னைக் கண்டு சிச்சிச்சி என்று இகழ்ந்து வசிஷ்டர்முதலிய பிரஹ்மரிஷிகள் அருளிச்செய்யும் சாபவாக்கியங்களுன்னை எரித்திலவே! மதுரமான கனிகள் பழுக்கும் மாமரத்தைக் கோடாலியால் வெட்டிச்சாய்த்துவிட்டு வேப்பமரத்தைப் பால்வார்த்து வளர்த்தால், அதில் மதுர ரஸ முண்டாகுமோ? உன்னுடையதன்மை உன் மாதாவின் தன்மையைப் போன்றதென்றே யான் நம்புகிறேன். வேம்பினின்றுந் தேன் ஒழுகுமோ? தாயின் குணமே மகளுக்கும் வருமென்றும், தாயைப் பார்த்து மகளைக் கொள்ளென்றும் பழமொழி யுள்ளனவன்றோ? உன் தாயினுடைய தீச்செயலை நாம் நன்றாகக் கேட்டுணர்ந் திருக்கின்றோம்; அஃதென்னவெனில்,—

உன் தந்தைக்கு ஒரு மஹாயோகி எல்லாவுயிர்களின் பாஷைகளையு மறியுமபடி வரமளித்திருந்தனர். அதனால், ஈ எறும்பு முதலிய உயிர்களின் வார்த்தைகளையும் அவர் அறிந்துகொண்டிருந்தனர். ஒருநாள் படுக்கையறையிலே படுத்திருக்கையில் அங்கோர் எறும்புசொன்ன வார்த்தையின் பொருளை அவருணர்ந்து, ஹா! ஹா! வென்று பலவாறாக நகைத்தனர். அப்பொழுது உன் தாய், உன் தந்தையை நோக்கித் தன்னைக்குறித்தே அவர் நகைத்தனரென் றெண்ணிக் கடுஞ்சினங்கொண்டு, நீர் சிரித்ததற்குக் காரணம் யாதென வினவினள். உன் தந்தை அதுகேட்டு உன் தாயைநோக்கி, அடி, என் பிராண நாயகி! நான் உன்னைப்பற்றி நகைத்திலேன்; நகைத்த காரணத்தை யானிப்போது உரைப்பதற்கில்லை; உரைப்பேனாகில் தக்ஷணமே யான் மரணமடைவே னென்பதில் ஐயமேயில்லை; ஆதலின், நீ இவ்விஷயத்தில் சீற்றங்கொள்ளற்க வென்று வேண்டிக் கொண்டனர். உன் தாய்

அம்மொழி கேட்டும் சமாதானமடையாமல் மீளவும் உன் தந்தையை நோக்கி, மஹாராஜரே! நீர் என்னைப்பற்றியே நகைத்தீர்; ஆனதுபற்றியே நீர் அதனை உரைசெய்ய மயங்குகின்றீர்; நீர் பிழைக்கினும் பிழைக்க, இறக்கினு மிறக்க; நீர் நகைசெய்த காரணத்தைச் சொல்லியே தீரவேண்டு மென்று கடுமையாகக் கூறினள். உன் தந்தை யவள் மொழியைக் கேட்டு முரைசெய்யாமல், இச்செய்தியை வரமளித்தவருடன் சொல்லினர். அம்முனிவரு மதைச் செவியுற்று உன் தந்தையை நோக்கி, கேளீர் கேகயமஹாராஜரே! நீர் மனையாளென்று அவள்மேல் அன்பினு லிதை யுரைத்து மரிக்கக்கடவீரல்லீர்; அவளே இறக்கினு மிறக்க, வருந்தினும் வருந்துக, நீர் அவளை மதிக்க வேண்டாமென் றருளிச்செய்தனர். உன் தந்தை அதுகேட்டு உன் தாயை நிராகரித்து விட்டுக் குபேரன்போல விஹாரஞ் செய்துகொண்டிருந்தனரன்றோ? அடி, தீயொழுக்க முடையாளே! நீயும் உன் தாயைப்போல இவ்வண்ணந் தீயளாகிப் பர்த்தாவைக் கொலைசெய்யவே நினைக்கின்றனை;—

సత్యశ్చాప్రవాదోయం లౌకికః ప్రతిభాతిమా।

పితౄన్ సమనుజాయన్తే నరామాతరమఙ్గనాః॥

ஸத்யச்சாத்யப்ரவாதோயம் லௌகிகঃப்ரதிபாதிமா ।

பித்ரூந்ஸமனுஜாயந்தே நராமாதரமங்கனாঃ ॥

பிள்ளைகள் தந்தையைப் போலவும், பெண்கள் தாயைப் போலவும் பிறக்கின்றனர்களென இவ்வுலகில் வழங்கும் பழமொழி எனக்குண்மை யெனவே தோற்றுகின்றது; ஆகிலும் இப்பொழுது நீ தாயைப்போலக் கொடியளெனப் பெயர் பெறாமல், இந்த எண்ணத்தை விட்டுவிடு; நம்மஹாராஜர் அருளிச்செய்வதைக்கேட்டுணர்; பர்த்தாவின் திருவுளத்தின்படி நடந்து எங்களெல்லோர்க்குந் தஞ்சமாயிரு; நீ பாவிகளின் துர்ப்போதனையைக் கேட்டு, தேவராஜன்போல இவ்வுலகமனைத்துக்கு முனக்கும் பர்த்தாவாகிய இம்மஹாராஜரை, மூத்தோனையோட்டி இளையோனுக்குப் பட்ட மளித்தாரென்று யாவரும் பழிக்கும்படி செய்யற்க; உன்பொருட்டளித்த வரத்தையும் மஹாராஜர் பொய்யாகச் செய்யார்; இவர் மண்டலாதிபதி யாதலின், உனக்கிந்த ராஜ்ஜியத்துக்குத் தகுந்த தில்லை யாயினும், மற்றுள்ள தேசங்களை யாயினும், கொடுத்தருள் செய்வார்; ஸ்ரீராமபிரான் மூத்தோனும், கொடையாளனும், வல்லமையுடையோனும், தருமங்களைப் பாதுகாப்போனும், எல்லா வுயிர்களையும் காக்கவல்லவனும், சிறந்த தோள்வலியுள்ளவனு மாதலால், இத்திருவயோத்திக்கு இப்புருஷோத்தமனே அபிஷேகங்கொண்டரசனுகைக் கடவன். அம்மா கைகேயி! ஸ்ரீராமபிரான் தந்தையைவிட்டு வனத்துக்கெழுந்தருளி

விடுவானாகில், உனக்கு அழிவில்லா இகழ்வு இவ்வுலகமெங்கும் பரவுமந்தோ! ஆதலின், அரசுக்குரியனான ஸ்ரீராமபிரானே இந்த ராஜ்ஜியத்தைப் பாதுகாத்து வரக்கடவன். இதுவிஷயத்தில் நீ பொறுமையையும் துன்பத்தையும் அடையவேண்டாம். ஸ்ரீராமபிரானை விட்டு வேறொருவனும் இவ்வயோத்தியையாள வல்லவனல்லன். ஸ்ரீராமசந்திரன் இளவரசாகி ராஜ்ய பாரந் தாங்குவனாயின், மஹாராஜர் முன்னோர் நடந்த முறையை நினைந்து தவமியற்ற மனமகிழ்ந்து வனம்புகுவாரென்றனர். இவ்வண்ணம் நல்வார்த்தைகளாலும், வன்மொழிகளாலும், சக்கரவர்த்தி முன்பாகச் சுமந்திரர் கைகுவித்துக்கொண்டு கைகேயியைப் பலவாறாகக்கலக்கிப் பயமுறுத்தியும், கைகேயி சிறிதேனும் மனக்கலக்க முற்றிலள்; சிறிதுந் துன்பமுமுற்றிலள்; அவளது முகத்திலும் சிறிதும் நாணத்தாலாயினும் அச்சத்தாலாயினும விகாரமுந் தோற்றவில்லை.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தைந்தாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## முப்பத்தாறாவது ஸர்க்கம்.

தசரதமஹாராஜர் கைகேயியை இகழ்ந்து பயமுறுத்தியது.

---

இவ்வண்ணம் சுமந்திரர் சொல்லியவார்த்தையைக் கேட்டும் மனமிரங்காமல் கைகேயி யொரேபிடியா யிருப்பதைக்கண்டு, தசரதமஹாராஜர் சத்தியத்தால் கட்டுண்டமையால், அவளை நிராகரிக்க வகையின்றிச் சுமந்திரரை நோக்கிக் கண்ணீர் ததும்பப் பெருமூச்சுவிட்டுரைக்கலுற்றனர். ஓ சுமந்திரரே! மிகுந்த பொருள்களுடனும், இரத்தினங்களுடனும், மற்றுமுள்ள சிறந்த பண்டங்களுடனுங் கூடி, நால்வகைப் படைகளும், இப்பொழுதே ஸ்ரீராமபிரானுடன் செல்லும்படி சித்தஞ்செய்யக்கடவீர். மிகுதியும் அழகுடைய பொதுமகளிர்களும், மிகச்செல்வமுடைய வர்த்தகர்களும், நம் அருமைமகனது படைகளை மகிழ்விக்கும்படி செல்லக்கடவர்கள். நம் செல்வமைந்தனை யடுத்துப் பிழைப்பவர்களுக்கும், இவன்கண்டு உகக்குந் தோளாண்மையுள்ள சூரர்களுக்கும், மிகப் பொருளளித்து உடன் செல்லும்படி திட்டஞ்செய்யக் கடவீர். சிறந்த படைக் கருவிகளையும், திறமையுள்ள நகரத்தார்களையும், வண்டி முதலிய வாஹனங்களையும், கானகத்தில் திரியவல்ல வேடர்களையும், உடனனுப்பக் கடவீர். ஸ்ரீரகுகுலதிலகன் இவ்வண்ணம் கானகஞ் செல்வானாகில், அங்குள்ள மிருகங்களையும், யானைகளையும், சிங்கம், புலி, கரடிகளையும், மற்றுமுள்ள ஜந்துக்களையும், வேட்டையாடி யடித்தும், அங்குள்ள தேன்களை நுகர்ந்தும், பற்பல நதிகளைக் கண்ணுற்றும், மகிழ்வுறுவான்; நம்மை நினைந்து வருந்தான்.

அன்றியும், இப்பொழுது நம்மிடத்திலுள்ள தானிய வகைகளும், பொன் வெள்ளி முதலிய நாணயங்களும், ஸ்ரீராமபிரானுடன் செல்லக்கடவன. என் அருமைச்செல்வமைந்தன் வனத்திலும் யஜ்ஞயாகங்கள் செய்துகொண்டும், பூரி தக்ஷிணை கொடுத்துக்கொண்டும், பற்பல ரிஷிகளைச்சேவித்துக் கொண்டும், சுகமாக வாஸஞ்செய்க. பரதனும் இவ்வயோத்திமாநகருக் கிறைவனுகிப் பரிபாலனஞ் செய்யக்கடவன். ஆதலின், ஸ்ரீராமபிரானைப் பிரயாணஞ்செய்தனுப்பிவிடக் கடவீரென்றனர். இவ்வண்ணம் சக்கரவர்த்தியார் உரைசெய்தவளவில், கைகேயி அதுகேட்டுப் பயமுற்று முகம்வாடித் தொனியொடுங்கி நடுக்குற்றுத் துன்பமடைந்து மகாராஜருக்கெதிராக அவரைநோக்கி, மஹாராஜரே! ஓ ஓ! இது நல்ல அழகு; சிறந்த பண்டங்களையும், படைகளையும், பொருள்களையும், ஜனங்களையும், ராமன் பின் செல்ல விடுவீராயின், அப்பொழுது ஸாரமின்றி யுறங்கிக் கிடக்கும் இந்த ராஜ்ஜியம், ஸாரமெடுக்கப்பட்ட சாராயத்தின் தேட்டைபோல் உபயோகமற்ற தாகுமன்றோ? அதனைப் பரதன் மாத்திரம் விருப்புற்றுப் பெறுவனே? ஒருகாலும் பெறுனென்று சிறிதும் நாணமின்றி யுரைசெய்தனள். அது கேட்டுச் சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி, அடிகொடியாளே! தீச்செயலினளே! உன் சொல்லின்படியே ராமனைக் காட்டி லோட்டவும், பரதனுக்குப் பட்டங்கட்டவும், முயற்சிசெய்கின்ற என்னை மறுபடியும் மேன்மேலும் ஏன் எதிர்த்து வருத்துகின்றனை; நீ ஸ்ரீராமன் வனவாஸம் போகவேண்டுமென்று வரங்கேட்டனை யன்றி, அவனுடன் ஒருவரும் போகக்கூடாதென்று வரங்கேட்க வில்லையே! ஆதலின் ஸ்ரீராமபிரானுடன் சேனைகள் போகக்கூடாதென்று ஏன்தடுக்கின்றனையென்று மிகச் சினமுற்றுரைத்தனர். கேகயி அதுகேட் டிருமடங்கு கோபங்கொண்டு பர்த்தாவை நோக்கி, கேளீர் மஹாராஜரே! உங்களுடைய குலத்தில் சிறந்தவராகிய ஸகரசக்கரவர்த்தியார் தமக்கு மூத்த குமாரனுகிய அஸமஞ்சனைக் காட்டிலோட்டிவிட வில்லையா? அவ்வண்ணமே நீங்களும் ராமனைத் தனியே காட்டிலோட்டிவிடக் கடவீர்களென் றுரைத்தனள். அதைக்கேட்டு மஹாராஜர், சீச்சீ! அரிதரிது! உன் ஜன்மத்தைச் சுடுகவென்று இகழ்ந்தனர். சுற்றுமுள்ள ஜனங்களும், அவள் வெட்கமுறும்படி சீச்சீ என்றிகழ்ந்தார்கள். புத்தியில்லாதவளாதலால் அவள் இதை யறிந்திலள். அப்பொழுது மிக மூப்புற்றவரும், மந்திரிகளுள் சிறந்தவரும், மஹாராஜருக்கு மிகவும் பிரியமானவருமாகிய சித்தார்த்தரென்பவர் கைகேயியை நோக்கி, அடி மதிகெட்டவளே! அஸமஞ்சன் ஊரிலுள்ள பாலகர்களெல்லாரையும் எடுத்துச் சரயூநதியில்போட்டு அவர்கள் மூழ்கி நீர்குடித்திறப்பதைப் பார்த்து நகைத்து மகிழ்ந்துகொண்டிருந்தனன். அதனல் நகரத்தாரெல்லோரும் சினமும் சோகமுங் கொண்டு ஸகர மஹாராஜரைக் கண்டு, மஹாராஜரே! அஸமஞ்சனையாவது வைத்துக்கொள்ளும், எங்களையாவது வைத்துக்கொள்ளும்; அவனிருக்கும் பக்ஷத்தில் நாங்

கள் ஓடிப்போகின்றோமென்று முலறையிட்டார்கள். ஸகரசக்கரவர்த்தி அது கேட்டு அவர்களை நோக்கி, நீங்கள் இவ்வண்ண முரைப்பதற்குக் காரணம் யாது? உங்களுக் கென்ன பயமுற்றதென்று வினவ, ஜனங்கள் ராஜனை நோக்கி, எம்மரசே! உம்முடைய மூத்தகுமாரன் விளையாடிக்கொண்டிருக்கிற எங்கள் குழந்தைகளை யெடுத்துச் சரயூநதியில் போட்டு, மடமையால் மகிழ்ச்சி கொள்ளுகின்றான். இளவரசன் செய்வதை நாங்கள் எப்படித்தடைசெய்வோம், இதற்குத் தேவரே தஞ்சமென்றனர்கள். ஸகரசக்கரவர்த்தி அது கேட்டு, ஜனங்களது நன்மைக்காகப் பிழைசெய்தோரைத் தண்டிக்கவேண்டுமென்னும் நீதியின்படித் தன் பிள்ளையைப் பத்தினியுடனும் பரிஜனங்களுடனும் தேர்மீதேற்றி, உயிருள்ளவரையில் காட்டிலேதானே திரியும்படியாக ஓட்டிவிட்டார். அதனால் அவன் காட்டில் காய் கிழங்குகளைத் தின்று திரிந்தனன். தருமசிந்தையுள்ள அரசன் பிள்ளையேயாயினும் பிழைசெய்யின் காட்டிலோட்டிவிட வேண்டுவதே. அஸமஞ்சனைப்போல ஸ்ரீராமபிரான் என்ன குற்றஞ் செய்தான்? அதனை யாவரு மறியும்படி சொல்லி, அதன் பிறகு ஸ்ரீராமபிரானைக் காட்டிலோட்டி விடக்கடவை. ஸ்ரீராமனிடத்தில் சிறிதேனும் துர்க்குணத்தை நாங்கள் கண்டிலோம். சந்திரனிடத்திலேனும் சிறிது களங்கமுள்ளது, ஸ்ரீராமசந்திரனிடத்தில் ஒருபொழுதுங் களங்கமுண்டாகமாட்டாது. அம்மா கைகேயி! நீ சிறிதாயினும், ஸ்ரீராமபிரானிடத்தில் தோஷத்தைக் கண்ணுற்றனையாகில், அதனை யுரைசெய்; இப்பொழுதே ஸ்ரீராமபிரானையோட்டி விடுவோம். சிறிது குற்றமுமின்றி நற்குண நற்செய்கை யுடையவரைத் துரத்துவது கொடிய பர்வமன்றோ? அது செய்பவன் இந்திரனேயாயினும், அவனும் தன் பட்ட மிழந்து நரகில் வீழ்ந்துழல்வன். ஆதலின், அம்மா கைகேயி! ஸ்ரீராமபிரானுடைய அபிஷேகத்தைத் தடைசெய்யற்க. உனக்குத் தருமசிந்தை யில்லாவிடினும், உலகத்தார்க்காயினும் அஞ்சவேண்டாமா? ஆதலின் இனி இந்தக் கெடுமதியைப் பற்றற விட்டு, உலகத்தார் உன்னை இகழாமல் காத்துக்கொள்ளக் கடவை யென்றிடித்துரைத்தனர். மஹாராஜரும் அது கேட்டு மீளவும் கைகேயியை நோக்கி, அடி பாவீ! இந்தச் சித்தார்த்தருடைய வார்த்தையையும் இதமெனக் கொண்டிலையா? உனக்கும், எனக்கும் யாவர்க்கும் இத மித்தன்மைய தென்பதையும் அறிந்திலையோ? உன் செயலைக்கண்டு, நல்லோர்களெல்லோரு மிகழ்ந்து நகைக்குங்காலம் நேர்ந்ததந்தோ! அடி பாதகி! நானும், ராஜ்ஜியத்தையும் போகத்தையும் செல்வத்தையும் விட்டு, என் செல்வமகனுடன் வனமே செல்வேன்; நீ பரதனுக் கபிஷேகஞ்செய்வித்து நீங்கள் இருவரும் உலகாண்டின்புற்று வாழுங்களென்று, கடுந்துன்பமும் சினமுங்கொண்டு நடுங்க வுரைசெய்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தேழாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் கைகேயி கொடுத்த மரவுரியை யுடுத்ததும், சீதாபிராட்டியாருக்கும் மரவுரி கொடுக்க அதனை வேண்டாமென்று வஸிஷ்டர் தடுத்துக் கைகேயியை யிகழ்ந்ததும்.

சக்கரவர்த்தித் திருமகனும் சித்தார்த்தர் வாக்கியத்தைத் திருச்செவி சார்த்தித் தன் திருத்தாதையை நோக்கி, தந்தையரே! போகங்களைத் துறந்து காடுசேர்ந்து காய் கிழங்குகளை யுண்டு மூவகைக்குற்றமு மற்று ரிஷிபோல இருக்கப்போகின்ற எனக்குப் படைகளாலும் பொருள்களாலும் பரிஜனங்களாலும் பயன்யாதுளது?—

యోహిదత్వాద్విపశ్రేష్ఠం కక్ష్యాయాంకురుతేమనః।
రజ్జుస్నేహేనకిన్తస్య త్యజతఃకుఞ్జరోత్తమం॥

யோஹிதத்வாத்விபச்ரேஷ்டம் கக்ஷயாயாம்குருதேமந: |
ரஜ்ஜுஸ்நேஹேநகிந்தஸ்ய த்யஜத:குஞ்சரோத்தமம் ||

யானையை விற்றுவிட்டு, அதைக்கட்டுங் கயிற்றைக் கொடுப்பதில்லையென்று எவனேனும் அதில் ஆவலுறுவனோ? யானையை விற்றபின் அக்கயிற்றினால் அவனுக்கு என்னபயன்? அதுபோல ராஜ்யத்தைத் துறந்து வனம்போகின்ற எனக்கு இத்தானைகளினு லென்னபயன்? ஆதலின் இவையெல்லாம் பரதனுக்கே உரியனவாகக்கடவன; யான் அனுமதி கொடுக்கின்றேன். பதினான்குவருஷம் யான் வனவாசஞ்செய்யப் போகின்றமையால், மரவுரிகளையும் மண்வெட்டி புட்டிற்கூடைகளையும் கொடுத்தருளக் கடவீர்கள். இவையே எனக்கு வேண்டுங் கருவிகளென வருளிச்செய்தனர். உடனே கைகேயி அந்தச் சபைநடுவில் சிறிதும் நாணமின்றித் தானே நேராக மரவுரிகளைக் கொணர்ந்து ஸ்ரீராமபிரானை நோக்கி, இதனை உடுத்துக்கொள்ளென வுரைத்தளித்தனள். ஸ்ரீராமசந்திரரும் அவைகளை வாங்கிக்கொண்டு பீதகவாடையை அவிழ்த்து விட்டு, ரிஷிகள்போல அம்மரவுரியை யுடுத்துக்கொண்டனர். இளையபெருமாளும் அவ்விடத்திலே தானே தன் பீதாம்பரத்தை யவிழ்த்துவிட்டு மரவுரிதரித்து நின்றனர். வெண்பட்டணிந்த ஸீதாபிராட்டியாரும், தாமுடுப்பதற்காகக் கைகேயியால் அளிக்கப்பட்ட மரவுரியைக்கண்டு, பெண்மான் தன்னைப்பிடிப்பதற்காகப் போட்ட வலையைக் கண்டாற்போல நடுக்கமுற்று, பழக்கமில்லாமையால் அதை யுடுக்கத்தெரியாமல் பிறர் நகைப்பார்களே யென்று வெட்கமுற்றனளாயினும், பதிவிரதா தருமத்தை யறிந்தவளாதலால் அதைத் தம் பர்த்தாவைப்போல தாமும் உடுத்துக்கொள்ளத் துணிந்து கந்தருவராஜன்போன்ற தன் நாயகனை நோக்கி, என் பிராணநாதரே!

வனத்தில் வாஸஞ்செய்கிற ரிஷிகள் மரவுரியை எப்படி யுடுத்துக் கொள்ளுகின்றார்களோ, அது எனக்குத் தெரிந்திலதே யென்றுரைத்து, அதிலொன்றனைத் தம் கண்டத்தில் போட்டுக்கொண்டு திகைத்து வெட்கி நின்றனள். ஸ்ரீராமபிரான் உடனே யதனைப் பிராட்டியாரிடையில் வெண்பட்டின்மேலுடுத்தியருளினார். அதுகண்டு அங்குள்ள கோஸலையார் முதலிய தாய்மார்கள் கண்ணீர்விட்டழுது ஸ்ரீராமபிரானை நோக்கி, அடா, எம் அருமைத்திருமைந்தா! பாவி கைகேயி உன்னைமாத்திரம் வனம்போகும்படி வரங்கேட்டாளே யன்றிச் சீதையும் வனம்புகும்படி வரங்கேட்டிலளே! தந்தையின் வாக்கியத்தின்படி நீ வனம் சென்றாலும், இவளை இங்கு விட்டு விட்டுச் செல்லுக; இவளைக் காண்பதினாலாயினும், எங்களுடைய கண்கள் பயன்பெற்று மகிழ்வுற்றிருக்கக்கடவன. லக்ஷ்மணனைத் துணையாகக் கொண்டு நீ வனஞ் செல்லுக. இவள் ரிஷிபோல வனத்தில் வாஸஞ்செய்யத் தக்கவளல்லளே! ஸீதை இங்கே நிற்கக்கடவள்; எங்களுடைய வேண்டுதலைப் பயனுளதாகச் செய்க. தருமசிந்தை யுடையவனாதலால், தடைசெய்யினும் நீ நில்லாயென்று வேண்டிக் கொண்டனர்கள். அருளாளனாகிய ஸ்ரீபரந்தாமன் அவர்களுடைய மொழியைக் கேட்டுந் தம்மைப் பிரிந்து ஸீதை நில்லாளென்னு முறுதியால், அதற்குடன்படாமல் அம்மரவுரியைக் கட்டிவிட்டனர். இவ்வண்ணம்சீதாதேவியார் சீரத்தையெடுத்து உடுத்துக் கொள்ளும்படி நிற்கையில், வசிஷ்டமஹா முனிவர் மிகத்துன்பமும் கோபமுங்கொண்டு அதனைத்தரிக்க வேண்டாமெனப் பிராட்டியாரைத் தடுத்துக் கைகேயியை நோக்கி, அடி மதிகெட்டவளே! குலத்தைக் கெடுக்கப் பிறந்து புகுந்தவளே! அச்சம் நாண மிரண்டுமின்றி நீதி தப்பி நடப்பவளே! அடி பாவீ! என்னவரம்புகடந்து செல்லுகின்றனை? மஹாராஜரை வஞ்சனைசெய்து ஸ்ரீராமபிரானை வனஞ்செல்ல விடுத்தது மன்றிச் சீதையையும் மரவுரியணிந்து வனஞ்செல்ல விடுகின்றனையே! அடிகொடுஞ்செய்கையுடையவளே! ஸீதாதேவி யொருகாலும் வனஞ்செல்லத் தக்கவளல்லள்; ஸ்ரீராமபிரானுக்குரிய சிங்காஸனத்தில் ஸீதாதேவியே யிருந்து அரசுசெய்யக்கடவள்.—

ఆత్మాహిదారాస్సర్వేషాం దారసంగ్రహవర్తినాం।
ఆత్మీయమితిరామస్య పాలయిష్యతిమేదినీం॥

ஆத்மாஹிதாராஸ்ஸர்வேஷாம் தாரஸங்க்ரஹவர்த்திநாம்।
ஆத்மீயமிதிராமஸ்ய பாலயிஷ்யதிமேதினீம்॥

இல்லறம் பூண்ட யாவர்க்கும் பத்தினியென்பவள் ஆத்துமாவன்றோ? ஆதலின், ஸீதாதேவியே ஸ்ரீராமபிரானுக்குரிய இப்பூமி தனக்குமுரியதே யென்று பரிபாலனஞ் செய்யப் போகிறாள். ஒருகால் ஸீதாதேவி

யும் ஸ்ரீராமபிரானுடன் வனமே செல்வாளாகில், நாங்களும் உடன் செல்வோம், இந்நகரிலுள்ளவரெல்லோரும் செல்வார்கள்; சேனாதிபதிகள் முதலானோரோடு படைகளும் செல்லும்; இவ்வண்ணம் யாவருடனும் ஸ்ரீராமபிரான் வனத்திலெழுந்தருளி யிருக்கையில், பரதனும் சத்துருக்கனனுடன் இச்செய்திகேட்டுத் தமையனிடஞ்சேர்ந்து, தானும் மரவுரியுடுத்து ஸ்ரீராமபிரானுக்குப் பணிவிடைசெய் திருப்பானே யல்லது, உன் சொல்லின்படி யபிஷேகங் கொள்ளான். இவ்வகையாக யாவருக்குந் தீமைசெய்து ஒருவருமின்றிப் பாழடைந்த இவ்வயோத்தியிலிருந்து மரங்களுடன் கூடி நீ யொருத்தியே அரசுசெய் திருப்பாய்.

నహితద్భవితారాష్ట్రం యత్రరామోనభూపతిః।
తద్వనంభవితారాష్ట్రం యత్రరామోనివత్స్యతి॥

நஹிதத்பவிதாராஷ்ட்ரம் யத்ரராமோநபூதி:।
தத்வனம்பவிதாராஷ்ட்ரம் யத்ரராமோநிவத்ஸ்யதி॥

ஸ்ரீராமபிரான் அரசாகிப் பரிபாலனஞ் செய்யாத தேசம் காடாகுமன்றி நாடாகாது; ஸ்ரீராமபிரான் எவ்விடத்தி லெழுந்தருளி வாஸஞ்செய்தருள்வனோ, அது காடாயினும் திருநாடாகு மல்லது காடாகாது. தந்தை திருவுளமகிழ்ந் தளித்தருளாத இந்த ராஜ்ஜியத்தைப் பரதனுமொருகாலும் அரசாகிப் பரிபாலனஞ் செய்யான்; அவன் உன்னிடத்தில் மஹாராஜருக்கே பிறந்திருப்பானாகில், உன்னிடத்திலும் பிள்ளைபோலிருந்து உன் சொல்லைக்கேட் டரசு செய்யான். அடி பாவீ! நீ பூமியிலிருந்து ஆகாசத்தில் எழும்பி வீழ்ந்தாலும் (துள்ளிப் பறந்தாலும்), தம்முன்னோர் முறைமையை நன்குணர்ந்து தேர்ந்த பரதன் தந்தையின் திருவுளத்திற்கு வேறாகச் செய்யான். ஆதலின், உன் பிள்ளைக்கு நலஞ்செய்ய நினைத்துக் கெடுதியையே விளைத்தனை.

లోకేహిసనవిద్యేత యోనరామమనువ్రతః।
ద్రక్ష్యస్యద్యైవకైకేయి పశువ్యాళమృగద్విజాన్॥
గచ్ఛతస్సహరామేణ పాదపాంశ్చతదున్ముఖాన్॥

லோகேஹிஸநவித்யேத யோநராமமனுவ்ரத:।
த்ரக்ஷ்யஸ்யத்யைவகைகேயி பசுவ்யாளம்ருகத்விஜாந்॥
கச்சதஸ்ஸஹராமேண பாதபாம்ச்சதுந்முகாந்॥

அடி கைகேயி! ஸ்ரீராமபிரானே தஞ்சமென்று அவன் திருவுளத்திற்கிசையாது நடப்பவர் இவ்வுலகினில் நீ யொருத்தி தவிர வேறொருவருமில்லையன்றோ? ஸ்ரீராமபிரான் இப்பொழுது அரணியத்திற் கெழுந்தருளுகையில்,

பசு பக்ஷி ஸர்ப்பாதிகளாகிய அஃறிணையுயிர்களும், பிரஹ்மக்ஷத்திராதிகளாகிய உயர்திணை உயிர்களும், ஸ்ரீராமபிரானுடைய பிரிவைப் பொறாமலுடன்செல்வதையும், மரம் முதலிய அசையா வுயிர்கள் உடன் செல்லத் திறமையின்மையால், தளிர்கள் வாடி மலர்கள் கருகிக் கனிகள் சூம்பி, ஸ்ரீராமபிரானெழுந்தருளுந் திசைநோக்கிச் சாய்ந்து கிடப்பதையும் கண்டு, என்சொல்லுண்மையென்று நீயே அறிந்துகொள்ளப் போகின்றாய். ஆதலின், நீ இந்தக் கொடுமையை விட்டு, உன் செல்வமருமகளாகிய ஸீதாதேவிக்குச் சிறந்த ஆடையாபரணங்களை யளித்து, இம்மரவுரியை யுடுக்காமல் தடுக்கக்கடவை; மரவுரிஇவளது மேனிக்குத் தகுதியற்றது என்று அம்மரவுரியை உடுக்கவிடாமல் தடுத்தருளி, மீளவும் கைகேயியைநோக்கி, கேகயராஜன் மகளே! நீ ராமனொருவனே வனம் செல்லக் கடவனென்று தானே வரங்கேட்டனை?. ஸீதாதேவி சிறந்த ஆடையாபரணங்களை யணிந்து சிங்காரஞ் செய்துகொண்டு, சிறந்த வாஹனங்களுடனும் பரிஜனங்களுடனும் சிறந்த தனதானியாதி வஸ்துக்களுடனும் கூடி, ஸ்ரீராமபிரானுடன் வனம் செல்லத் தடையில்லையே. இது கூடாதென்று நீ முன்னே வரங்கேட்டிலையன்றோ? என்றருளிச்செய்தனர். இவ்வண்ணம் குலகுருவாகிய வஸிஷ்டமஹா யோகியருளிச்செய்கையிலும், கைகேயி யுடன்பட்டிலளே யென்பதனாலும், பர்த்தாவுடுப்ப துடுத்து உண்பதுண்டு மகிழ்வதே கற்புடையாளுக் குரியதென்னுந்தருமத்தைக் கருதியவளாதலாலும், பிராட்டியார் அம்மரவுரியையுடுப்பதில் மனங்கொண்டில ளாயினளில்லை.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்.

கைகேயியையிகழ்கின்ற தந்தையைநோக்கி ஸ்ரீராமபிரான் தன் மாதாவைப் பாதுகாக்கும்படி வேண்டி விண்ணப்பஞ் செய்தது.

---

அருளுருவாகியபிராட்டியார் இவ்வண்ணம் அநாதைபோல மரவுரியை யுடுக்கையில், அங்குள்ள ஜனங்களெல்லாருந் தசரதரைச் சீ யென்றிகழ்ந்து புலம்பினார்கள். அதனைச் செவியுற்றுமஹாராஜரும் மிகவுஞ்சோகங்கொண்டு, உயிர்வாழ்வதிலும், தருமத்திலும், புகழிலும் ஆசையற்று, வெப்பமாக நெட்டுயிர்த்து, அந்தக் கைகேயியை நோக்கி, அடிபாவீ கைகேயி! சீதாபிராட்டி மரவுரியுடுத்துச் செல்லத்தக்கவளல்லள்; காட்டுவாகைப் பூவினும் மென்மையுடையாளும், சிறுவயதுடையாளும், சுகத்தையே யல்லது துக்கத்தை இதுவரை யடையாதவளு மாதலால், ஸீதை வனவாஸஞ் செய்யத் திறமையுள்ளவளல்லளென்று வஸிஷ்ட மஹாமுனி யருளிச்செய்த துண்மையே;

ஜனகமஹாராஜன் திருமகளாகிய இவள் யார்க்கு என்ன அபகாரஞ் செய்தனள்? பதிவிரதா சிரோமணியாகி ஒரு பாவமுமறியாத இப்பெண்மணி யாரோ ஒரு துறவிபோல மரவுரியுடுத்து இச்சபை நடுவில் நிற்கும்படி ஏன் செய்கிறாயடி பாவி! சீதை மரவுரிகளை யொழிந்து சிறந்த ஆடையணிகளை யணிந்து கணவனுடன் மகிழ்ந்து வனம் செல்லக் கடவள். இவள் மரவுரி யுடுக்கும்படி நான் வரங்கொடுத்திலேன். அப்பொழுது நானிறக்கும்படியான தருணம் நேர்ந்தமையால், நீ கேட்டவரந் தருவேனென உனக்கு மிகக் கொடுமையான பிரதிஞ்ஞைசெய்து கொடுத்து விட்டேன்; நீ சிறிதும் விவேகமற்றவளாகி இத்தருணத்தில் இராமனுக்கு வனவாஸமும் பரதனுக்கு அபிஷேகமும் செய்விக்குமாறு அவ்வரங்களைக் கேட்கலாயினாய். மூங்கிலிலுண்டாகிய தீவே தீப்பற்றி அம்மூங்கிலை யெரிக்குமாறு, முன்பு யான் கொடுத்த வரமே இப்பொழுது என்னை யெரிக்கின்றது. அடி பாவி! ஸ்ரீராமசந்திரன் உன் விஷயத்தில் என்ன அபராதம் செய்தனனோ யானறியேன்; அவன் அங்ஙனமே செய்ததாக நீ நினைத்தாலும், அடி கெட்டவளே! சீதையைக் காட்டுக்கனுப்பும்படி அவளிடத்தில் என்ன குற்றங்கண்டிருக்கின்றனை? மான்பேடு போல நீண்டு அகன்று மலர்ந்த கண்களையுடையவளும், யாவரும் புகழத்தக்க நற்குண நற்செய்கை யுடையவளுமாகிய சீதை உனக்கு என்ன அபகாரஞ் செய்தனள்? அடி பாவி! நீ ஊழிகாலம் வரையும் கும்பீபாக முதலிய மஹாநரகங்களில் மூழ்கி மீளாமைக்கு ஸ்ரீராமனைக் காட்டிலோட்டுகிற பாவமொன்றே போதுமே; அவ்வளவோடு நில்லாது சீதைக்கு மரவுரியுடுத்துதல் முதலாக நீ செய்யும் இக்கொடும்பாதகங்களால் உனக்கு வேறென்ன துர்க்கதி நேரிடப்போகிறதோ யானறியேன். ஸ்ரீராமசந்திரன் முதலில் இங்கபிஷேகத்தின் பொருட்டு வருகையில், நீ என் முன்பாக என்ன வேண்டினையோ அதுமாத்திரமே யான் உனக்கு வரங்கொடுத்தது; அதைவிட்டு இப்பொழுது ஸீதையும் மரவுரியுடுக்கக் காணவிரும்புகின்றனையன்றோ? இதனால் நீ நரகத்தையடையவே நினைக்கின்றனை போலும் என்றனர். இவ்வண்ணம் மஹாராஜர் வெகுவாகப் புலம்பிச் சோகக் கடலிலழுந்தி அதன் கரைகாணாமல், ஸ்ரீராமபிரானுக்குற்ற துன்பத்தையே நினைந்து தரையில் வீழ்ந்து தவித்தனர். அக்காலையில், வனத்திற்குச்செல்லச் சித்தமாக நின்ற ஸ்ரீராமபத்திரர் தரையில் வீழ்ந்து தலைகுனிந்து புலம்புகின்ற தந்தையை நோக்கி, என் திருத்தாதையரே! இதோ இருக்கின்ற என் தாயாகிய கோஸலை மூப்படைந்தவளாயினள்; இவள் கபடம் அறியாதவள்; தேவர் இவரை யுபேக்ஷைசெய்யுங்காலும், தேவரை இகழாமல் மகிழ்ந்திருக்கும் கற்புடையவள்; இவள் இதுவரையில் துன்பமென்பதை யறியாத என்னைப் பிரிவதனால் சோகஸாகரத்தில் மூழ்கி மிகவும் வருத்தமுறுவள், இவள் அவ்வாறு வருந்தாதவண்ணம் தேவர் முன்னினும் அதிகமாகப் பெருமைப் படுத்தித் தேற்றி யருளக்கடவீர்.

தேவர் செய்யும் ஆதரவினுல், என்னை விட்டுப் பிரிவதனுலாய புத்திர சோகத்தை எங்ஙனம் அடையாமலிருப்பளோ, அங்ஙனஞ் செய்யக்கடவீர் ; எந் தந்தையரே ! நான் வனஞ்சேர்ந்தபின் இவர் என்னை நினைந்து துன்புற்று உயிரை விட்டு எவ்வண்ணம் லோகாந்தர மடையாதிருப்பளோ, அவ்வண்ணம் தேவரீவரைத்தேற்றி யருளக்கடவீரென்று வேண்டி விண்ணப்பஞ் செய்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

மஹாராஜர் கட்டளையின்படி சுமந்திரர் திருத்தேர் கொணர்ந்து ஸ்ரீராமபிரானைப் பிரயாணப் படுத்தியது.

---

இவ்வண்ணமருளிச்செய்த ஸ்ரீராமபிரானுடைய திருவாய்மொழியைக் கேட்டும், அவர்பூண்ட முனிவேஷத்தைப் பார்த்தும், மஹாராஜர் பத்தினிகளுடன் மதிமயக்கமுற்றுச் சோகக்கடலில் மூழ்கி மூர்ச்சையடைந்தனர். அத்துயரத்தினுல் தவிப்புண்டவராகி ஸ்ரீராமனைப் பார்க்கவேனும், அவருடன் பேசவேனுந் திறமையற்றவராயினர். அங்ஙனமே முகூர்த்தகாலம் பிரஞ்ஞையற்று விசனத்தினுல் மிகவருந்தி, பிறகு ஸ்ரீராமபிரானையே நினைந்து புலம்பலாயினர்.

మన్యేఖలుమయాపూర్వం వివత్సాబహవఃకృతాః।
ప్రాణినోహింసితావాపి తస్మాదిదముపస్థితం॥

மந்யேகலுமயாபூர்வம் விவத்ஸாபஹவஃக்ருதாஃ |
ப்ராணிநோஹிம்ஸிதாவாபி தஸ்மாதிதமுபஸ்திதம் ||

அந்தோ ! நான் முற்பிறப்பில் பல பசுக்களைக் கன்றுகளுடன் சேரவிடாமல் பிரித்தோட்டினேன் போலும், அநேகமுயிர்களை வருத்தினேன் போலும், அப்பாவத்தினுலேதான் இவ்வகைத் துன்பம் எனக்கு நேர்ந்தது. மரணகாலம் வந்தாலன்றித் தேகத்தை விட்டுப் பிராணன் போகாதென்பது உண்மையே. கைகேயியால் இங்ஙனம் பீடிக்கப்படுகையிலும் எனக்கு மரணம் நேர்ந்திலதே ! என் அருமைமகன் பீதாம்பரத்தைவிட்டு மரவுரியுடுத்து அக்கினிக்கிணையாக என்முன் நிற்கக் காண்கையிலும் என்னுடலை விட்டு உயிர் நீங்காதிருக்கின்றதே ; தன் காரியமே பெரிதாகக்கொண்டு பிடிவாதஞ் செய்கின்ற இக்கைகேயி ஒருத்திக்காகவன்றோ, இவ்வாறு துயருற நேர்ந்தது! என்றிவ்விதமாகப் புலம்பிக் கண்ணீர் கண்களை மறைக்க, ராமாவென் றொருதரமுரைத்தனர்; அப்புறம் வார்த்தைசொல்லத் திறமையற்று மூர்ச்சை யடைந்தனர். பின்பு தெளிந்தெழுந்து, கண்களில் சோகநீர்பெருகச் சுமந்திரனை நோக்கி, ஸாரதி ! நீர் ஸ்ரீராமச்சந்திரன் ஏறிச்செல்லத்தக்க திருத்தேரைக்

பட. 45.



தேவிகள். தசரதமஹாராஜ். பொக்கிஷ்தாரர். ஸ்ரீராமர். ஸீதாதேவி. இலக்ஷ்மணர்.

கொண்டு வந்து, ஸ்ரீராமபத்திரனை யேற்றிக்கொண்டுபோய் இக்கோஸல நாட்டுக்கு வெளியேவிட்டு வரக்கடவீர் எனக்கட்டளையிட்டு, நற்குணத்தோர்களின் நற்செயலின்பலன், இவ்வண்ணம் வருத்த முறுவதே யென்று நான் நினைக்கிறேன். ஸ்ரீராமபத்திரன் நற்குண நற்செய்கை யுடையவனாகியும், தாய் தந்தைகளாலே பிழையின்றி, காட்டிலோட்டிவிடப் படுகின்றானன்றோ? என்று கூறினர். உடனே தேர்ப்பாகரும் விரைந்து சென்று ரதத்தில் சிறந்த நான்கு குதிரைகளைக் கட்டிச் சிங்காரித்துக் கொணர்ந்து, ஸ்ரீராமபிரானிடம் வந்து வந்தனஞ்செய்து கைகுவித்து, ஸ்ரீராமச்சந்திரரே! திருத்தேர் சித்தமாயிருக்கின்றதென விண்ணப்பஞ் செய்தனர். மஹாராஜர் உடனே கோசாதிகாரியையழைத்து, நீ விரைவாகச் சென்று சீதாபிராட்டி பதினான்கு வருஷங் காட்டிலிருக்கு மளவும், போதுமான சிறந்த ஆடையாபரணங்களைக் கணக்கிட்டுக் கொணர்ந்து கொடுக்கக் கடவையென ஆஞ்ஞை செய்தனர். உடனே அவன் பொருட்சாலைக்குள்சென்று யாவுமெடுத்துவந்து ஸீதாபிராட்டிக்குச் சமர்ப்பணை செய்தனன். ஸீதாதேவியும், தந்திருமேனிக்குத் தகுதியாயுள்ள அந்த விசித்திரமான அணிகளை யணிந்துகொண்டு, காலையிலுதித்த கதிரவனொளி வானத்தை விளங்கச்செய்யுமாறு அவ்வந்தப்புரமெல்லாம் விளங்கச் செய்பவளாகி, வனம்புகுவதில் பெருமகிழ்வுகொண்டு நின்றனள். கோஸலாதேவி தன் செல்வமருமகளுடைய நற்குண நற்செய்கையைக் கண்டு மகிழ்ந்து, அவளைத் திருக்கைகளால் தழுவியணைத்து உச்சிமோந்து அவளை நோக்கி, அடி என் கண்மணி! உலகத்தில் கற்புநிலை தவறிய வனிதையர்கள், தத்தம் பர்த்தாக்கள் குறையின்றி நற்செல்வராய் வாழ்ந்து தாம் வேண்டுமவற்றையளித்து மகிழச் செய்யுமளவும் அவர்களுக் கிசைந்து நடந்து, முன் வினையால் அவர்கள் பொருளிழந்து துன்பமுறுங்கால் அவர்களைத் துறந்து, தம்மிச்சையின்படித் திரிவார்கள்; பதி குறைவின்றி யிருக்குமளவும் கூடியிருந் தின்புற்று, பின்பு அவனுக்குச் சிறிதேனும் ஆபத்துவருங்கால் வேறுபட்டுப்பதியை நீங்கி தம்மிச்சையின்படி திரிந்தழிவதே பெண்களின் பண்பு. பெண்களென்போர்கள் எப்பொழுதும் பாவசிந்தையுடையவர்கள். ஒரு கணப்பொழுதிலேயே பதியை வெறுத்துவிடத்தக்கவர்கள். பதியின் உயர் குலத்தையாயினும், உபகாரத்தையாயினும், கல்வியையாயினும், வெகுமதியையாயினும், அக்கினிதேவன் முன்பாகச் செய்துகொண்ட சத்தியத்தை யாயினும் நினைந்து பதியை நன்குமதியார்கள். அவர்கள் சபல சித்தமுடையவர்கள். பதிவிரதாதருமமுடையவர்களது மனமோவெனில், முற்செய்த நல்வினையால் குலாசாரங்களுக்கேற்ற நற்செயலிலும், சத்தியத்திலும், பெரியோருபதேசத்தைக் கேட்பதிலும், புலன்களை யடக்கிப் பொறாமை கொள்ளாமல் பொறுமைகொள்வதிலும், பதியைப் பிரியாது அவனே தஞ்சமெனநினைத்து அவன் சென்றவிடஞ் சென்று வாழ்ந்திருப்பதிலும் நிலைகொண்டிருக்கும்.

பதிவிரதைகளுக்குத் தெய்வங்களினும் பதியே சிறந்தவனல்லனோ? ஆதலின், நீ யொருகாலும் உன்பதியை வனவாஸஞ் செய்பவனென வெண்ணி இகழற்க; கணவன் செல்வம் பெறினும், வறுமைகொண்டிருக்கினும், அவனே உனக்குத் தெய்வமாகக் கடவனென்று நன்மையுரைசெய்தனள். சீதாபிராட்டியாரும் அந்தப் பாசுரங்களைக்கேட்டுத் தம் திருமாமியாரை நோக்கிக் கைகுவித்து, கோஸலையாரே! தேவரருளிச் செய்தபடியே அடியாளும் நடந்துகொள்வாள்; பர்த்தாவினிடத்தில், எவ்வெக்காலங்களில் எவ்வெவ்வகையாக நடந்துகொள்ள வேண்டுமோ, அவ்வவ்வகையை அடியாளு மறிந்திருக்கின்றாள். தாய் தந்தையர்களிடத்தில் கேட்டு மிருக்கின்றாள். தேவர் அடியாளை அஸத்துக்களான அரிவையரோடொப்பாக எண்ணற்க; சந்திரனின்றும் நிலாவைப் பிரிப்ப தரியதுபோல, தருமநிலையினின்றும் அடியாளைப் பிரித்தல் அரியதாகுமென்று நம்புக;—

> నాతన్త్రీవాద్యతేవీణా నాచక్రోవర్తతేరథః।
> నాపతిస్సుఖమేధేత యాస్యాదపిశతాత్మజా॥
> మితన్దదాతిహిపితా మితమ్మాతామితంసుతః।
> అమితస్యహిదాతారం భర్తారంకానపూజయేత్॥

> நாதந்த்ரீவாத்யதேவீணா நாசக்ரோவர்த்ததேரத:।
> நாபதிஸ்ஸுகமேதேத யாஸ்யாதபிசதாத்மஜா॥
> மிதந்ததாதிஹிபிதா மிதம்மாதாமிதம்ஸுத:।
> அமிதஸ்யஹிதாதாரம் பர்த்தாரம்காநபூஜயேத்॥

மணிகளிழைத்துப் பொன்கட்டுக்கட்டிச் சிங்காரிக்கப்படினும், வீணை தக்க தந்தியின்றி வாசித்தல் முடியாது; தேர் மற்ற உறுப்புகள் நிறைந்திருந்தும், சக்கரமின்றிச் செல்லாது; அவ்வாறே ஒருத்திக்கு நூறு பிள்ளைகளிருக்கினும், பதியின்றி அவள் இன்பமடையாள். பெண்ணுக்குத் தந்தை யாடையாபரணமுதலிய வேண்டு மவற்றை யளிக்கினும், அவையும், அற்பமேயன்றோ? தாய் சிற்றுண்டிகளை யளிக்கினும் அவையும் அற்பமேயன்றோ? பிள்ளை வேண்டியபடி குற்றேவல்கள் செய்யினும், அவையும், அற்பமேயன்றோ? இம்மையில் பேரின்பத்தையும், மறுமையில் நற்போகங்களையும் கொடுக்க வல்லவர் பர்த்தா வொருவரே யன்றோ? இப்படி பெரும்பயன்தரும் கணவனை விவேகமுள்ளவள் எவள்தான் பூசனைசெய் தின்புற்று மகிழ்ந்திராள்; ஆதலின், பெரியோர்களிடத்தில் தருமங்களை முற்று முணர்ந்த அடியாள் பர்த்தாவை ஏன் அவமதிசெய்வாள், பெண்களுக்குப் பர்த்தாவே தெய்வமன்றோ? என்று திருவாய் மலர்ந்தருளினர். இவ்வண்ணம் பிராட்டியாருடைய அருளிச்செயலைக்கேட்டு, ஆநந்தமும் சோகமுங்கொண்டு கண்ணீர்பெருக்கினள். அவ்வாறு துன்புற்று நிற்கின்ற கோஸலராஜன் திருமகளை நோக்கி ஸ்ரீராமபிரான் வலஞ்செய்து கைகூப்பி, அம்மா! என்னன்புகூர்ந்த மாதாவே! நீர் துன்புறற்க,



கைகேயி   (தசரதன்) கௌசலியை) சுமித்திரை ஜனங்கள்   ஸ்ரீராமர்·லக்ஷ்மணர்·சீதை.

(டு-சக)

என் திருத்தாதையைக் காந்தருள்வீராக; இவ்வனவாஸம் விரைவிலொழிந்து போகும்; ஒன்பதுவருஷமும் ஐந்துவருஷமும் தூங்கியெழுந்தாற்போல விரைவில் கடந்துவிடும்; பின்பிங்கு யான் அன்பர்களுடன் கூடிவருவதைக் கண்ணுற்று மகிழ்வாயென்று சுருக்கமாக அருளிச் செய்து பின்பு, மற்றுமுள்ள முந்நூற்றைம்பது மாதாக்களையும் முறையே கண்டு வணங்கி அவர்களை நோக்கி, என் அன்னையர்களே! யான் அதிபரிசயத்தாலாயினும், அறியாமையாலாயினும், ஏதேனும் பிழைசெய்தேனுயினும் அதனைப் பொறுத்தருளக் கடவீர்கள்; அன்றியும், வனவாஸம் செல்ல விடைகேட்கின்றேன்; விடைதந் தாசீர்வாதஞ் செய்தனுப்பக் கடவீர்களென்று அருளிச்செய்தனர். இவ்வண்ணம் அருளிச்செய்த ஸ்ரீராமபிரான் வாக்கியத்தைக்கேட்டு, அந்தப்புரத்திலுள்ள மஹாராஜர் பத்தினிகள் யாவரும் கிரௌஞ்சபக்ஷியின் பேடுகள் போலப் புலம்பி யழுதனர்கள். இதுவரையில் முரஜ பணவா முகவேணு வீணு ஸாரங்கி சல்லரி முதலிய வாத்தியங்களின் தொனிகளாலும், ஸங்கீத நாதங்களாலும், விநோதகரமாயிருந்த அவ்வந்தப்புரம் அப்பொழுது புலம்பல், அழுதல், வெறுத்தல், இகழ்தல் முதலிய தொனிகள் நிறைந்து துன்பந் தருவதாயிற்று.

அயோத்தியாகாண்டத்தில் முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பதாவது ஸர்க்கம்.

சக்கரவர்த்தித் திருமகன் ஸீதாபிராட்டியுடனும் இளையபெருமாளுடனும் தேரூர்ந்து எழுந்தருளுகையில் மஹாராஜர் பின்சென்று புலம்பி யழுதல்.

---

அநந்தரம் ஸ்ரீராமபிரான், சீதாதேவி, இளையபெருமாள் இம்மூவரும் மஹாராஜரை வந்தனஞ்செய்து வலம் வந்து தேற்றி விடைபெற்றுக்கொண்டு, கோஸலையாரையுஞ் சுமித்திரையாரையும் வந்தனஞ்செய்து நின்றனர்கள். அப்பொழுது சுமித்திராதேவி தன் மைந்தனை யணைத்தெடுத்து உச்சிமோந்து அவரை நோக்கி, அடா என்னருமை நற்புதல்வா! உலகமனைத்திற்கு முறவாகிய ஸ்ரீராமபத்திரனிடத்தில் பத்திதலைக்கொண்டு கணப்பொழுதும் பிரியாமல் அவர்க்குக் குற்றேவல் செய்வதன் பொருட்டே நீ பிறந்திருக்கின்றமையால், அவருடன் வனவாஸஞ் செய்வதன்பொருட்டு என்னுலும் விடை கொடுக்கப்பட்டவனுகின்றனை; ஆதலின், நீ வனஞ்செல்லுகையில் ஒருகாலும் ஸ்ரீராமபத்திரன் விஷயத்தில் ஊக்கமற்றிருக்கக்கடவை யல்லை; அவர் இப்பொழுது ராஜ்ஜியத்தை யிழந்து, செல்வமுமின்றி இருக்கின்றூரே; இவரால் என்னபயனென நினைத்து உபேக்ஷை செய்யற்க;—

వ్యసనీవాసమృద్ధోవా గతిరేషతవానఘ।
ఏషలోకేసతాంధర్మోయజ్జ్యేష్ఠవశగోభవేత్॥

வ்யஸநீவாஸம்ருத்தோவா கதிரேஷதவாநக।
ஏஷலோகேஸதாந்தர்மோ யஜ்யேஷ்டவசகோபவேத்॥

இவர் பொருளற்றவராயினும், மிகப் பொருள் பெற்றவராயினும், இவரே உனக்குத் தஞ்சமெனக் கருதி, பயபத்தியுடன் திருப்பணி செய்து வாழ்க; தம்முன் பிறந்தார்க்கு வயப்பட்டு நடப்பதே இவ்வுலகினில் பெரியோர்களால் புகழப்பட்ட சிறந்த தருமமாகும். மூத்தோர்க்குக் கீழ்ப்படிந்து நடப்பது, கொடை செய்வது, யாகதீக்ஷை வகிப்பது, போரில் முன்னிட்ட கால் பின்வாங்காமல் உயிரை விடுவதிலுந் துணிந்து போர் செய்வது, இவை யாவும் இவ்விக்ஷ்வாகு குலத்திற் குரிய குணங்களெனப்படும்; என்றிவ்வண்ண மிதங்கூறி, நில்லேல் போபோவென விடைகொடுத்து,—

రామందశరథంవిద్ధి మాంవిద్ధిజనకాత్మజాం।
అయోధ్యామటవీంవిద్ధి గచ్ఛతాతయథాసుఖం॥

* ராமந்தசரதம்வித்தி மாம்வித்திஜனகாத்மஜாம்।
அயோத்யாமடவீம்வித்தி கச்சதாதயதாஸுகம்॥

அடா, என்னரும் புதல்வா! ஐயரைப் பிரிந்தோமேயென்று எண்ணற்க; ஸ்ரீராமபிரானையே ஐயராக நினை; என்னைப் பிரிந்தோமேயென்றும் வருந்தற்க; ஜநகமகாராஜன் புதல்வியையே நானெனவுணர்; படைவீட்டை விட்டுப் போந்தோமேயென்றும் உன்னற்க; காட்டையே படைவீடெனவுணர்ந்து சுகமாக ஸ்ரீராமபத்திரனுடன் போய்வரக் கடவையென வாதரத்தால் மீளவுமிதமுரைத்து வாழ்த்தி விடைகொடுத் தனுப்பினாள். அநந்தரம், விநய

* தன் மகனை இலக்குமணன் இளமைப்பருவமுடையா னாதலாலும், நல்லுணவுகளையும் நற்போகங்களையுந் துறந்து வனம்புகுவது முனிவர்க்கு மரிதாதலாலும், ஸ்ரீராமபிரான் பேரருள்ாளனென்பதையும் ஸீதாதேவி பெரியபிராட்டியாரே யென்பதையுமறியாது இவனொருகால் ஸ்ரீராமபிரானுடன் செல்லாமல் நின்றுவிடுவனோ வென்று ஸந்தேஹித்து, நமக்குப் பர்த்தாவி னிடத்திலுள்ள பாரதந்திரியம் ஸ்ரீராமபிரானுடன் செல்லாமைக்குக் காரணமாகித் தடுத்துவிட்டதே, நம்மகனையாவது அவருடன் செல்லவிட்டுக் கிஞ்சித்காரம் பெறுவோமென்ற ஆதரத்தாலும், (வாசாதர்மமவாப்நுஹி) என்றபடி இவன் சுயமாகவே ஸ்ரீராமபிரானுக்கு நித்திய கைங்கரியத்தில் முயற்சியுடையவனாகி யிருக்கினும், அனுமதி செய்வதினாலாயினும் அதன் பலனைப்பெற்று நற்கதியடைவோமென்ற எண்ணத்தினாலும், (நஹிதத்பவிதாராஷ்ட்ரம் யத்ரராமோநபூபதி:। தத்வனம்பவிதாராஷ்ட்ரம் யத்ரராமோ நிவத்ஸ்யதி) என்று வஸிஷ்டமாமுனி யருளிச்செய்ததை நினைந்து அவ்வாறே யாகுமென்ற நம்பிக்கையாலும், ஸ்ரீராமபிரானை விட்டு இவரும் இவரை விட்டு ஸ்ரீராமபிரானும் பிரியுங்கால் இருவரு மின்புற் றிராரென்பதைப் பிறந்தது முதல் நேரில் கண்டவளாதலால், கைகேயிபோல மகனுக்கு நன்மையெனத் தீமைசெய்யாமல், தீமையென மூடர்க்குத் தோன்றினும், நன்மையேசெய்து பெரும்புகழ் பெறக் கருதி, சுருக்கமாக யாவுமுணர ஒரே சுலோகத்தால் சுமித்திராதேவி தன் மகனை நோக்கி மீளவும் அருளிச்செய்கின்றனள்.

రామన్దశరథంవిద్ధి మాంవిద్ధిజనకాత్మజాం।
అయోధ్యామటవీంవిద్ధి గచ్ఛతాతయథాసుఖం।

*ராமந்தசரதம்வித்தி மாம்வித்திஜனகாத்மஜாம் ।*
*அயோத்யாமடவீம்வித்தி கச்சதாதயதாஸுகம் ॥*

அடா என் பெறலரு மைந்தா! ஸ்ரீராமபத்திரனையே (ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம:) என்கிற நியாயத்தால் தந்தை யெனவும், ஸீதாதேவியையே அந்த நியாயப்படியே என்னைப்போலவே தாயெனவும், ஸ்ரீராமபத்திரனெழுந்தருளியிருக்கும் அரணியத்தையே அயோத்தியெனவும் நினைத்துச் சுகமாக மகிழ்ந்து செல்லக்கடவை. க—அன்றி, ஸ்ரீராமபிரானை (தசரதம்) கருடவாஹனராகிய ஸ்ரீமந்நாராயணனெனவே நினைத்துப்போ; சீதாபிராட்டியை (மாம்) ஸ்ரீமஹாலக்ஷ்மியெனவே நினைத்துப்போ; அடவியை (அயோத்யாம்) ஸ்ரீவைகுந்தமெனவே நினைத்துப்போ. உ—அன்றி, "பெற்றார் பெற்றொழிந்தார்" என்கிறபடி ஔபாதிக பந்துக்களாகிய எங்களைக் குவாலாக நினைத்திராதே (தேவதேவோஹரி:பிதா) என்றும், (பிதாத்வம்) என்றும், ஒளியுளார்தாமே யன்றே, தந்தையுந் தாயுமாவார் என்றுஞ் சொல்லுகிறபடி நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீராமபிரானையே தஞ்சமென வெண்ணிப்போ; அவ்வண்ணமே ஔபாதிக மாதாவாகிய என்னைக் குவாலாக நினையாமல் (த்வம்மாதா ஸர்வலோகாநாம்) என்றும், (அகிலஜகன்மாதரம்) என்றும், (ஸ்ரீயமகில லோகஸ்யஜனநீம்) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸீதாதேவியையே தஞ்சமாக நினைத்துப்போ. ங—அன்றி, கஷாய பானம்போல சாஸ்திரவஸியராய் வர்த்திக்கை யன்றி, பாலே மருந்தாமா போலே (ராமோரமயதாம்வர:) என்கிறபடி பேரின்பந்தருமையராகையாலே, அதற்கடியான குணவத்தையில் (குணைர்த்தசரதோபம:) என்று உங்களையரோடொப்பரென நினைத்துப்போ; கைகேயிபோலன்றிக்கே நானுங்களையர்க்கு அநுகுணையாயிருக்குமாபோல இவளும், (துல்யசீலவயோவ்ருத்தாம்) என்றும் உனக் கேற்குங் கோலமலர்ப்பாவை யென்றும் சொல்லுகிறபடியே பெருமாளுக் கநுகுணமான ஆகாரத்தாலே உன்னை யுகப்பிக்குமென நினைத்துப்போ; இத்திருவயோத்தி (ராமாபிஷ்டவஸம்யுக்தா:) என்று படைவீடாக அனுகூலமா யிருக்குமா போல திருவரணியமும் (மங்களாநிப்ரயுஞ்சாநா:)என்று அநுகூலமாயிருக்குமென நினைத்துப்போ. ச—அன்றி, உங்களைப் பிரிந்த ஐய ரினி உளராகார், இனிமேலெல்லா வுறவுமுறையும் பெருமாளென் நினை; (அஸத்ஸமாவிதவா) என்கிறபடி நானுமொருத்தி யுண்டென வெண்ணற்க, அந்த வுறவும் பிராட்டியெனவே நினை; இனிப் படைவீடு மொன்றுண்டென நினைக்கவேண்டா, புல்லென்றொழிந்தன் கொலென்று படைவீடு மின்றே காடெழுந்ததென நினைத்துப்போ. ரு—அன்றி, உங்க ளையர் கைகேயி வார்த்தையைக் கேட்டு உங்களைக் காடேறப் போகவிடுமா போல, ஸ்ரீராமபிரானும் பிராட்டியார் வார்த்தையைக்கேட்டு மாயா மாரீசன் பின் போகத் தொடங்குவர்கிடீர், ஆதலின் ஸ்ரீராமபிரானைத் தசரத மஹாராஜரெனவே நினைத்திரு; நானுன்னை இப்பொழுது போகவிடுமா போலே ஸீதாதேவியும் உன்னை ஸ்ரீராமபிரான் பின் நிர்ப்பந்தித்துப் போக விடுங்கிடீர், ஆதலின் ஸீதையையும் என்னைப்போலவே நினைத்துப்போ; இப்படைவீட்டில் நிற்கப்பெறுமல் காடேறப் போகிறுப்போலே அக்காடு தன்னிலும் நிற்கப்பெறுமல் கடற்கரையிலே போகக்கூடுங்கிடீர், ஆதலின் அடவியையு மிவ்வயோத்தியைப் போலவே நினைத்துப்போ. சு—அன்றி, ஸ்ரீராமபிரான் வெறும் வடிவழகரென்றிராதே ராக்ஷஸரோடே வினையொத்த காலங்களிலே உங்க ளையரைப் போலவே தனிவீரம் செய்யவல்ல ஆண் சிங்கமென நினைத்திரு; ஸீதாதேவியையும் அப்பூசல் நிமித்தம் பயப்படுகை யன்றி

தேவாஸுர யுத்தத்தில் உங்களையருடைய வீரப்பாடு கண்டால் நாங்க ளுகக்குமா போல அவ்வாண்பிள்ளைத் தனங்கண்டால் (தந்த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்) என் கிறபடி மதித்துப் பாரிதோஷிகங் கொடுப்பாளொரு வீரபத்தினியென நினைத்திரு; அப்போ திவளைப் பேணுகைக்கு மதிளுஞ் சிறையுமாயிருப்பதொரு படைவீடில்லை யென நினைத்திராதே, காட்டோடு நாட்டோடு வாசியில்லை, புலிநின்ற தூறென்னுமா போலே நிற்கிறவன் பக்கல் மதிப்பாலே அக்காடுதானே யொருவராலும் மேலிட வொண்ணாதென நினைத்துப்போ. எ—அங்ஙன மன்றி, உங்களைப் பிரிவில் பாடாற்ற மாட்டாதாப்போலே கிடீர், உங்கள் தமையனாரும் (நஜீவேயம்க்ஷணமபி விநாதாமஸிதேக்ஷணம்) என்றும், (அத்யைவாஹங்கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாங்கதிம்) என்றும், உங்கள் பிரிவில் பாடாற்ற மாட்டாதாரென நினைத்திரு; நானிப்போதுங் களைப் போகவிட்டு, எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேனெல்லே பாவமேயென்று அநுதபிக்கப் போகிறுப்போலே, இவளு முங்களைப்போக்கி யனுதபிப்பாளென்றிரு; இப்படைவீடு உங்களைப்பிரிந்து (அபப்ரஷ்டமனுஷ்யாச தீனநாகதுரங்கமா) (ஆர்த் தஸ்வரபரிக்லானு) என்று படப்போகிறுப்போலே, உங்களோடு பிரிவுண்டானல் (பரிசுஷ்கபலாசாஸி) என்றும், (அபிவ்ருக்ஷாঃ பரிம்லானாঃ) என்றும், அக்காடுதானும் பாடுபடுமென நினைத்துப்போ. அ—அங்ஙனன்றி, ஸ்ரீராமபத்திரனெஞ்ஞான்று மிப் படிப்பாரிழந்து திரியுமோவென்று நினைத்திராதே உங்களைய்யரோ பாதிமுடியுஞ் சூடிப் பத்துத் திசைகளிலும் ஆணையுஞ் செங்கோலும் நடாத்துமென நினைத்திரு; பிராட்டியு மப்படி யுடன் கேடாகத் திரிகையன்றி நான் பட்டமஹிஷியாகி இருக்குமா போலே அபிஷேகங்கொண்டு மஹிஷீபதத்திலே யிருந்து நிர்வாஹஞ்செய்யுமென நினைத்திரு; இப்படிக்குத் திருவபிஷேகம் பண்ணின வனந்தரம் (அமீஜனஸ்தானம போடவிக்னம் லப்த்வாஸமாரப்த்தநவோடஜாஸி | அத்த்யாஸதேசீரப்ருதோயதாஸ்வம் சிரோச்சிதான்யாச்ரமமண்டலாஸி) என்றிக் காடுதானும் படைவீடோ பாதி நிறைகுடி யென்று நினைத்துப்போ. கூ—அன்றி, (ராமந்தசரதம்வித்தி)(பதாதிவர்ஜ்ஜிதச்சத்ரம்) என்றும், "தேரொழிந்து மாவொழிந்து வனமே மேவியென்றும், கலையுங்கரியும் பரிமாவுந் திரியுங் கானங் கடந்துபோய்" என்றும், அநு ஸந்தித்தவர்கள் வயிறு பிடிக்கும்படி, யென்றும் இக்கால் நடையோவென்றிராதே, பத்துத் திக்குகளிலும் புஷ்பகந் தொடக்கமாகிய தேர்களின்மீதேறித் திரிவரென நினைத்திரு; (மாம்வித்தி) "துன்னுவெயில்வறுத்தவெம்பறமேற் பஞ்சடியாள் மன்னனிராமன்பின் வைதேகி யென்றுரைக்கும் அன்னநடையவணங்கு நடந்தனளே" என்று பிராட்டியும் திரிவ தற்கரிய காட்டிலேயென்றுந் திரியுமென நினையற்க; நானுங்களையரருகே தேர்த்தட்டி லிருக்குமாபோலே இருக்குமென நினைத்திரு; இக்காட்டிலே யுருவத்திரிந்துவிடப் புகுகிறதென்றிராதே, இதிலிப்போது நித்தியஸஞ்சாரம்பண்ணப் புகுகிறதென்று நினைத்துப்போ. ய—

ஆக இப்படிப்போகிறவிடத்தில் அஸ்வாஸ்தியதையை யநுஸந்தித்துப் பிற் காலித் திளையபெருமாளோடேற்றி வார்த்தைசொல்லிற்றாக இதே ஆபாதத்திற்றேற்று கிறது; இஃது (ப்ராகேவதுமஹாபாகஸ் ஸௌமித்ரிர்மித்ரநந்தனঃ | பூர்வஜஸ்யா நுயாத்ரார்த்தேத்ருமசீரைரலங்க்ருதঃ) (பாஷ்பபர்யாகுலமுகச் சோகம்வோடு மசக் னுவந்) என்றும், (குருஷ்வமாமனுசரம் வைதர்ம்யந்நேஹ வித்யதே) என்றும், வியதி ரேகத்தில் நிலைமையைப்பிடித் தில்லையாம்படியாய்ப் போகுகைக்கு முற்கோலிநிற் கின்ற இளையபெருமாள் நிலைக்குச்சேராது; இது சேரும்போது இங்ஙனே பொருளாக வேண்டும்;(ராமந்தசரதம்வித்தி)—(அஹந்தாவன்மஹாராஜே பித்ருத்வந்நோபலக்ஷயே) என் றுங்களையரளவில் நீர் நெகிழ்ந்து நிற்கின்ற தொன்றுண்டு அத்தைவிட்டுப் பெரு மாளைப் பெற்றுமென்னு மாகாரத்தாலே யாகிலும், அவரோபாதி இவரு மொருத்த

ருண்டென்று நினைத்திருக்கவேண்டும், என்னையும் அவர் கைபிடித்தாரென்னு மாகாரத்தால் நெகிழ்ந்திராதே பெருமாள் ஸம்பந்தத்தாலே பிராட்டியிடத்தில் பிரதிபத்தி பண்ணியிருக்கின்ற மாத்திரம் அவர் குடற்றுவக்காலே நானு மொருத்தியுண்டென்று நினைத்திரு, (வானம்நகரமேவாஸ்து யேநகச்சதிராகவ:) என்று பெருமாள் விரும்பின காட்டையே படைவீடாக நினைத்து இவ்வூரை நெகிழ்ந்திருக்கின்ற தொன்றுண்டு, அதைவிட்டு அவர் தங்களையர்சொல் மாறுமைக்காகக் காட்டை விரும்பினைப்போலே தம்பிசொல் மாறுமைக்காக இப்படை வீட்டையும் விரும்புவர், இத்தையும் அவரோ பாதி உத்தேசியமென்று நினைத்துப்போ. ௧௧—இப்படி இளைய பெருமாள் திருவுள மிதுவேயானாலும், ராமவாற்சலியத்தாலே கலங்கிச்சொல்லுகின்றாளாகையால், முன்பு சொன்னவையும் பொருளாகக் குறையில்லை; அன்றி நீங்கள் காடேறச் சென்ற பின்னர் உங்களையரை (ராமம்) ஒழிந்தவரெனவுணர்; என்னைக் கணவருமிறந்து மகனும் பிரிந்து பகைமுன் பிழைத்த லரிதாதலால் தந்தை மனை சேர்ந்தவளெனவுணர்; திருவயோத்தி யுங்களையும் பிரிந்து உங்களையரும் நெகிழ்ந்த பின் புல்லெழுந் தடவியாமெனவு முணர்ந்து, இங்கு நிற்கில் இவ்வகையாகத் துன்பமேயன்றி இன்பமுறாதெனத் தேர்ந்து சுகமாக ஸ்ரீராமபிரானுடன் போய்வா. ௧௨—அங்குள்ள குறைகளை நினைத்து நெஞ்சாறற் பட்டிராதே, அவ்வோரிடங்களுக்குத் தக்கபடியே பேணிக்கொண்டு போகப்பார்.

(கச்சதாதயதாசுகம்) நிழலுமடிதாறுமானேனென்று சொல்லுகிறபடியே தொடர்ந்து குற்றேவல் செய்யப்பார். (கச்ச) அந்தமில் பேரின்பத்தடியரோ டிருந்தமை யென்று சொல்லுகிறபடி இருந்தவிடத்தேயிருந்து கைங்கரியஞ் செய்யவேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை; பின் சென்ற வில்லியென்று பேர்பெறப் பார். (தாத) பகவான் விஷயத்தில் பத்திதலைக்கொண்டவர்களைக் கௌரவஞ்செய்து வார்த்தை சொல்லக் கடவதென்கிற மரியாதையாலே ஐயரென்று சொல்லுகின்றாள்; அன்றியும் (தாத) உன்னைப்பெற்ற நானும் கைகேயிபடைத்த பேர் படையர்தவாறு பண்ணப் பார் என்று உபசரித்து வார்த்தை சொன்னாளாகவுமாம். (யதாசுகம்) நன்மைகளும் வந்தது வரக்கண்டு போகப்பார். இவர் ஸுகத்துக்குக் குறைவாவது (பவாம்ஸ்துஸஹ வைதேஹ்யா கிரிஸானுஷுரம்ஸ்யதே அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்று அச்சேர்த்தியிலே அடிமைசெய்யப் பார்த்தவருக்கு அது கிடையாதே அம்மிதுனம் அக்கரையும் இக்கரையும் ஆகப்பிரிந்து ஏகதேச கைங்கரியமாகையிறே. அங்ஙனன்றியிலே, (யதாஸுகம்) ஸ்ரீராமபிரானுக்கு எவ்வண்ணம் சுகமாகுமோ அவ்வண்ணம் (பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தாமஜ்ஞேநசலக்ஷ்மண । த்வயரபுத்ரேண தர்மாத்மா நஸம்வ்ருத்த:பிதாமம) என்று அவர் உம்மையுடையவராகையால், யாதொரு விதத்திலும் நெஞ்சிற் குறையற்றிருந் துகக்குமாறு, (யதாஸுகம்) (ஐச்வர்யம் வாபிலோகாநாம் காமயேநத்வயா விநா) என்று பெருமாளைப் பிரியாமையிறே உனக்கின்பம்; அப்பேரின்பம் வழுவா திருக்குமாறு, (யதாஅஸுகம்) சோம்பேறி மெய்வருத்தாது கைங்கரியத்தை நழுவவிடாமல் மெய்வாட்டத்திலும் கைங்கரியருசியால் துன்பங்களைப் பொறுக்குமாறு (கச்சதா) காடேற வெழுந்தருளும் ஸ்ரீராமபிரானுடன் (அத) இடைவிடாது செல்லுக. (ஸுகம்) நல்ல மனமுடைமையை, (யதா) அடவியிலும் திருவயோத்தியிலே போலவே, (கச்ச) அடையக்கடவை.

அன்றியில், (ராமம்வித்தி தசரதம்வித்தி) ஸ்ரீராமபிரானையும் பார், தசரதரையும் பார், உங்களையரைவிட உம் தமையனே மேலல்லரோ? (மாம்வித்தி ஜனகாத்மஜாம்வித்தி) என்னையும் பார், ஸீதையையும் பார், என்னைவிட ஸீதையே மேலல்லளோ? (அயோத்தியாம்வித்தி அடவீம்வித்தி) அயோத்தியையும் பார், அடவியையும் பார், இத்திருவயோத்தியைவிட ஸ்ரீராமனெழுந்தருளுந் திருக் கானகமே மேலன்றோ?

முடையவருமாகிய சுமந்திரர் தேவஸாரதியாகிய மாதலி தேவேந்திரனை நோக்கி விண்ணப்பஞ் செய்வதுபோல, ஸ்ரீராமசந்திரரை நோக்கிக் கைகுவித்து, சக்கரவர்த்தித் திருமகனாரே! இந்தத் திருத்தேர்மீதேறி வீற்றிருந்தலங்காரஞ் செய்தருள்வீர்; தேவர் திருவுளமுகந்தருளிய விடத்தில் விரைவிலெழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோய் விடுவேன். கைகேயி வரங்கேட்டுக்கொண்டபடி பதினான்குவருஷம் தண்டகாரணியத்தில் தேவர் வாஸஞ்செய் தருளவேண்டுமன்றோ? என்று விண்ணப்பஞ்செய்தனர். உடனே ஸீதாபிராட்டி தம்மாமனாரளித்த ஆடையாபரணங்களை யலங்காரஞ்செய்துகொண்டு, சூரியன்போலவிளங்குகின்ற அத்திருத்தேரின்மீது திருவுளமகிழ்ந்து முன்னமே ஏறியருளினாள். பின்னர் சக்கரவர்த்திதிருமகனாரும், இளையபெருமாளும் தங்கத்தால் சிங்காரிக்கப்பட்டு, அக்கினிபோல ஜொலிக்கின்ற அத்திருத்தேர்மீதிலேறி வீற்றிருந்தருளினர்கள். இவர்கள் வனவாஸஞ்செய்யும் பதினான்குவருஷத்துக்குக் கணக்கிட்டு மஹாராஜரால் அளிக்கப்பட்ட ஆடையாபரணங்களையும், ஆயுதங்களையும், கவசங்களையுந் தேர்மிசை வைத்துக் கொண்டனர்கள். சுமந்திரர், சிறந்த ஜாதியிற் பிறந்த வாயுவேகமுடைய குதிரைகளை யோட்டித் திருத்தேரை நடாத்தினார்.

இவ்வண்ணம் ஸ்ரீராமபிரான் நெடுந்தூரம் பிரயாணமாகிப் புறப்படுகையில் அதனைக்காணப்பொழுது அங்குள்ள நாட்டார் நகரத்தார்களும், யானை, குதிரை, பசுக்கள் முதலிய மிருகங்களும், பலவகைப் பக்ஷிகளும், துன்பம் மேற்கொண்டு மூர்ச்சையடைந்தன. பின்பு அவர்கள் தெளிந்தெழுந்து, மனமும் புலன்களுங் கலங்கி, துன்பத்தால் பித்தேறிய மதயானைகளின் பிளிறல்களையும், கட்டுவாரற்றுத் திரிகின்ற குதிரைகளின் பூஷண கோஷங்களையும், தங்களுடைய புலம்பலின் கோஷங்களால் பெருகியெழுந் தொலிக்கச் செய்பவர்களாகி, ஆண் பெண் அலி கூன் குருடு முடம் இளைஞர் மூப்பினர்கள் அடங்கலும், முதுவேனிற் பருவத்தில் வெயிலிலடிபட்டு நீர்வேட்கை கொண்டவர்கள், நீரைக்கண் டோடுமாபோலே ஸ்ரீராமபிரானையே பின்தொடர்ந்து, திருத்தேரைப் பக்கங்களிலும் பின்னும் பிடித்துக்கொண்டு ஓடி மிகவும் வருத்த முற்றவர்களாகிக் கண்ணீர் பெருக்கினார்கள். பிறகு சுமந்திரரை நோக்கி, தேர்ப்பாகரே! நீர் குதிரைக் கலினங்களின் கயிறுகளை இழுத்துப் பிடித்து மெல்ல மெல்லத் தேரையோட்டி யருளக்கடவீர்; ஸ்ரீராமபிரானுடைய திருமுகமண்டலம் இனி எங்களுக்குக் காணற்கரிதாகுமாதலின், யாங்கள் சற்றுநேரங் கண்டு மகிழ்வோம். ஸ்ரீராமபிரானது மாதாவாகிய கோஸலையார் மனம் எஃகினால் செய்யப் பட்டதுபோலும்; இலதாகில், தேவகுமாரன்போன்ற திருமகன் வனவாஸ மெழுந்தருளுகையில், உடனே பிளந்திற்றுச் சிதறுண்டழியாதோ? ஸீதாதேவி யந்தோ! நல்வினையினள். அவள்

---

(அயோத்தியா ஆம்வித்தி) அயோத்தியின் துன்பத்தையுமுணர், (அடவீ ஈம்வித்தி) அடவின் அழகினையும் உணர், ஸ்ரீராமபிரான் சென்றவிடமே அழகுற்றும், அவர் பிரிந்தவிடமே துன்புற்று மிருக்குமென உணர்ந்து, அவ்வின்பம் குலையாவண்ண முடன் செல்லுக. கரு—என்று சுமித்திராதேவி ஸ்ரீராமபத்திரனிடத்திலுள்ள வாத்சலியத்தாலும், இளையபெருமாளிடத்திலுள்ள ஹிதபரதையாலும், இவ்வண்ண மிதங் கூறி விடைகொடுத்து வாழ்த்தி யனுப்பினரென் றுணர்க.

பதிவிரதா தருமத்தைத் தவறாமல், சூரியன் காந்தி மேருகிரியை விட்டு நீங்காததுபோல ஸ்ரீராமபிரானை விட்டு நீங்காமல் உடன் செல்லுகின்றன ளல்லளோ! ஒப் லக்ஷ்மணா! நீ யொருவனேயன்றோ நல்வினையன்; நீ எப்பொழுதும் இணைபிரியாமல் ஸ்ரீராமபிரானுடன் சென்று, கைங்கரியஞ்செய்து மகிழ்வுற்று வாழ்கின்றனை யன்றோ? நீ ஸ்ரீராமபிரானை விடாது தொடர்ந்து செல்வதென்பதுவே உனக்குச் சிறந்த நற்பேறும், சிறந்த நல்வாழ்வும், சிறந்த நற்கதியும், நல்வழியுமாகின்றதென்று இவ்வண்ணம் புலம்பியழுது கண்ணீர் பெருக்கி, ஸ்ரீராமபிரானைப் பிரிந்து துன்பத்தைப் பொறுத்திருக்கத் திறமையிலர்களாகிப் பின்றொடர்ந்தே சென்றனர்கள்.

தசரத மஹாராஜர் அப்பொழுது மிக வருத்தமுற்றவராகி, மிகத் துயரங்கொண்ட தேவிகளுடன் ஸ்ரீராமபிரானைக் கண்ணாரக் காண்போமென்று வெளியே புறப்பட்டு வந்தனர். புறப்பட்டு வருகையில், யூதபதியான பெரிய யானையைப் பதுங்கு போட்டுப் பிடித்துக் கட்டுகையில், யானைப்பேடுகள் புலம்புமாபோல புலம்புகின்ற வனிதையர்களது புலம்பலைக்கேட்டு, இராகுவினால் பிடிக்கப்பட்ட பூர்ண சந்திரன்போல வொளியிழந்து மகிழ்வழிந்து துன்பக்கடலிலாழ்ந்து வருந்தினர். ஸ்ரீராமபிரான் இவர்களைக் கடாக்ஷித்து இவர்கள் படுந் துன்பத்தைக் கண்டாற்றாதவராகித் தேர்ப்பாகரை நோக்கிக் குதிரைகளைக் கடுக வோட்டுக வெனக்கட்டளையிட்டனர்; அந்த ஜனங்களெல்லோரும், ஐயோ சுமந்திரரே! தேரை நிறுத்து மென்று வேண்டினர்கள். சுமந்திரர் இன்னது செய்வதெனத் தோற்றாது வருத்தமுற்றுத் தவித்து நின்றனர். அப்பொழுது அந்த மகாஜனங்களது திரள்களின் பாத வைப்புகளினாலெழுந்த துகள், அத்திரள்களின் கண்ணீர்ப் பெருக்கால் நனைக்கப்பட்டுச் சேறாகி யழுந்தி யடங்கியது. இவ்வண்ணம் ஸ்ரீராமபிரான் புறப்படுகையில், அந்நகரியெல்லாம் புலம்பலுற்றுக் கண்ணீர் பெருக்கி, ஹாஹாகாரங்கொண்டுமதிமயங்கி மிக வருத்தமுற்றதாகியது. அப்பொழுது வனிதையர்களது கண்களினின்றுங் கண்ணீர்கள், மீனங்களின் கலக்கத்தால் கமலமலர்களினின்றும் ஒழுகும் தேன்போலப் பெருகின. இவ்வாறு புரமெங்கு மொரே தன்மையாமிருப்பதைக் கண்டு மகாராஜர் வேரைவெட்டிச் சாய்த்த மரம்போல வீழ்ந்து மோஹமடைந்தனர். ஸ்ரீராமபிரானைத் தொடர்ந்து செல்லும் ஜனங்களெல்லோரும் அத்தன்மையரான மஹாராஜரைக்கண்டு கூவென்று கூவியழுது, 'ஐயோ ராமா! என்று சிலரும், ஐயோ கோஸலையேயென்று சிலரும் புலம்பி, முன்னமே புலம்பியழுகின்ற அந்தப்புரத்தோரை மேன்மேலும் அழச் செய்தனர்கள். ஸ்ரீராமபிரானும், இவ்வண்ணம் வருந்திப் பின் தொடர்ந்து வருகின்ற தாய் தந்தையர்களைக் கடாக்ஷித்தும், தருமபாஸத்தினால் கட்டுண்டவ ராதலின், வலையிலகப்பட்ட மான்குட்டிபோலாகி, அவர்களைக் கிட்டி இன்புறுவிக்கக் கூடாமையால், மீளவும் அவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. திருத்தேர்மீ தெழுந்தருளத் தக்கவர்களும், சுகத்தை யநுபவிக்கத் தக்கவர்களும், துன்புறத் தகாதவர்களு

மாகிய தாய் தந்தையர்கள் பதாதிகளாகி நடந்து வருவதைக் காணப் பொறு மல், ஸ்ரீராகவன் தேரைக் கடுக ஓட்டும்படி பாகரைத் தூண்டி யருளினர். அப்பொழுது கௌஸல்யையார், பகலில் மேய்வதற்குச் சென்ற கற்று மாலையில் தானீன்ற கன்றினை நினைந்து வீட்டிற்குத் திரும்பி யோடிவருமாபோல ஓடி, ஸ்ரீராமபிரான் திருத்தேரையே நோக்கி, ராமா! ராமா!! என்றும், அடி சீதே! சீதே!! என்றும், லக்ஷ்மணா! லக்ஷ்மணா!! என்றும் கூவிக்கொண்டு கண்ணீர் பெருக்கி, இங்கு மங்கு மலைந்து திரிந்து வருந்தினள். அதைக் கண்டு மஹாராஜர் தேர்ப்பாகரை நில்லும் நில்லுமென்று கூறினர்; ஸ்ரீராம பிரான் செல்லும் செல்லும் என்று கூவிக்கட்டளை யிட்டனர். அதுகேட்ட சுமந்திரர் இரண்டு சக்கரங்களினிடையி லகப்பட்டுக் கொண்டாற்போலத் திகைத்து நிற்கையில், ஸ்ரீராமபிரான் அவரை நோக்கி, சுமந்திரரே! ஒருகால் மஹாராஜர் என் சொற்படி ஏன் கேட்டிலீரென்று கோபங்கொள்ளினும், நான் தேவர் கட்டளையைக் கேட்டிலேனென்று சொல்லக் கடவீரல்லீர். இப் பொழுது இவர்களுடைய துன்பத்தை நான் பொறுப்ப தரிது; ஆதலின் தேரை விரைவாகச் செல்லவிடு மெனத்தூண்டி யுரைசெய்தருளினர். உடனே ஸ்ரீராமபிரான் அருளிச் செயலின்படி சுமந்திரர் பின் தொடர்ந்துவந்த ஜனங்க ளுக்குத் திரும்பிச்செல்ல விடை கொடுப்பித்து குதிரைகள் முன்னமேவிரை வாக ஓடிக்கொண் டிருக்கையிலும் பின்னும் விரைவாக ஓட்டினர். மஹா ராஜரைச்சேர்ந்த ஜனங்க ளெல்லோரும் விடைபெற்றுக்கொண்டு, ஸ்ரீராம பிரானை வலஞ்செய்து சரீரத்தால் திரும்பினவர்க ளாயினும், மனத்தினாலும், துன்பத்தினாலும் மீண்டிலராயினர்கள். அக்காலையில் அமைச்சர்கள் மஹா ராஜரை நோக்கி,

యమిచ్ఛేత్పునరాయాన్తం నైనన్దూరమనువ్రజేత్ ।

யமிச்சேத்புநராயாந்தம் நைநந்தூரமநுவ்ரஜேத் ।

தேசாந்தரஞ்செல்லப் புறப்படுகின்றவனைச் சுகமாக மீண்டு வரவேண்டு மென்று எவர்கள் இச்சிக்கின்றனரோ, அந்த இஷ்டபந்துக்கள் அவனுடன் நெடுந்தூரஞ் சென்று வழிவிடலாகாதென்று இதங்கூறினர்கள். மிக நன்மை விளைக்கத்தக்க அவ்வசனத்தைக் கேட்டு சக்கரவர்த்தியும் இதமெனக் குறித்து மிகத் துன்பமுற்றவ ராயினும், மனைவிகளுடன் நின்றுகொண்டு, ஸ்ரீராமபிரா னையே கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் எழுந்தருளியபின் அயோத்தியி லிருந்தோரும் அவரையே நினைந்து வருந்தியது.

---

சக்கரவர்த்தித் திருமகனார் தந் தந்தைதாய்களை நோக்கிக் கைகூப்பிக் கொண்டே இவ்வண்ணம் புறப்பட்டெழுந்தருளி விடுகையில், அந்தப்புரத்தில் மிகப்பரிதாபமான புலம்பல் உண்டாகியது. அந்தப்புரத்திலுள்ள ஸ்திரீக

ளெல்லோரு மொன்று சேர்ந்து, அந்தோ! திக்கற்ற நம்மெல்லோர்க்கும் யாவ னொருவன் தஞ்சமாயிருந்தனனோ, அவன் இப்பொழுது நம்மை விட் டெங்கே போய்விடுகின்றான்? அவன் தன்னை யொருவர் வன்மையாகச் சொல்லினும் அவர்மேல் கோபங்கொள்ளாதவன்; பிறர் கோபங்கொள்ளத்தக்க செயல் களை யொருபோதும் செய்யாதவன்; சிறியோர்களைச் சமாதானப் படுத்து கின்றவன்; பிறருடைய சுகதுக்கங்களைத் தன்னுடையவையாகவே நினைப்ப வன்; அத்தன்மையனான நமதுகண்மணி இப்பொழுதெங்குச் செல்கின்றான்? அவன் தன்னைப் பெற்றெடுத்த கோஸலையார் பக்கலிற்போலவே நம் பக்க லிலும் பத்தியுடன் பணிவிடை செய்தனனே, அவனிப்போழ் தெங்கேகுகின் றான்? அந்தோ! நமக்கும் இவ்வுலகமனைத்திற்கும் தஞ்சமாயிருக்கின்ற ஸ்ரீராம சந்திரன் இந்தப் பாவி கைகேயியா லேவப்பட்ட மஹாராஜர் சொல்கேட்டுக் கடுங்கானகஞ்சேர்ந்து எங்கு திரிந்து வருந்துவானோ? அந்தோ! மஹாராஜர் மிகவும் மதியற்றவராம்; இலராகில் தருமமுடையவனும், ஸத்தியமுடைய வனும் ஆகிய எம்மபிராமனைக் காடேறச் செல்லவிடுவரோ? என்றிவ்வண்ணம் கன்றினைப் பிரிந்த பசுக்கள்போலத் துன்பத்தால் வருந்திக் கூவென்று புலம்பி யழுது பழித்தனர்கள். முன்னமே புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்ட மஹாராஜர் அவர்களி னழுகுரலைக்கேட்டு மிகவருந்தி மருள்கொண்டனர்.

ஸ்ரீராகவன் வநத்திற் கெழுந்தருளியபொழுது வேதியர்கள் அக்கினி ஹோத்திரம் முதலிய வைதிகச் சடங்குகளை செய்திலர்கள்; இல்லறத்தோர் கள் அதிதிகளைப் பூசிப்பதற்காகச் சமைத்தவரல்லர்; மற்றுமுள்ள ஜனங் களும், தந்தமக்குரிய செய்கைகள் ஒன்றையுஞ் செய்திலர்; சூரியனும் இத் துயரத்தைக் கண்டு பொறுதான்போல மறைந்தனன்; மதயானைகளும் கவளங் களைக் கொள்ளாது நின்றன; பசுக்களும் கன்றுகளுக்குப் பால்கொடாமல் உதைத்தன; நெடுநாள் மலடாயிருந்தவள் புதிதாக நற்புதல்வனைப்பெற்றும் அதனால் மகிழ்ந்திலள்; இக்ஷ்வாகு குலத்தலைவனாகி நக்ஷத்திரபதவி பெற்றிருக் கும் திரிசங்குவும், அங்காரகன், புதன், பிருஹஸ்பதி முதலிய கிரஹங்களும், சில ருஜுகதியாலும், வக்கரகதியாலும் சந்திரனுடன் சேர்ந்தும், சில ஏழா மிடத்திலும் மூன்று பத்து நான்கு எட்டு திரிகோணம் என்னு மிவ்விடங்களுள் ஒன்றிலிருந்து சந்திரனைப்பார்த்தும் மிகக்கொடியவைகளாய் உலகத்துக்குத் துன்பத்தை விளைப்பவைகளாகி நின்றன; மற்றுமுள்ள க[illegible]ங்களும் நக்ஷத் திரங்களும் ஒளியற்று மலினமாயின; * இக்ஷ்வாகுகுலத்திற்குரிய நக்ஷத் திரங்களாகிய விசாகைகளும் வழிதப்பித் தூமகேதுவுடன் கூடி ராஜனுக்குத் தீங்கினைத் தோற்றுவிப்பனவாக ஆகாயத்தில் காணப்பட்டன. மழைமாரி யுடன் பெருங்காற்றெழுந்து பெருங்கடலும் மேலெழுந்து கலங்கிப் பொங்கி யதுபோல அத் திருவயோத்தி நடுக்கமுற்றது; பத்துத் திசைகளும் இருள் மூடினபோலத் தோற்றாமல் மலினமாயின; நவக்கிரஹங்களும் நக்ஷத்திரங்க ளும் விளக்கமற்றன; காரணமின்றியே நகரிலுள்ளவர்க ளெல்லோர்க்கும்

* விசாகை இக்ஷ்வாகுகுலத்திற்குரிய நக்ஷத்திரமென்பது யுத்தகாண்டம் 4-ம் ஸர்க்கத்தில் கூறப்பட்டிருப்பதும் காண்க.

பெரும்பயமுண்டாயிற்று; ஒருவரும் உணவிலும் உலாவுதலிலும் மனங்கொண்டிலர். யாவரும் நெட்டுயிர்ப்புக்கொண்டு துன்புற்று மஹாராஜரைக் குறித்தே சோகங்கொண்டனர்கள். ஸகல பரிஜனங்களும் கண்ணுங் கண்ணீருமாயழுது வருந்தி நின்றனர்களே யன்றி ஒருவரும் மகிழ்ந்திலர்; காற்றும் குளிர்ந்து வீசிலது, சந்திரனும் அழகுற்று நிலாவியலன்; சூரியனும் முன்போல ஒளிகொண்டு காய்ந்திலன்; தாய்களைப் புதல்வரும் மூலைபுண்டு மகிழ்வித்திலர்; மனைவியர்களைக் கணவர்களும் இன்பந்தந்து கலந்து மகிழ்வித்திலர்; உடன்பிறந்தோர்க ளுடன்பிறந்தோர்களையும் தத்தமக்குரியபடி நடந்து மகிழ்வித்திலர்கள்; எல்லோரு மெல்லாவற்றையுந்துறந்து ஸ்ரீராமபிரானையே நினைந்து வருந்தினர்கள். ஸ்ரீராமபிரானுக்கு நட்பினர்களாக யாவர் நின்றனர்களோ, அவர்களெல்லோரும் மோஹங்கொண்டு வருத்தமுற்றுப் படுத்த படுக்கையைவிட் டெழுந்திலர். திரிலோகாதிபதியான தேவேந்திரன் நீங்குமளவில் பூமி முழுதும் பர்வதங்களுடன் நடுக்கமுறுமாறுபோல இவ்வண்ணம் ஸ்ரீராமபிரான் நீங்கி எழுந்தருளிவிடுகையில், அத் திருவயோத்தி யானை குதிரை தேர் பதாதிகளுடன் பயத்தாலும், சோகத்தாலும் பீடைகொண்டு நடுக்கமுற்றொலித்தது.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்.

சக்கரவர்த்தி திரும்பிக் கோஸலையார் அந்தப்புரஞ் சேர்ந்தது.

இவ்வாறு ஸ்ரீராமபிரான் புறப்பட்டு நகர்நீங்கிக் கட்புலனாகாது மறைந்தவளவிலும், அவரெழுந்தருளுகையிலெழுந் தூளி எவ்வளவிற் காணப்பட்டதோ அவ்வளவில் மஹாராஜர் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்றனர். மஹாராஜர் இவ்வளவு ஆதரத்தால் பார்க்கின்றமையாலும், மீண்டவுடன் மிக வருந்துவ ராதலாலும், இன்னும் சில நேரமாயினும் என்னைக் கண்டு மகிழ்வுறக் கடவரென்று எண்ணங்கொண்டதுபோல் பூமியிலெழுந்த தூளி வெகுநேரம் மேன்மேலும் விருத்தியடைந்தது. அத்தூளியும் மறைந்தது கண்டு மஹாராஜர் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனர். அதுகண்டு உடனே கோஸலாதேவி அவரது வலதுகையைப் பிடித்துக்கொண்டனள்; பரதனிடத்து அன்புமிகுந்த கைகேயி அவரது இடதுபக்கத்து வந்து நின்றாள். அப்பொழுது நீதியும், தருமமும், விநயமு முடையரான மகாராஜர் கைகேயியைக் கண்டு வெறுப்புக்கொண்டு அவளைநோக்கிக் கூறுகின்றனர். அடி பாவி கைகேயி! கொடியாளே! நீ என்னங்கங்களைச் சாரற்க; உன்னைக் காண்பதிலும் யான் விருப்புற்றிலேன்; நீ எனக்கு மனைவியுமல்லை; பந்துவுமல்லை; உன்னைச் சார்ந்தவர்கள் யாவருளரோ அவர்களும் என்னைச் சார்ந்தவர்களல்லர்; யானும் அவர்களுக் குறவின னல்லேன்; கேவலம் பொருளையே முதன்மையாகக்கொண்டு தருமங்களைத் துறந்த உன்னை யான் இப்போழ்தே துறந்துவிடுகின்றேன்; முன்பு யான் உன் கையைப்பற்றித் தீ வலஞ்செய்து

விவாஹஞ் செய்துகொண்டே னென்பதையும் இம்மை மறுமை இரண்டிலுந் துறந்துவிடுகின்றேன்; பரதனும் ராஜ்ஜியங் கிடைத்ததே யென்று மகிழ்ந்து முன்னோர் முறைமை தவிர்ந்து பெறுவானாகில், அவன் செய்யும் தருப்பணம் என்னைச் சேராதொழியக் கடவது என்றிவ்வண்ண மிகழ்ந்து, தூளியுங் கண்ணுக்குக் காணுமையால் மயல்கொண்டு வருந்தினர். இவ்வண்ணம் தரையில் வீழ்ந்து புரண்டு துகள்படிந்த மஹாராஜரைக் கௌஸல்யாதேவி மஹா சோகங்கொண்டு கைகளா லணைத்தெடுத்து அழைத்துக்கொண்டு திரும்பினள்.

சக்கரவர்த்தியோ மனமறிந்து பிரஹ்மஹத்தி செய்தவன்போலவும், எழுந்தெரியுந் தீயில் கையிட்டவன்போலவும், தந்திருமகன் தவசியாகி வனஞ் சென்றதை நினைந்து மிகவுந் தாபங்கொண்டனர். தேர்சென்றவழியை அடிக்கடி திரும்பித் திரும்பி நோக்கிச் செல்வப்புதல்வனை யுன்னி வருந்தி, ராஹுவினல் பீடிக்கப்பட்ட சூரியன்போலக் காந்தியற்றவராயினர். பிறகு தம் அருமைமகன் நகரங்கடந்து சென்றனனென வுணர்ந்து அந்தோ! என் மகனேறிச் செல்லுகின்ற தேர்க் குதிரைகளி னடிகள்மாத்திரம் வழியில் காணப்படுகின்றனவே; அம்மஹாத்துமா காணப்பட்டிலனே! என்னருமைப் புதல்வன் இதுவரையில் கலவைச்சாந்தணிந்து, இலவம்பஞ்சி மெத்தையில் படுத்து மெதுவாகிய தலையணைகளில் சிரத்தை வைத்துக்கொண்டு, சிறந்த தாதியர்கள் விசிறிகொண்டு வீசத் துயில்கொள்வனே! இனி யவன் காட்டிலோர் மரத்தடியில் ஒரு சிலையையாயினுங் கட்டையையாயினும் தலைக்கணையாக்கிக்கொண்டல்லவோ துயில்கொள்வானந்தோ! இதுகாறுங் குளிர்சாந்த மப்பிக்கொண்ட என் மகன் இனிக் காட்டியானைப்போலப் புழுதிபடிந்த மேனியோடன்றோ துயின்றெழுவான்? லோகநாதனுகிய என் மகன் அநாதன்போல எழுந்து திரியக் காட்டிலுறையும் மனிதர்கள் காண்பார்களே! ஆ! மிகவும் செல்வமாய் வளர்ந்து வனமென்பதையே யறியாத அந்த ஜாநகி கல்லிலும் முள்ளிலும் நடந்து கால் சிவந்து கொடிய மிருகங்களின் தொனியைக் கேட்டு, மிகப் பயமூற்று வருந்துவ ளந்தோ! அடி சண்டாளி கைகேயி! நான் என்னருமை மைந்தனைப் பிரிந்தபின் இனி பிழையேன்; நீ கைம்பெண்ணுகி இவ்விராஜ்ஜியத்தை யாண்டு உன் கோரிக்கை யீடேறி மனங்குளிர்ந்து வாழ்க என்றிவ்வண்ணம் புலம்பியழுதுகொண்டு * மரித்தவர்க்காகத் தலைமூழ்கித் திரும்புகின்றவன்போல, பிரஜைகள் பலரும் புடைசூழ, அமங்களமாய் ஒளியற்றிருக்கும் தனது நகரத்துள் புகுந்தனர். அப்பொழுது அப்புரமெங்கும் மனைவாயில்களும், நாற்சந்திகளும் ஜனங்களின்றி வறியனவாயிருந்தன; கடைகளுந் தேவாலயங்களுந் திறவாமல் மூடிக்கிடந்தன; வாடி வலிமை குன்றித் துன்பத்தால் வருந்திய சிலர்மாத்திரமே ஒவ்வோ ரிடங்களில் அருமையாகக் காணப்பட்டனர். அயோத்தியாபுரியை இத்தன்மையான நிலையில் பார்த்துக்

* ஸ்ரீராமபிரானுக்கு வழிவிட்டுத் திரும்பிய சக்கரவர்த்தியை, மரித்தவர்க்காகத் தலைமூழ்கித் திரும்பியவரோ டொப்பிவெது அமங்களமென்றோ வெனின், சக்கரவர்த்திக் குண்டாகிய துயரமப்பொழுது அத்தன்மையதாயிருந்ததென அவர் கருத்தின்படி கூறியதனுல் குற்றமாகாதென வறிக.

கொண்டு மகாராஜர் ஸ்ரீராமபத்திரனாயே சிந்தித்தவராகிப் புலம்பிக் கதிரவன் மேகமண்டலத்திற் புகுவதுபோலத் தன் அந்தப்புரம் புகுந்தனர். ஸ்ரீராமன் ஸீதை லக்ஷ்மணர் இவர்கள் இல்லாமல் வாளாக்கிடக்கு மந்தப்புரமானது, சிறந்த நாகங்கள் நிறைந்து எவரும் அண்டக்கூடாதிருந்த மிகப் பெரிய மடு அந்நாகங்கள் பிடிபட்டபின்னர் நிற்கும் தன்மைபோல் அவர்க்குத் தோற்றியது. அதுகண்டு சக்கரவர்த்தி பரிதாபமாகப் புலம்பி யருகிலுள்ளோரை நோக்கி, நீங்கள் விரைவாக ஸ்ரீராமபிரானைப் பெற்றெடுத்த கோஸலையி னந்தப்புரத்தி லென்னைக்கொண்டு சேர்க்கக் கடவீர்கள்; வேறெவ்விடத்திலும் என் மனத்துக்குத் தேறுதல் பிறவாதென்று மெதுவாக உரைசெய்தனர். உடனே துவாரபாலர்க ளிவரை யழைத்துக்கொண்டு போய் கோஸலையார் திருமாளிகை சேர்த்தனர்கள். அங்கு மஹாராஜர் கோஸலையார் திருவணையில் படுத்தார். படுக்கினும் மன மின்புறுமல் தம் இரண்டுபுத்திரர்களும் மருமகளுமாகிய மூவரு மின்றிச் சந்திர னழிந்த ஆகாயம்போலத் தோற்றும் அம்மனையைக்கண்டு மிகவருந்திக் கையை மேலெடுத்துக்கொண்டு ஐயையோ ராமா! என்னை விட்டு நீ போய் விடுகின்றனையே! நீ மீண்டு வருமளவும் பிழைத்திருக்கும் புருஷர்களன்றே புண்ணியசாலிகள்! அவர்கள் திரும்பி வரும் உன்னைக்கண்டு ஒருவரோடொருவர் கட்டியணைத்து மகிழ் வெய்துவார்களன்றே? என்று கூவிப் புலம்பி யழுதனர். அங்ஙன மிருக்கையில் பொழுதுபட்டு இராப்பொழுது வந்துவிட்டது. அஃது அம்மகாராஜருக்குக் காள ராத்திரிபோலாகி மிகத்துன்பம் விளைவிப்பதாயிற்று. அப்பொழுது தசரத மஹாராஜர் அர்த்தராத்திரி வேளையில் கோஸலையாரை நோக்கி,—

రామమ్మేనుగతాదృష్టి రద్యాపిననివర్తతే।
నత్వాపశ్యామికౌసల్యే సాధుమాంపాణినాస్పృశ॥

* ராமம்மேனுகதாதிருஷ்டி ரத்யாபிநநிவர்த்ததே ।
நத்வாபச்யாமிகௌஸல்யே ஸாதுமாபாணிநாஸ்ப்ருச ॥

அடி என் பிராணநாயகி! கௌசலி என்னுடைய கண்ணுக்கு (ரூபௌதார்ய குணை:பும்ஸாந் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடி அபிராமனாகிய ஸ்ரீராமசந்திரன் பின் சென்று அங்கே நின்று விட்டது; என்னருமை மகன் கட்புலன்கடந்து செல்லினும் இப்பொழுதும் மீண்டிலது; ஆதலின் அருகிலுள்ள உன்னையும் காண்கிலேன்; நீ என்னைக் கரத்தால் நன்கு பற்றிக்கொள் என்றனர். இவ்வண்ணம் ஸ்ரீராமபத்திரனையே நினைந்து வருந்துகின்ற மகாராஜரைக்கண்டு கோஸலைதேவியும் அருகிலுட்கார்ந்து அவரைக் கைகளால் பற்றிக்கொண்டு சோகம் மும்மடங்கு பெருகி நெட்டுயிர்த்து மிகவும் தீனமாகப் புலம்பலுற்றனள்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்முற்றிற்று.

---

* (ராமம்மேனுகதாத்ருஷ்டி:) என்பதின் கருத்துரை.

சக்கரவர்த்தியினுடைய கரணங்கள் பெருமாள் பக்கலிலே அநந்யார்ஹ சேஷமானபடியைச்சொல்லுகிறது (ராமம்மேனுகதாதிருஷ்டி: அத்யாபிநநிவர்த்ததே

(ஸமுத்ர இவ காம்பீர்யே)—(ஸமஸ்த கல்யாண குணம்ருதோததி:)—(குணநாமாகரோம ஹான்)—என்று பெருமாளைக் கடலாகச் சொல்லுகையால், கடல்கொண்ட வஸ்து மீளப் பெறலாகுமோ ? (ராமம் மேநுகதா த்ருஷ்டி:)—(ராமோரமயதாம்வர:)—என்கிறபடி சேதநா சேதன விபாகமறத்துவட்டுகின்ற அவர் மினுமினுக்கைக் கொடுபோக்கியது குற்றமோ? (ராமம் + ஷ்டி:)—கண் ரூபமுடையதைக்கிரஹிக்கும்,ரூபமுடையவன் கண் ணைக்கிரஹிப்பதே? (அநுகதா)—ஒருபொருளைக் காண்பதற்குரிய கண், காலின் தொழி லான பின் செல்வதைப் பற்றுவதே, (ராமம் + ஷ்டி:)—பின்செல்வதென்பது ஒருசேத னன் செயலாகி யிருக்க, அசேதனமாகிய கண் செய்வதே, (ராமம் + ஷ்டி:)—கண்ணவா னென்றும், மண்ணோர் விண்ணோர்க்கும் என்றும் சொல்லுகின்ற உலகமனைத்துக்குங் கண்ணாகியது முன் செல்லுகையில், மற்றுள்ள கண்களும் அதன்பின் செல்வது வியப் போ?(திருஷ்டி:)—'திருசிப்பிரேக்ஷணே' என்கிறவினைப்பொருளின்படியே ஸாராஸார விவேகஞ் செய்ய வல்லமையுள்ள தாதலி னன்றோ அவர் பின் தொடர்ந்தது, (மேத் ருஷ்டி:)—அழகியதாக நெடுங்காலம் பழகிய என் கண்ணாகியும், என்னைத்தொடராது ஸ்ரீராமனைத்தொடர்ந்ததேன்?(மேத்ருஷ்டி:)—இதுதான் சுதந்திரமானுலிப்படி செய்ய லாம், என் கண் கண்டீர். (மே)—கைகேயி கண்ணாகி லிப்படி செய்யாதிறே. (மே த் ருஷ்டி:)—சபலனான என்னுடையது, (மேத்ருஷ்டி:)—என் ஸம்பந்தமுள்ள கைகேயி போலக் கருணை யற்றிராமல், சீதாபிராட்டிபோலப் பின் சென்றதே, (மேத்ருஷ்டி:)—(சுந்தரம்புருஷந்த்ருஷ்ட்வா ப்ராதரம்பிதரம்ஸுதம்)—என்கிறபடி என் கண்ணாகியும், என்திருமகன்பின்செல்வதே,(மேத்ருஷ்டி:)—கல்லறை தப்பினுங் கண்ணறை தப்பாது, ராஜத்ருஷ்டி கொடியது என்கிற பழமொழிகள் பொய்யாகுமோ? சக்கரவர்த்தியாகிய என் கண்ணறையே என் திருமகன்மீது தாங்கிற்றே; ஆதலாலன்றோ இத்தீங்கு நேர் ந்தது(த்ருஷ்டி + மேராமம்)—எந்தப் பாவிகண்ணோ என் திருமகன்மீதுதாங்கிற்றே. (மே அத்ருஷ்டி:)—பாவியாகிய என்னுடைய தீவினை ஸ்ரீராமபிரானையும் பின்சென்று வரு த்துகின்றதே, (மேஅத்ருஷ்டி:)—என்னுடைய நல்வினை ஸ்ரீராமபிரான் பின்னே சென்று விட்டது, இனி யான் உய்யேன், (ராமம் கதாத்ருஷ்டி:' மேநு)—ஸ்ரீராம பிரானைப் பின்றொடர்ந்த கண் என்னுடையதா? என்னுடையதாகில், ஸ்ரீராமபிரான் பின் செல்லுமா? (மேத்ருஷ்டி: ராமங் கதாநு)—என் கண் ராமன்பின் சென்றதோ? (மேத்ருஷ்டி:) என் ஞானம், (ராமம் அநுகதா)—ஸ்ரீராமபிரான் பின்னே சென்றது, அநந்தரம் மீளாதோ வென்னில், (அத்யாபிநநிவர்த்ததே)—(அதிக்ராந்தேபிராகவே)—என்று அவர் தங்கரைக் கடந்தெழுந்தருளிய இப்பொழுதும் மீண்டிலது, (த்ருஷ்டி ரத்யாபி நநிவர்த்ததே)—இங்கேவரின் கைகேயி முகத்தில் விழிக்கவேண்டி யிருக்குமே யென்று பயத்தா லிப்போழ்தும் மீளுகின்றிலது,(மேத்ருஷ்டிரத்யாபி நநிவர்த்ததே)—ஒருவர்க் கொருதுன்பம் நேர்ந்தால், அவரைச் சேர்ந்தவர் அருகில்வந் துதவித் தேற்றி யுபகாரஞ் செய்யவேண்டு மிறே; நான் ஸ்ரீராமபிரானது விரஹத்தா லிப்படித் துன்ப முற்ற இவ்வளவிலும் என் கண் மீள வந்தெனக் குதவிசெய்திலதே, (மே + நநிவர்த் ததே)—நெடுங்காலம் பண்ணின வாஸனையெல்லாம் விட்டு விட்டு,(நோபஜனம் ஸ்மரந் நிதம் சரீரம்)—என்கிறபடி நம்மை நேராக மறந்து வாராதொழிவதே. (த்ருஷ்டி + ர்த் ததே)—என் திருமகனை மீட்கமாட்டா தாகிலும்,தான் மீளத்தடையென்ன?(ராமம்மே + நநிவர்த்ததே)—பரப்ரஹ்மமாகிய ஸ்ரீராமபிரான் பின் சென்றமையால்,(புநச்ச நா வர்த் ததே)—என்கிறபடி மீட்சியிலதாயிற்றிறே, (அத்யா + தே)—மீளுங்கால் உன் துன்பத் தைப் பார்த்துப் பொறுக்க ஆற்றலின்றியோ மீள்கின்றிலது; (அத்யாபி + வர்த்ததே)—காமுகியாகிக் கட்டழகன் பின் சென்றவளும் மீளுவளோ? (அத்யாபி + தே)—திருஷ்டி கழியாமையால், கண்ணறை மீளாதிறே. (அத்ருஷ்டி + நநிவர்த்ததே)—தீவினை இப் போழ்துமென்னைக்கொலை செய்யாது மீளாதே; (அத்ருஷ் + த்ததே)—என்நல்வினை

என் திருமகன் மீண்டாலன்றோ அவனுடன் மீள்வது, (த்ருஷ்டி:)—கண்ணும், (அத்யா) சுவைகளை யுணர்விக்கும் ராஸநமும், (அபி)—மற்றுமுள்ள புலன்களும், (ராமமநுகதா நநிவர்த்ததே)—இவையாவும் ஸ்ரீராமபிரான் பின்சென்று மீண்டிலவே, (த்ருஷ் + நநி வர்த்ததே)—என் நினைவு இப்போழ்தும் ஸ்ரீராமபிரானை விட்டு மீண்டிலதே.

மீட்சியில்லையாவதேன்? அஃது உம்மைவிட்டுப்போயிற்றோ? மீளுகைக்கென்ன? அது ராமன்பின் சென்றதற்குக் குறியென்ன, என்று வினவில், அதற்கு விடையுரைக்கின்றார்: (நத்வாபச்யாமி)—கட்புலன் கட்புலனாகாமையாலும், அதன் காரியத்தாலதனை யூஹஞ்செய்யவேண்டுமாதலாலும், அருகிலிருக்கின்ற உன்னைக் காண்கிலேனாதலால், என் கட்புலன் ஸ்ரீராமபிரான் பின் சென்றதென்றேன். (நத்வா)—குனிந்து பார்க்கின்றேனாகிலும், கண் மீண்டு வரக் காண்கிலேன், (நத்வாபச்யாமி)—நமஸ்காரஞ் செய்து தியானஞ்செய்கின்றேனாகிலும் மீளுகின்றிலது. (நது ஆபச்யாமி)—ஒருபொருளையும் நன்றாகக் காண்கிலேனே. (நத்வாபச்யாமி)—காண்கிலேனாகிலும் கேட்கின்றேன்; (வசஸாஜ்ஞாதஸ்வரேணமுக:) என்கிறபடி வார்த்தை சொல்லுகையால், அருகிலிருக்கின்றனை யென்று ஊஹித்தேன்; (நத்வாபச்யாமி)—அவர் முகத்திலே விழிக்கப்பெறாதொழிந்தாலும், அவரைப் பெற்ற உன் முகத்திலே யாகிலும், விழிக்கலாமென்றிருந்தேன், அதுவுங் கிடையாதொழிவதே; (நத்வாபச்யாமி)—"அண்டர்கோனணியரங்கனென்னமுதனைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணுவே" என்னுமாபோலே அவ்விஷயத்திலே ஆழங்கால் பட்டு வேறொன்றைக் காணவைத்தேனென்கிறான்.

இப்படி சக்ஷுரிந்திரியந் தனக் குதவாமையாலே, வாகிந்திரியத்தைக் கொண்டாகிலும் மனந்தேறுவோமென்று அவள் பேரைச் சொல்லி யாறுகின்றான். (கௌஸல்யே) (கௌஸல்யாலோகபர்த்தாரம் ஸுஷுவேயம்மனஸ்வினீ)—என்கிறபடியே நீ நாடுவாழ மனோரதங்கொண்டு பிள்ளை பெற்றபடியும், அதெல்லாங்கிடக்க நாட்டோடு என்னோடு வாசியறக் கெடும்படியாவதே, கௌஸல்யே-(இங்கிதஜ்ஞாச்சகோஸலா:)—என்று அவரவர்கள் கருத்தினைக் கோஸல நாட்டார் இங்கிதத்தினாலே யறிகின்றார்களல்லரோ? ஆதலின், கோஸலநாட்டாரெல்லோர்க்கு மிறைவன் திருமகளாகிய நீ இங்கித மறிந்தவளென்பதிலையமுற லாகுமோ? ஆதலின், என் மனக் கருத்தறிந்த நீ யென்மீது சினமுறாமல் அருள் செய்யக் கடவை. இவரிப்படி தன் தளர்ச்சி தோற்றக் கௌஸல்யே என்றழைத்தவாறே, தியங்கின இவரையும் இழக்கலாகதே என்று கௌஸலியை துணுக்கோடே கிட்டவந்து செய்யவேண்டுவது என்னென்று கேட்க, (ஸாதுமாபாணினாஸ்ப்ருச)—அணிமிகுதாமரைக் கையை யந்தோ! அடிச்சியோந் தலைமிசை நீ யணியாயென்று அவ்விஷயத்தில் சொல்லக்கடவ பாசுரத்தை அது கிடையாமையாலே ததீய விஷயத்திலே சொல்லுகின்றார்: என்னுடைய க்லேசமெல்லாந் தொலையும்படி உன்னுடைய குளிர்ந்த திருக்கையாலே தடவி மகிழ்வுறச் செய்யக்கடவை. (ஸ்ப்ருச)—அருகிலிருக்கின்ற உன்னைக் காணாமையால், கட்புலன் என் திருமகன் பின் சென்றதென்றறிந்தோம்; உன்னுடைய இன்மொழி கேட்கின்றமையால், செவியுளதெனவுணர்ந்தோம்; கௌஸல்யே என்று உன்னுடைய நாமத்தை யுரைக்கின்றமையால், வாய் வாய்த்ததென்று தேர்ந்தோம்; நாற்றமறியாமையால் அவரை உச்சிமோந்த மூக்குப் போய்த்தென்று தெரிந்தோம்; ஸ்பர்சம் உளதோ வென்பதை அறிவோமென்று, விருப்புற்றோம்; அஃதறியலாம்படி என்னை அணைத்துக் காணாய்; கள்ளர் புகுந்துபோன கிருகத்திலே கிடந்ததும் கிடவாததும் ஆராய்வாரைப்போலே வந்து போனவர் தாம் வஞ்சகக் கள்வனிறே, என்னையும் புலனுமெழிலுங் கொண்டிங்கே நெருநல் எழுந்தருளிப்போனபுனிதரென்றாரிறே. (ஸாதுஸ்ப்ருச)—இத்தனைபொழுதும் கைகேயியோடே ஒருமிடறாய் அவனைக் காடேறப்போகவிட்டு இப்பொழுதாகநின்று ஆரோதம்மடியா நின்

## நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

கோஸலையார் மகாராஜருடன் தம் குறைகளைச் சொல்லிப் புலம்பியது.

அநந்தரம் புத்திரசோகத்தால் மனந்தளர்ந்து மகிழ்வற்றுக் கவலையில் மூழ்கித் திருப்பள்ளியில் ஒடுங்கிப் படுத்து வருந்துகின்ற மஹாராஜரைக் கண்டு கோஸலையாரும் மிகவும் சோகக்கடலி லழுந்தி மஹாராஜரை நோக்கிக் கூறுகின்றனர்: பிராணநாதரே! என் சக்களத்தியாகிய கைகேயி புருஷசிங்கமாகிய என் மகனிடத்தில் கபடமென்னும் விடத்தை விதைத்துத் தோலுரித்த நச்சரவுபோல அச்சமற்றுத் திரிவளே! அன்றியும், என்செல்வ மகனைக் காடேறவோட்டி ராஜ்ஜியத்தையும் பெற்றுக் குறைவற்று மகிழ்வுற்றுக் கொடியபன்னகிபோல இம்மனையிலிருந்து அடிக்கடி என்னையு மச்சமுறச் செய்வளே! ஸ்ரீராமன் பிச்சையெடுத் துண்டாயினும் இந்நகரில் வாஸஞ்செய்து, பரதனுக்கு அடிமை செய்யும்படி நீர் வரந் தந்திருப்பீராயினும் அஃதெனக்கு நலமாகும்; அங்ஙனமுஞ்செய்யாது கைகேயிமூலமாய் என் மகனைக் கெடுத்து நிலைபேர்த்து, பர்வகாலத்தில் ஆஹிதாக்கினி யானவன் தேவர்கட்கு அளிக்கவேண்டிய ஹவிர்பாகத்தை அரக்கர்கட்கு அளிக்குமாறுபோல, ராக்ஷஸர்பால் அளித்து விட்டதே. அந்தோ! இப்பொழுது என் மகன் மதகஜம்போல நடந்து முழங்காலளவும் நீண்டுருண்ட கையில் கோதண்டத்தை யேந்தி, ஸீதாதேவியுடனும், இளையபெருமாளுடனும் வனத்திடை புகுவானே! ஐயோ! கைகேயியின் பொருட்டு உம்மால் காட்டிலோட்டப்பட்ட அவர்கள் இதுவரையில் துன்பமென்பதை யறியாதவ ராதலின் இப்பொழுது எப்பாடுபடுவார்களோ? இன்பமுறுங்காலத்தில் பொருளிழந்து இனந்துறந்து வனமுறைந்து வருந்திக் காய் கனிகளை யுண்டு எவ்வண்ணம் பிழைப்பார்கள்? என் அருமைப்புதல்வன்

றுன் என்று நினைத்திராதே, அவித்யா ஸ்பர்சத்தாலே இக்கலக்கமிவனுக்குவந்தேறியது, இப்பாவி என்செய்வானென்று நெஞ்சிரக்கத்தோடே தொடவேண்டும்; (பாணிஞஸ்ப்ருச)—அன்று அக்கினி ஸாக்ஷிகமாக மங்கள முகூர்த்தத்தில் கௌதுகத்துடன் பிடித்த அக்கையாலே அந்நினைவுடன் தொடு; (பாணிஞஸ்ருப்ச)—எல்லா வவயவங்களாலும் என்னை யணைத்து வெள்ளக்கேடாக்காமல் தணியும்படி கையொன்றினாலே தொடு; (ஸாதுமா பாணிஞஸ்ப்ருச)—பெருமாளை எடுப்ப தொப்பதாய் அவருடைய அங்கஸ்பருசத்தாலே பரிமளிதமான அக்கையாலே தொடவேண்டும்; (மாஸ்ப்ருச)—ராமஸ்ப்ருசம்பெறின் உஜ்ஜீவித்தும், பெருமையில் முடியும்படியும் இருக்கின்ற என்னை அவரைப் பெற்ற உன்னுடைய அக்கையாலே யணை; பெருமாளுடைய திருமேனிஸம்பந்தம் நேராகக் கிடையா தொழிந்தால், அவருடைய ஸம்பந்த ஸம்பந்திகளின் திருமேனி ஸம்பந்தங்கொண்டு உஜ்ஜீவிக்கக் கடவதாயிறே யிருப்பது. (தாம்ஸ்ப்ருஷ்ட்வாமாமபிஸ்ப்ருச)—என்றவர்தாமும் மைதிலியைப் பெறுதபோது இப்படி பட்டாரிறே.

வனவாஸந் தீர்ந்து, ஸீதையுடனும் இலக்குமணனுடனும் மீண்டு தூங்கி யெழுந்தவர்போல இத்திருவயோத்திக்கு வருவது கண்டு, நான் சோகந்தீர்ந்து மனமகிழ்ந்து வாழுங்காலமும் நேருங்கொல்லோ? இத் திருவயோத்தியானது மனமகிழ்ந்த ஜனங்களுடையதும், நன்குயர்த்திக் கட்டப்பட்ட துவஜ படங்களை யுடையதும், நன்கு அலங்கரிக்கப்பட்டதுமாகி, அரணியத்தினின்றும் மீண்டுவரும் என்னருமைப் புதல்வர்களை எப்பொழுது மகிழ்விக்குங்கொலோ? என் செல்வமகன் அழகிய தேரின்மீது சீதையை முன்னிட்டுக் கொண்டு, பசுவை முன்னிட்டுவரும் காளைபோல இத்திருவயோத்திக்கு என்ஞான்று வந்து சேருவனோ? என் அருமை மைந்தர்கள் இங்குத்திரும்பி வருகையில், அநேகமாயிரம் ஜனங்கள் ராஜமார்க்கங்களில் பூமலர்களையும் பொரிகளையும் எப்பொழுது தூவுங்கொல்லோ? என் புதல்வர்கள் சிறந்த வாள்களைக் கரத்திலேந்தி முடியுடைய மகீதரங்கள்போலவிளங்கி நின்மலமாகியகுண்டலம் முதலிய வணிகளை யணிந்து இத்திருவயோத்தியில் புகுகையில், நானெப்பொழுது கண்குளிரக் காண்பேன்கொல்லோ? நல்வேதியர்களும் கன்னியர்களும், நன்மலர்களையும் கனிகளையும் மகிழ்ந்து உபஹாரமாகக்கொடுக்க என்னருஞ் செல்வ மைந்தர்கள் அவைகளை யுவகைகொண்டு அங்கீகரித்து ஆனந்தமுற்று, இத்திருவயோத்தியை எக்காலம் வலஞ்செய்வர்கொல்லோ? நல்லறிவு சிறந்தவனும்,வயதினாலும் வடிவழகினாலும் தேவகுமாரன் போன்றவனும், தருமமுணர்ந்த வனுமாகிய என் அருமை மகன் மூன்றுவயதுள்ள குழந்தைபோல என்னை மனமகிழச் செய்பவனாகி, எப்பொழுதிங்கு வந்துசேருவனோ? முற்பிறப்பில் நான் கொடியளாகி, கன்றுகள் பசிகொண்டு தாய் முலையுண்ண முயலுகையில், அவைகளை யுண்ணவிடாமல் தடுத்துப் பிரித்தோட்டினேன் போலும், இவ்விஷயத்தில் சந்தேகமேயில்லை; அன்றேல் சிங்கத்தினால் பசு கன்றைவிட்டுப் பிரிக்கப்படுவது போல, நான் என் செல்வமகனைவிட்டுப் பிரிக்கப்பட்டு வருத்தப்படுவேனோ? கேளீரென் பிராணநாயகரே! கொடிய இக் கைகேயியினால், இளங்கன்றினைத் தாயைச் சேரவிடா தோட்டுவதுபோல என் அருமை மகனும் வலுவிலோட்டப் பட்டனனந்தோ? அளவற்ற நற்குணங்க ளுள்ளவனும், பற்பல கலை கற்றுணர்ந்தவனும், யாவர்க்கும் தண்ணளி யுடையனுமான என் மகனைநீங்கி ஒரு கணப்பொழுதும் உயிர்வாழ்ந்துய்யேன்; ஆஜானுபாகுவாகிப்பகைவர் வெல்லவொண்ணுத் தோள்வலி பொருந்தி யுள்ள என்னருமைமகனைக் கண்ணாரக் காணாது உயிர்வாழுந் திறமை எனக் கெங்குளது? எனக்கிந்த மகனது பிரிவாலுண்டாகிய சோகச் செழுந்தழல், முதுவேனிற் பருவத்தில் கதிரவன் கதிராபிரத்தையும் விரித்து இப்பார் மடந்தையை எரிப்பதுபோல, என்னைப் பற்றி எரிக்கின்ற தந்தோ! என்றிவ்வண்ணம் புலம்பியழுது வருந்தினர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துநான்காவது ஸர்க்கம்.

ஸுமித்திராதேவி கௌஸல்யாதேவியைத் தேற்றியது.

---

இவ்வண்ணம் புலம்புகின்ற கௌஸல்யாதேவியை நோக்கி, தருமத்தில் நிலைகொண்டவளான ஸுமித்திராதேவி தருமநிலை தவறாது இதமுரைத்துத் தேற்றலுற்றனள். கேளாய் மகாதேவி! சிறந்த நற்குணங்கள் நிறைந்த மானிட சிங்கமாகிய உன் அருமை மகன் தருமவழி நோக்கிச் செல்லுகையில், நீயேனிவ்வண்ணம் புலம்பியழுது வருந்துகின்றாய்? அம்மா கோஸலை! உன் செல்வமகன் தன் தந்தையை மெய்ம்மொழியராக்கக் கருதி, ராஜ்ஜியத்திலும் பற்றற்றுத் துறந்து, காடேறச் சென்று நற்செயலையே செய்தனன். இஃது பற்பல நல்லோர்கள் நடந்து தேய்ந்த நல்வழியே யன்றோ? ஆதலின், ஸ்ரீராமனுக்காக நீ ஒருபொழுதும் வருந்தற்க; அன்றியும், என் மகனாகிய லக்ஷ்மணன் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும், ஸர்வவித கைங்கரியங்களையும் செய்யத் துணிவுகொண்டு பிழையென்பதை யொழித்து எப்பொழுதூக்கத்துடனிருக்கப் பின்றொடர்ந்து சென்றிருக்கின்றனனன்றோ? எல்லாவுயிர்களிலும் அன்புகூர்ந்த இவன் இவ்வண்ணங் குற்றேவல் செய்யப் புகுந்தது, உன் மகனுக்கு நற்பேறன்றோ! இதுவரையில் துன்பமறியாத வைதேகியும், வனவாஸத்தில் மிகத் துயரம் நேருமென்பதையறிந்தும், உன் மைந்தனை இன்புறுவிக்குமாறே பின்றொடர்ந்து சென்றனள். ஆதலின் கீர்த்தியென்னும் பதாகையை மூவுலகிலும் படரச்செய்பவனும், தருமத்தையும் ஸத்திய விரதத்தையுமே தனமாக உடையனுமான உன் செல்வ மகனுக்குக் கிடைக்காத பாக்கியம் யாது உளது? உன் மகனுடைய தூய்மையையும் மகிமையையும் உண்மையாக அறிந்த சூரியனும், அவனது கரிய திருமேனி வாடுமாறு காயான். மிக்க குளிர்மையையும் மிக்க வெப்பமுமின்றி எல்லாக் காலங்களிலும் ஒரு தன்மையாகக் காட்டிலுண்டாகிய மந்தமாருதமுன் மகனின்பமுறுமாறு வீசும்; இரவிற் பல்லவசயனத்திற் பள்ளிகொள்ளும் உன் மகனைத் தண்மதி தந்தைபோலக் குளிர்ந்த கரங்களால் தழுவி யணைத்துச் சந்தோஷமுறச் செய்யும்; உன் குமாரனை ராமசந்திரன்* திமித்துவஜனென்கிற சம்பராஸுரனுடைய மகனைப் படைகளுடன் போர்சலியவடித்து மடித்து வெற்றி கொள்ளுகையில் நான்முகத்தேவன் மகிழ்ந் தெழுந்தருளி, உன் மகனுக்குக் கௌசிகமஹாமுனிவர் உபதேசஞ் செய்யாதொழிந்த பற்பல திவ்வியாஸ்திரங்களையுமுபதேசஞ் செய்தருளி இருக்கின்றனரன்றோ? ஆதலின், உன் மகன் தன்

---

* ஒருகால் ஸ்ரீராமபிரான் தண்டகாரணியஞ் சென்று ஆங்குள்ள வைஜயந்தமென்னும் பட்டணத்தைத் தகைந்து, தசரத சக்கரவர்த்திக்கு விரோதியாய் அங்கிருந்த சம்பராசுரனது மகனைவதைத்தனரென்றும், அதுகண்டு பிரமதேவர் பெருமகிழ்ச்சி கொண்டு திவ்வியமான அஸ்திரங்களை ஸ்ரீராமனுக்கு அளித்தனரென்றும், இதனால் விளங்குகின்றது.

தோள்வலியினாலே தானே பாதுகாக்கப் பட்டவனாகிப் பயமென்ப தின்றிக் கானகத்திலும் தனதகத்திற்போலவே மனமகிழ்ந்து வாழ்வான்; எவ்வகைப் பகைவரும், யாவனுடைய பாணத்துக் கிலக்காகில், வேறு தஞ்சமின்றிக் கெட்டழிந் திறக்கின்றார்களோ, அவ்வகை வலிவாய்ந்த உன் மகனுக்கு இப்பாரிலுள்ளவர் யாவர்தாம் வயப்பட்டு நடவார்கள்? உன் செல்வமகன் அழிவற்ற மேனியழகையும், பிறரை வெல்லுந் திறமையையும், பிறர் வெல்லவொண்ணாத் தோளாண்மையையு முடையவ னாதலால், விரைவில் வனவாஸந் தீர்ந்து, மீண்டிங் கெழுந்தருளித் திருவபிஷேகங் கொள்வான்; உன் செல்வப்புதல்வன் சூரியனுக்குஞ் சூரியனும், அக்கினிக்கும் அக்கினியும், இறைவனுக்கும் இறைவனும், இலக்குமிக்கும் இலக்குமியும், கீர்த்திக்குங் கீர்த்தியும், பொறுமைக்கும் பொறுமையும், தெய்வங்களுக்குச் சிறந்த தெய்வமும், பூதங்களுக்குமுள்ளும் புறமும் நிறைந்துள்ள சிறந்த பூதமும் ஆகின்றனன். அவனுக்கு நாடென்றுங் காடென்றும் வாசியுண்டோ? அவனுக் கெவ்விடத்திலும் பிரதிகூலமானவை யாவையுள்ளன? ஆதலின் நாட்டைவிட்டுக் காட்டுக்கெழுந்தருளிய எவனைநோக்கி அயோத்தியாபுரியிலுள்ள பிரஜைகள் அனைவரும் துயரந்தாங்காதவர்களாகிக் கண்ணீர்விட்டுக் கதறியழுகின்றனரோ, அந்த ஸ்ரீராமசந்திரன் சீக்கிரத்திலேதானே திரும்பிவந்து பார்மடந்தையுடனும், பூமடந்தையாகிய சீதையுடனும், ஜெயலக்ஷ்மியுடனும் பட்டாபிஷேகஞ் செய்யப் பெற்று விளங்குவான்; அன்றியும் ஸ்ரீராமன் மரவுரியுடுத்துச் சென்றனனாயினும், எவராலும் வெல்லுதற்கரியனாய் விளங்குகின்ற அவனைப் பின்றொடர்ந்து சீதாதேவிபோலவே இராஜ்யலக்ஷ்மியும் சென்றிருக்கின்றாளாதலின் அவனுக்குக் கிடைத்தற்கரியது யாது உளது? அன்றியும் கரத்தில் சிறந்த வில்லையும் சரத்தையும் வாளையுமேந்தி லக்ஷ்மணன் தானே முன்னடந்து சென்று பாதுகாக்கின்றமையால், இராமனுக்கு ஆங்கு கிடைத்தற்கரியது யாதுளது? ஆதலின், வனவாஸந் தீர்ந்து மீண்டெழுந்தருளும் உன் மகனை நீ கண்குளிர்க்கண்டு மகிழ்வாய்; இச்சோகத்தையும், மோகத்தையும் விட்டு மகிழ்க; இவ்விஷயத்தில்சந்தேகமில்லை, யான் ஸத்தியமாக உரைக்கின்றேன்; பூர்ணசந்திரனுதித்தாற்போல மீண்டுவந்து நிலாவு முன்மகன் உன் திருவடிகளைத் தொழக்கண்டு சந்தோஷமடைவாய்; உன் மகன் மீளவந்து இவ்வயோத்தியில் அபிஷேகங்கொண்டு செங்கோல் நடாத்தக்கண்டு ஆனந்தக்கண்ணீர் பெருக்கி மகிழ்வாய்; ஸ்ரீராமபத்திரனிடத்தில் சோகமாயினுந் துக்கமாயினுந் தீமையாயினு மொருகாலும் அணுகாது; அம்மகன் விரைவிலே ஸீதாலக்ஷ்மணர்களுடனே திரும்பிவந்துசேரக் காண்பாய்; இங்குள்ள ஜனங்களெல்லோரையும் நீஅன்றோ தேற்றி யருளவேண்டும்; அங்ஙனமாக, நீ யிவ்வண்ணம் மனத்தில் துயரங்கொண்டு வருந்துவதென்னை? இராமனைப் புத்திரனாகப் பெற்ற நீ இவ்வண்ணஞ் சோகமுறுவது தகுமோ? இவ்வுலகினில் ஸ்ரீராமனைவிட நல்வழி தவறாது நடப்பவர் வேறொருவருளரோ? ஸீதாலக்ஷ்மணர்களுடன் உன்மகன் மீண்டுவந்து உன் திருவடியைத் தொழக்கண்டு மழைக்கால மேகம் மழைபொழியு

மாபோலே நீ ஆனந்தக் கண்ணீர் பெருக்குவாய்; மென்மைபொருந்திப் பருத்துள்ள கரங்களால், ஸ்ரீராமன் தண்டம்ஸமர்ப்பிக்கையில் மகிழ்ந்து நீ ஆனந்தக் கண்ணீர் பெருக்கி, மேகமாலை யஞ்சனமலையை நனைப்பதுபோல அவனை நனைத்து மகிழ்வுறுவாய்-என்று இவ்வண்ணம் பற்பல வாக்கியங்களால்ஸுமித்திராதேவி கோஸலையாரை யுபசாரஞ்செய்து தேற்றி மௌனமடைந்தனள். அவ்வாக்கியங்களைக்கேட்டவளவில், கௌஸல்யா தேவியினது மனத்திலுள்ள சோகமானது, நீரற்ற சரத்கால மேகம்போலத் தேய்ந்தழிந்துவிட்டது.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்.

பிராஹ்மணர் முதலானோர் ஸ்ரீராமபிரானைப் பின்றொடர்ந்து தமஸாநதீதீரஞ் சேர்ந்தது.

---

இப்பால் சக்கரவர்த்தித்திருமகன் பிராட்டியுடனும், இளையபெருமாளுடனும் திருத்தேரை யலங்கரித் தெழுந்தருளுகையில், அந்நாட்டார் நகரத்தவர்களெல்லோரும் ஸ்ரீராமசந்திரனைவிட்டுப் பிரியமனமின்றி, அவருடைய திருமேனியழகிலும், திருக்கல்யாண குணங்களிலுமீடுபட்டு, அவரைச் சேர்ந்த சுஹிருத்துக்களும் மகாராஜருங் கூட வலுவில் திருப்பப்பட்டுத் திருவயோத்திக்கு மீண்டுசென்ற காலையிலும், தாங்கள் திரும்பாமல், ஸ்ரீராமன் திருவரணியத்தி லெழுந்தருளி யிருக்கு மளவும், தாமும் அவருடன் வாழ்ந்தின்பமடைய உறுதிகொண்டு, அத்திருத்தேரைப் பின்றொடர்ந் தோடினர்கள். சிறந்த நற்குணங்களையுடைய ஸ்ரீராமசந்திரன் பூர்ணசந்திரன்போல அத் திருவயோத்திலுள்ளவர் எல்லோர்க்கும் மிகவும் பிரியராக யிருந்தனரன்றோ? ஆதலின் அன்புகூர்ந்த அம்மஹாஜனங்கள் பலவாறாகவருந்தி வேண்டினார்கள். என்னவேண்டியும் ஸ்ரீராமபத்திரர் தம் திருத்தாதையை ஸத்தியவாதியாகச் செய்வதன்பொருட்டு வனமே நோக்கி எழுந்தருளினாரன்றி மீண்டிலர். தம்மைத் தொடர்ந்து வருகின்ற பிரஜைகளைத் தம் பிரஜைகளைப் போல அன்பு கூர்ந்து குளிரக் கடாக்ஷித்து அவர்களை நோக்கிக் கௌஸல்யா தேவி குமாரர், அன்பர்களே! என்மீது உங்களுக்கு எவ்வளவு அன்பும் நன்கு மதிப்பு முளவோ, அவ்வளவும் என் பரதன்மீது வைத்து மீண்டு சென்று மகிழ்வீர்களாயின், அஃதே எனக்கு மிகவும் பிரியமாகும். பரதனும் மிகுந்த நற்குண நற்செய்கை யுடையவனாதலால், உங்களுக்குத்தக்கபடி பிரியங்களையும், இதங்களையும் செய்து பாதுகாப்பான். ஞானத்தால் முதிர்ந்தவனும், வயதினால் பாலனும், பொறுமை யாளனும், சிறந்த தோள்வலியனும் ராஜநீதியறிந்தவனுமாகிய அவனே உங்களுக்குத் தக்க ராஜனாகுவான்; அன்றியும், அவனே யுவராஜனாக மஹாராஜரால் நியமிக்கப்பட் டிருக்கின்றனன். மஹாராஜ

ருடைய கட்டளைப்படி நீங்களும் நாங்களும் செய்யவேண்டுவது கடமையன்றோ? ஆதலின், வனவாஸஞ் சென்ற என்னை நினைத்து மஹாராஜர் வருந்தாத வண்ணம் நீங்களெல்லீரும் அவரருகிலிருந்து தேற்றி யவரைப் பாதுகாப்பீர்களாகில், அதுவே எனக்கு மிகவும் இதமாகும் என்றிவ்வண்ணம் அருளிச்செய்தனர். மஹாஜனங்களும் அவ்வருளிச்செயலைக் கேட்டு ஸ்ரீராமபிரானை நோக்கி, ஸ்வாமி! மஹாராஜர் முதலில் எங்களை யழைப்பித்து, ஸ்ரீராமபிரானுக்கே இளவரசுப்பட்டங் கட்டுகிறேனென்று அருளிச்செய்தனர்; இதுவும் மஹாராஜருடைய கட்டளை யாதலால், இதனை நீரும் நாங்களும் மற்றெல்லோரும் நிறைவேற்றவேண்டு மன்றோ? ஆதலின், தேவரீரே எங்களுக்கு இறையன்றி மற்றொருவருமாகார்; நாங்கள் உம்மை விட்டுப் பிரியோமென்று உரைத்து, ஸ்ரீராமசந்திரன் பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்வதிலுறுதிகொண்டாற்போல், இவர்களும் ஸ்ரீராமபிரானைப் பின்றொடர்ந்து செல்வதிலே யுறுதிகொண்டனர்கள். அக்காலையில் கண்களில் சோகநீர்பெருகக் கண்மறைந்து வாடி வருந்துகின்ற அத்திருவயோத்தியா ஜனங்களெல்லோரையும் ஸ்ரீராமனும் இளையபெருமாளும் தம்முடைய திவ்வியகல்யாண குணங்களாகிய கயிற்றினுல்கட்டிப் பற்றி இழுத்தருளினுர் போலும். அவர்களுள் ஜ்ஞானத்தினுலும், வயதினுலும், தவத்திறமையினுலும் முதிர்ந்த வேதியர்கள் மூப்பினுல் தலைநடுங்க வோடிவந்து, ஸ்ரீராமனுடைய திருத்தேர்க் குதிரைகளை நோக்கி, கேளீர் நற்குலத்திற்பிறந்த சிறந்த துரங்கமங்களே! நீங்கள் மீண்டு திருவயோத்திக்கே வரக்கடவீர்கள்; வனம் புகக்கடவீ ரல்லீர்; எல்லா வுயிர்களுக்கும் வாய்திறந்து பேசுந் திறமையில்லையாயினும், செவிப்புலனுளதன்றோ? ஆதலின், எங்களுடைய வேண்டுதலுக் கிரங்கி, உங்களுடைய மஹாராஜருக்கும் இதத்தைச் சிந்தித்து, மிகவுந் தருமசிந்தை யுடையவரும், நின்மலரும், சூரரும், மஹாதீரருமாகிய உங்களுடைய பர்த்தாவை இங்கேதிருப்பி எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வரக்கடவீ ரல்லது, செல்லக்கடவீரல்லீர்-என்றிவ்வண்ணம் பலவாறுகச்சோகத்தால் தீனமாகப்புலம்பிக்கொண் டோடிவந்தனர்கள். அவ்வாறு ஓடிவருகின்ற அந்தணர்களை ஸ்ரீராமசந்திரர் கடாக்ஷித்து, பெரியோர்களாகிய அவ்வேதியர்கள் நடந்தெழுந் தருளுகையில் தாம்திருத்தேர்மிசை எழுந்தருளி விரைவாகச் செல்லலாகாதெனத் திருவுளங்கொண்டு சீதாலக்ஷ்மணர்களுடன் திருத்தேரினின்றுமிறங்கிக் கிட்டக்கிட்டத் திருவடிசாத்தி நடந்தெழுந்தருளினுர். இவ்வண்ணம் நடந்தெழுந்தருளும் நம்பேருளாளனைக் கண்டு சில அந்தணர்கள் மிகவும் சோகமடைந்து அவரைநோக்கி, ஸ்வாமி, செந்தாமரைக்கண்ணு! ஆழிவண்ணு! எம் கண்ணு! மணி வண்ணு! சிறந்த வேதியர்களின்திரளெல்லாம் தேவரீரைப்பின்றொடர்ந்தே வருகின்றன; கார்ஹபத்தியம், ஆஹவநீயம், தக்ஷிணம் என்னும், மூவகையக்நிகளும், பிராஹ்மணர்களின் * தோளின்மீதிலேறித் தேவரீர்பின் வருகின்றன.

* இவ்வக்நிகள் அரணியில் ஸமாரோபணம் பண்ணப்பட்டவை; இல்லாவிடின் தோளிலேறுவது கூடாமையாம்.

வாஜபேய யாகஞ்செய்து நாங்கள் பெற்ற எங்களுடைய சரத்கால மேகங்கள் போன்ற வெண்குடைகளைக் கடாக்ஷித்தருளீர். ' முச்சகநிழற்று முழுமதித் தனிக்குடையின்றி வெயிலினுல் வாடி வருந்தி எழுந்தருளும் தேவரீருக்கு இக்குடைகளை அடியோங்கள் பிடித்துக்கொண்டுவந்து கிருதார்த்தர் களா கின்றோம். ஸர்வகர்ம ஸமாராத்தியா, ஸர்வலோக சரண்யா, அடியோங் களுக்கு வேதமோதுவதிலும், மந்திரம் ஜபஞ் செய்வதிலும், தவம் புரிவதிலு மிருந்த மனவுறுதி இப்போழ்து தேவர் பொருட்டு தேவருடன் வனவாஸஞ் செல்வதில் நிலைகொண் டிருக்கின்றது; எங்களுக்குப் பொருளென்பது வேத மே யாதலின், அஃது எங்களுடைய இதயத்தில் தானே நிலைத்திருக்கின்றது; எங்கள் பத்தினிகளோ, தங்கள் கற்பினுல் காக்கப்பட்டவர்களாகிக் குடில் களிலே தானே சுகமாக வாழ்ந்திருப்பார்கள்; ஆதலின் அவர்களைப்பற்றிய விசார மெங்களுக்கில்லை. தேவருடன் பின் வருவதில் முன்னமே நாங்கள் நிச்சயங்கொண்டிருக்கின்றமையால், இப்போழ்து தேவர் மீட்கினும் மீளோம்; தேவரைத் திருப்பி எழுந்தருளப் பண்ணவேண்டுமென்று யாங்கள் நிச்சயங்கொண் டிருக்கின்றமையால், தேவர் மீளின் அடியோங்களும் மீள் வோம்; தேவர் தருமத்தைப் பாதுகாக்க வன மெழுந்தருள்வதாயின், அடி யோங்களுக்குத் தேவரே தருமமாதலின், வேறு தருமங்கள் விட்டுவிடக் கட வன வல்லது, செய்யக்கடவனவல்ல. மூப்பினுல் நரைத்த சிரங்களுடனே தரையில் வீழ்ந்து வேண்டுகின்ற அடியேங்களுடைய வேண்டுகோளுக் கிரங்கி மீண்டெழுந்தருளக்கடவீர். மிக விஸ்தாரமான எங்களுடைய யஜ்ஞங்களெல் லாந் தேவரைத் திருப்பும்பொருட்டே நிறுத்தப்பட்டன. ' தேவர் திரும்பி எழுந்தருளாவிடின், அந்த யாகங்கள் தேவராலேயே கெடுக்கப்பட்டன வா கும்; ஜங்கமா ஜங்கமங்களாயுள்ள உயிர்களெல்லாம், தேவரிடத்தில் பத்திதலைக் கொண்டு வருந்துகின்றன; ஆதலின், வேண்டுகின்ற அடியேங்களுடைய பத் திக்கிரங்கித் திரும்பி எழுந்தருளக் கடவீர். காலின்மையால் தேவரைத் தொடர்ந்துவரத் திறமையற்ற பாதபங்களும், வாயுவேகத்தால் நிமிர்ந்து தேவ ரைக் கண்டு கூவி யழுகின்றன போலத் தோன்றுகின்றன; பறவைகளும் உணவுநீங்கி மரத்தின்மீது அசைவற்று உட்கார்ந்து சோகங்கொண்டு, தேவ ரை மீளும்படி யாசனை செய்கின்றனபோலக் காண்கின்றன வென்றனர். இவ்வண்ணம் அவர்கள் ஸ்ரீராமசந்திரனை வேண்டிக்கொண்டே செல்லுகை யில், ஸ்ரீராமபத்திரனை வனவாஸ மெழுந்தருள வேண்டாமென்று தடுப்பது போல நின்மலமாகிய தமஸையென்னும் மஹாநதி குறுக்காகத் தோற்றிற்று. நெடுந்தூரம் நடந்து வாடிய திருத்தேர்க் குதிரைகளை ஸுமந்திரர் ஆங்கு அவிழ்த்துப் புரண்டெழச் செய்து, நீர் குடிப்பித்துக் குளிப்பாட்டித் தேய்த்து இளைப்பாற்றித் தமஸைனருகில் மேய்த்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தாறுவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபத்திரன் நடுராத்திரியில் யாவரையும் தமஸாதீரத்தில்விட்டுவிட்டு ஸீதாலக்ஷ்மணர்களுடன் திருத்தேரின்மீதேறிக்கொண்டு காடுபோய்ச் செழுந்தருளி விட்டது.

---

மிகவும் அழகிய தமஸாநதியின் கரையை யடைந்த சக்கரவர்த்தித் திருமகன் அநந்தரம் பிராட்டியாரைக் கடாக்ஷித்துக் கொண்டு இளையபெருமாளை நோக்கி அருளிச்செய்கின்றனர்: தம்பி! நாம் வனவாஸம் புறப்பட்டபின் முதலில் நமக்குக்காட்டில் நேர்ந்த இராத்திரி இதுதான். படைவீடு விட்டு வந்துவிட்டோமே யென்று நீ இதுகண்டு வருந்தற்க; உனக்கு மங்கலமுண்டாகக்கடவது. இப்பொழுது இங்குள்ள மிருகபக்ஷிகள் தத்தமுறைவிடஞ் சேர்ந்து இவ்வரணிய மெங்குஞ்செயலற்றிருப்பதாலும், இங்குற்ற பறவை முதலியவற்றின் தொனியாலும், நம் துன்பத்தைக் கண்டு எங்கும் கூவியழுவது போலத் தோன்றுகின்றது பார்; இப்பொழுது திருவயோத்தியில், ஆண்பெண்ணடங்கலும் பிரிந்துவந்த நம்மை நினைந்து வருந்தி யழுவார்கள்; இவ்விஷயத்தில் ஐயமிலது; அந்நகரியிலுள்ள யாவரும் மஹாராஜரிடத்திலும், உன்னிடத்திலும், என்னிடத்திலும், பரதசத்துருக்கநர்களிடத்திலும், மிக அன்புகூர்ந்தவர்க ளல்லரோ? மஹாராஜரும், என் மாதாவும், அடிக்கடி என்னை நினைந்தழுது மதிமயங்கி, அந்தகராகிச் சோகக்கடலில் மூழ்கிக் கிடப்பர்களே, அதைநினைக்க எனக்கு மிகவும் சோகமுண்டாகின்றது; துன்பமுறுந் தாய் தந்தையர்களைப் பற்பல நல்வாக்கியங்களால் தேற்றிச் சோகத்தை யாற்றும் பரதனல்லனோ நல்வினையினன்; பரதனுடைய நற்குண நற்செய்கைகளை யடிக்கடி நினைத்துத் தாய் தந்தைகளைக் குறித்த் துன்பமொருவாறு தணிகின்றேன். நீ என்னுடன் வந்தது நற்செயலாயிற்று; இவ்வரணியத்தில் ஜானகியைப் பாதுகாக்கும் விஷயத்தில் எனக்கு உதவி செய்யத்துணை வேண்டுமன்றோ? இவ்விடத்தில் பற்பல கனி காய் கிழங்கு முதலிய நல்லுணவுகள் உள்ளனவாயினும், நீரையேபருகி இன்றிரவைச் சுகமாகப் போக்குவோம்; இஃது புண்ணியக்ஷேத்திர மாகையால் இவ்வண்ணம் க்ஷேத்திரோபவாஸஞ் செய்வதே நலமெனத் தோற்றுகின்றது என்றருளிச்செய்து, ஸுமந்திரரை நோக்கி, ஸாரதி! நீரிவ் வசுவங்களைப் புறப்பாடின்றி ஊக்கத்துடன் பாதுகாத் தளிக்கக்கடவீர் என்று கட்டளையிட்டனர்.

ஸுமந்திரருஞ் சூரியாஸ்தமயமான பின்னர் துரகங்களை ஓரிடத்திற் கட்டி மிகுதியும் புற்குவை கொணர்ந் திட்டு, மாலைப்பொழுதில் செய்யத்தக்க நீர்க்கடன்களை முடித்து, இளையபெருமாளுடன் கூடித் தளிர்களினால் ஸ்ரீராமபத்திரனுக்குத் திருப்பள்ளி யியற்றினர். சக்கரவர்த்தித் திருமகனும் மாலைக்கடன்களைச் செய்தருளிப் பிராட்டியாருடன் அத்தளிர்ப் படுக்கையில், இனிதுபடுத்துத் துயின்றருளினர். ஹம்ஸதூளிகாமஞ்சத்தில் யோகநித்

திரை செய்யத்தக்க தம்மையனிப் பல்லவ சயனத்தில் பிராட்டியாருடன் துயுலுவதைக் கண்டு இளையபெருமாள் மிகச் சோகங்கொண்டு, தம்மைய னுடைய பற்பல திருக்கல்யாண குணங்களை ஸுமந்திரருடன் எடுத்துரைத் துப் புகழ்ந்து மகிழ்ந்திருந்தனர். அங்ஙனம் அவர் துயிலாது விழித்திருக்கை யில், அவருக்கு இரவு கழிந்து பொழுதுவிடிந்து ஆதித்தனுமுதித்தனன்.

பசுக்கூட்டங்கள் நிறைந்த அத்தமஸாதீரத்தில், அம்மஹாஜனங்களுடன் கூடி யோகநித்திரை செய்த ஸ்ரீராமபிரான் நடுப்பொழுதிலெழுந்து ஜனங்கள் துயிலுவதைக் கடாக்ஷித்து இளையபெருமாளை நோக்கி, ஸுமித்திராநந்தன! இம்மஹாஜனங்கள், மண்ணாசை பெண்ணாசை பொருளாசைகளையுந் துறந்து நம்மிடத்தில் பேரன்புகொண்டு மெய்வாட நடந்து வருந்தி, இம்மரத்தடிகளில் படுத்து மெய்ம்மறந்து துயிலுகின்றார்கள் பார்த்தாயோ! இவர்கள் நம்மைத் திருப்புவதில் உறுதிகொண்டு பின்றொடர்கிறார்கள்; உயிரைவிடினு மிவ்வுறு தியை விடார்கள். ஆதலின், இவர்களெழுவதன் முன்னமே நாம் தேரேறி வழிபற்றி விரைந்து செல்வோம்; நம்மெண்ணத்தை யாராயினு மறிவராயின் மீளவு மிவர்கள் தூங்காமல் காத்திருப்பார்கள், இவர்களை நாமுடன்கொண்டு போய் இவ்வண்ணம் வருத்துவது திருத்தமன்று; நாட்டாரைக் காட்டா ராக்கி வாட்டார் வேந்தர்கள் என்றருளிச்செய்தனர். அதனைக்கேட்டு இளைய பெருமாளும், இஃதொக்கும்; அடியேனுக்கு முகப்பாகுமென்று விண்ணப்பஞ் செய்தனர்.

உடனே ஸ்ரீராமபத்திரன் தேர்ப்பாகனையழைத்து, ஸுமந்திரரே; நாமிப்பொழுதே காடுநோக்கிச் செல்லக்கடவோம்; நீர் விரைவாக ரதத்தைக் கட்டி ஸித்தஞ் செய்யுமென்று கட்டளையிட, ஸூதரும் விரைவாகத் திருத் தேரில் குதிரைகளைக் கட்டி ஸ்ரீராமரிடம் வந்து கைகூப்பித் தண்டம் ஸமர்ப் பித்து, ஸ்வாமி மகாரதிகரே! திருத்தேர் ஸித்தஞ் செய்யப்பட்டு நிற்கின்றது, தேவருக்குச் சுபமுண்டாகக்கடவது; பிராட்டியுடனும், இளையபெருமாளுட னு மிதன்மிசையேறி யலங்கரித் தருளக்கடவீர் என்று விண்ணப்பஞ்செய்த னர். சக்கரவர்த்தித் திருக்குமாரரு மதிலெழுந்தருளி, சுழித்தலைத்துப் பெருகும் அத்தமஸா நதியை விரைந்து தாண்டி அக்கரையில், அச்சமுறுத் தும் கொடியவிலங்குகள் அஞ்சத்தக்க நல்லதோர் பெருவழியிற் சேர்ந்தனர். ஆங்கு ரகுநந்தனன் அந்நாட்டாரை மயக்குதற் பொருட்டு ஸுமந்திரரை நோக்கி, ஸாரதி! நாங்கள் இவ்விடத்தே நிற்கின்றோம்; நகரத்தாருக்கு நாம் சென்றவழி தெரியாதிருத்தற்பொருட்டு நீரித் திருத்தேரை வடக்கு முகமாகச் சிறிதுதூரஞ் செல்லவிட்டு, மீளவுந் திருப்பி விரைவாகத் தென்முகஞ் செலு த்தி, இவ்விடம் கொண்டுவரக்கடவீ ரென்று கட்டளையிட்டருளினர். ஸுமந் திரரும் அவ்வருளிச் செயலைக்கேட்டு அவ்வண்ணமே திருத்தேரை வடக்கே கொண்டு போய் அதுசென்றவழியைப் பிறரறியாவண்ணந் தெற்கே திருப்பி வந்து ஒரிடத்தில் நிறுத்தி, ஸ்ரீராமசந்திரனுக்கு விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீராம லக்ஷ்மணர்கள், பிராட்டியாருடன் அத்திருத்தேரை யலங்கரித்தருளினர்கள்.

தேசாந்தரஞ் செல்வோர் முதலில் யமதிசைநோக்கிச் செல்லலாகாதென்று ஸுமந்திரர் திருத்தேரைச் சற்று தூரம் வடக்குமுகமாகச் செல்லவிட்டு, மறுபடியுந் தெற்கே திருப்பிக் குதிரைகளைத் தூண்டி யோட்டினர். ஸ்ரீராமன் இவ்வாறு விரைவாக நெடுந்தூர மெழுந்தருளித் தபோவனத்திடை சேர்ந்து திகழ்ந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தாறுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரானைத் தொடர்ந்து சென்ற மஹாஜனங்கள் தூங்கியெழுந்து
ஸ்ரீராமனைத் தேடிக் காணுமல் திருவயோத்
திக்குத்திரும்பியது.

---

இங்கு தமஸாதீரத்தில் துயில்கொண்ட மஹாஜனங்கள் பொழுது விடிந் தெழுந்து, ஸ்ரீராமசந்திரனைக் காணுமல் மிகவுஞ் சோகித்துச் செயலற்று மனம் நொந்து கண்ணீர்பெருக்கி, அங்கு மிங்கு மோடித் தேடித் தேரையாயினுந் தேர்முனையையாயினுந் தேரினுலெழுந் துகளையாயினுங் காண்போமோ வென அல்லாடினுர்கள். அவையாதொன்றையுங் காணுமல் அவர் சென்ற திக்குமுணராமல் முகம்வாடி ஒளியிழந்து மனம் நைந்து, அந்தோ! இப்பாழுந் துயிலன்றோ நம்மைக் கெடுத்தது, கவாடம்போலகன்ற திருமார்பையும், முழங்காலளவு நீண்ட புஜங்களையும், செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுமுடைய நீருண்டிருண்ட கொண்டல்வண்ணனை இப்பொழுது காணப்பெற்றிலோமே! தந்தை தன் மக்களைப்போல இதுகாறு மெம்மைப் பாதுகாத் தளித்தருள் செய்த எம்பெருமானும், பக்திகொண்டு தஞ்சமென்று வந்தடைந்த எம்மை விட்டகன்று நெடுந்தூர மெழுந்தருளி விட்டனரே; ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த பின் யாமுயிர்வாழ்வது எதுக்கு? இவ்விடத்திலேயே பிராயோபவேசஞ்செய் திறப்போமா? மகாபிரஸ்தானஞ் செய்திறப்போமா? இவ்விடத்தில் உலர்ந்த கட்டைகள் மிகுதியாயுள்ளனவே, அவைகளையீட்டிச் சிதையடுக்கிச் செழுந்தழல் வளர்த்தி, அதில் வீழ்ந்திறப்போம்; யாமிங்கிருந்து திரும்பிப்போவாமாயின், ஸ்ரீராமனெங்கேயென்று நம்மைக் கண்டு கேட்போர்களுக்கு என்ன பதிலுரைப்போம்; பொறுமையின்றி இனியமொழி கூறும் ஸ்ரீராமபிரானைக் காடுசெல்ல விட்டு வந்தோமென்று அவர்களிடம் எவ்வண்ணம் விடுத் துரைப்பது? ஸ்ரீராமபிரானின்றித் தனியே திரும்பிவரும் நம்மைக்கண்டபோதே அத்திருவயோத்தி ஆண்

பெண்ணலி இளைஞர் மூத்தோ ரடங்கலும் மகிழ்வற்று வருந்துவரென் பதி லையமில்லை, அம் மஹாவீரருடன் புறப்பட்ட நாமும் நடுவழியி லவரை யிழந்து, பாழடைந்த வந்நகரி லெவ்வண்ணம் புகுவோம் என்றிவ்வண்ணங் கைகளை யுயரவெடுத்துக் கன்றினைப் பிரிந்த தேநுவைப்போல ஓ வென்று புலம்பினர்கள். மறுபடியும் தேர் சென்றவழி பற்றிச் சிலதூரஞ்சென்று மேலே வழிகாணுமல் மிகவும் வருந்தித் திரும்பி வந்து, அந்தோ! இதென்ன, இனி யாதுசெய்வோம்? தெய்வமெம்மைப் பகைத்துக் கெடுத்ததே யென்று பலவாருகப் புலம்பி வேறுவகை யில்லாமல் சென்றவாறே திரும்பினர்கள். திரும்பி மிக வருந்தும் ஸஜ்ஜனர்களையுடைய திருவயோத்தியை யடைந்து, அந்நகரி எங்குமுறங்கியிருப்பதைக்கண்டு ஆ! கருடனலெடுக்கப்பட்ட பன்னகங் களையுடைய பெருமடுப்போல ஸ்ரீராமசந்திர னில்லாத இந்நகரி மிகத் திகழ்ந் திலதே? சந்திரனற்ற வாகாசம்போலவும், நீரற்ற கடல்போலவு மாயிற்றே என்று சோகங்கொண்டு மோஹித்து மகிழ்வற்றவராயினர். செல்வம் நிறை ந்த தத்தம் மனைகளை யடைந்தும் அவர்கள் இஃது நமதெனவும், இவரினத்தா ரெனவும், இவர் சுற்றத்தாரெனவும், இவர் பிறரெனவுந் தேர்ந்துணரு மறி வற்று, அல்லும் பகலுந் ததேகசிந்தரா யிருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.



திருவயோத்தியிலுள்ளோர் ஸ்ரீராமனை நினைந்து
வருந்தியது.

---

ஸ்ரீராமன் பின்சென்று திரும்பி நகரஞ் சேர்ந்தவர்கள் இவ்வண்ணஞ் சோகத்தால் மிகவும் வருந்திக் கண்களில் சோகநீர்ததும்பி இறப்பதினு முறுதி கொண்டு உயிர்கள் மேலெழுந்தனபோல மூர்ச்சையடைந்தனர்கள். அவர் கள் தத்தம் மனை சேர்ந்து புத்திர மித்திர களத்திராதிகளுடன் கூடி, இஷ்ட பந்துவை யிழந்தவர்கள்போலக் கண்ணீர்விட்டழுதனர்கள். வர்த்தகர்களெல் லாரும் மகிழ்வற்று உவகை குன்றிமூடிய கடைகளைத் திறந்தவரல்லர்; இல் லறத்தோரனைவரும் தமதுகிருகங்களில் சமையலுக்காக நெருப்பே மூட்டி ஞரல்லர்; தளிகைசெய்திலர்; நஷ்டமான பொருளைப் பெற்றவர்களும், மிகுந்த லாபமடைந்தவர்களும் சந்தோஷப் பட்டிலர்; புதிதாக நன்மகனைப்பெற் றெடுத்த பெண்பிள்ளையும் மகிழ்ந்திலள். மனைகள்தோறு முள்ள வனிதையர் களும் ஸ்ரீராமனை விட்டுத் திரும்பி வந்த தம் பர்த்தா முதலானோரைக் கண்டு, ஸ்ரீராமபத்திரனைக் கண்டு களிக்காமல் ஏன் மீண்டீர்கள், உங்களுக்கு இம்மனை களினாலாயினும், எம் மனைவியர்களினாலாயினும், இம்மக்களினாலாயினும், இச்

சிற்றின்பங்களினுலாயினு மென்ன பயன்? இவ்வுலகினில் இளையபெருமாள் ஒருவரே யன்றோ ஸத்புருஷர்! அவர் ஸீதையுடன் கூடிய ஸ்ரீராமசந்திரருக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கரியங்களையுஞ் செய்யத்துணிந்து, ஸ்ரீராமசந்திரனுடன் மீளா தெழுந்தருளினரன்றோ? காட்டிலுள்ள நதிகளும், தாமரைத் தடாகங்களும், ஆம்பலோடைகளும் நல்வினை செய்தன; அவைகளில், ஸ்ரீராமபிரானிறங்கி நீராடியருளுவரன்றோ! மரங்கள் தழைத் தழகாகிய காடுகளும் புளினங்களையுடைய நதிகளும், தாழ்வரையுள்ள மலைகளும், ஸ்ரீராமபத்திரனுக்கு இன்பமளித்து அவரை மகிழ்விக்குமே; ஸ்ரீராகவன் எவ்விடத்திற் கெழுந்தருளுகின்றனரோ ஆங்குள்ள காடாயினும், மலையாயினும், மற்றுமுள்ள எவ்வஸ்துவாயினும் தமக்குப் பிரியமுள்ள அதிதியாக வரும் ஸ்ரீராமபத்திரனைப் பார்த்து பூஜைசெய்யா திருக்க வல்லனவாகுமோ? விசித்திரங்களாகிய மலர்களென்னும் சிரோ பூஷணங்களையும் பலவகைப் பூங்கொத்துக்களையுமுடையவெறிகொள்வண்டுபண்கள்பாடும்பாதபங்கள் ஸ்ரீராமசந்திரனுக்குச் சிறந்த காட்சியளிப்பனவாகும்; தம்மிடமெழுந்தருளும் ஸ்ரீராமனைக்கண்டு மஹீதரங்களும் அன்பினால் அகாலத்திலும் பூ கனி காய் கிழங்கு முதலியவற்றை யுண்டாக்கியும், அமிழ்தம்போன்ற நற்சுனை நீரைப்பெருக்கியும், ஸ்ரீராமனுக்குப் பூஜைசெய்யும்; மலைமிசையிலுள்ள பாதவங்களும் அழகிய காட்சியளித்து ஸ்ரீராமபத்திரரை இன்புறச்செய்யும். இவ்வண்ணம் அசேதனங்களும் ஸ்ரீராமசந்திரருடைய திருக்கல்யாண குணங்களுக் கீடுபட்டு ஸ்ரீராமபத்திரனுக்கு உபசாரம் செய்யுமாதலின்.

యత్ర రామో భయం నాత్ర నాస్తి తత్ర పరాభవః।
సహి శూరో మహాబాహుః పుత్రో దశరథస్య చ॥

யத்ரராமோபயந்நாத்ர நாஸ்திதத்ரபராபவா: |
ஸஹிசூரோமஹாபாஹு: புத்ரோதசரதஸ்யச ||

ஸ்ரீராமபத்திரர் எழுந்தருளியிருக்கு மிடத்தில், பயமாகிலும், அவமதிப்பாகிலும் உண்டோ? ஒருகாலும் உண்டாகா. அவர் ஒப்பாருமிக்காருமற்ற மஹாவீரரும், மகாசூரராகியதசரதமஹாராஜர் மூத்த திருக்குமாரருமாகி, நமக்கும் மூவுலகினுக்கும் மும்மூர்த்திகளுக்கும் முக்குணங்களுக்கும் மூலமாகின்றனர். நாம் தாமஸஞ் செய்தால் அவர்நெடுந்தூர மெழுந்தருளி விடுவராதலின், நாமெல்லோரும் விரைவாகப்பின் செல்வோம்; அத்தன்மையராகிய மஹாபுருஷருடைய திருவடிநிழலே நமக்குச் சுகந்தருவது, அவரே நம்மெல்லோர்க்கும் இறைவர்; அவரே தஞ்சம்; அவரே அடைக்கலம்; நாங்கள் ஸீதாபிராட்டியார்க்குப் பணிவிடை செய்வோம்; நீங்கள் பெருமாளுக்குக் குற்றேவல் செய்யக்கடவீர்கள், இங்கேன் வந்தீர்கள்? என்று கஜங்களை யங்குசத்தால் இடித்து நல்லறிவு மூட்டுவதுபோல, இவ்வண்ணமாகிய வாக்கியங்களா லிடித்திகழ்ந்து பேசினார்கள். பின்னும் அந்த ஸ்திரீகள் அவர்களை நோக்கி, எம் பிராணநாதரே! உங்களுக்கு ஸ்ரீராமசந்திரரும், எங்க

ளுக்குப் பிராட்டியாரும் யோகக்ஷேமங்களைச் செய்தருள்வர்கள். ஒளியற்றுப் பாழடைந்து சோகங்கொண்ட ஜனங்களையுடைய இவ்வீட்டில் வாழ யாவனுயினும் இச்சைகொண்டு மகிழ்வனோ? இவ்விராஜ்ஜியம் நாதனற்றது போல நீதிதப்பிக் கைகேயிபாலாகிப் பெண்ணரசாகுமாயின், பிறகு நாமுயிர் வைத்திருந்தாவதென்னை? அப்பொழுது இவ்வுயிர்களினாலும், வீட்டினாலும், பொருளினாலும், மக்களாலும் பயன்யாதுளது; பொருளையே பெரிதாக எண்ணி அவள் பர்த்தாவையும், ஸ்ரீராமபத்திரனையுமிழக்கத்துணிந்த குலங் கெடுக்கும்பாவியாகிய அக்கைகேயி மற்றெவரைக் கைவிடத் துணிவுகொள்ளாள்! அவளுடைய ராஜ்ஜியத்தில் அடிமைப்பட்டுக்கூலிக்காரராகிப் பிழைத்திரோம்; அவள் பிழைத்திருக்கு மளவும் நாங்கள் இவ்விராஜ்ஜியத்தில் பிழைத்திரோம்; எங்கள் பிள்ளைகள்மே லாணையிட்டுச் சொல்வோம்; யாவளொருத்தி அத்தன்மையனாகிய சக்கரவர்த்தித் திருமகனைக் காட்டுக் கோட்டினளோ, அப்படிப்பட்ட கொடியபாவியாகிய அவளையடுத்து யார் பிழைத்திருப்பார்கள். கைகேயியின்பொருட்டே இவ்விராஜ்ஜியமெல்லாம்பீடை செய்யப்பட்டு ஆதாரமற்று நாதனின்றி நாசமடையப் போகின்றது. ஸ்ரீராமபத்திரர் வநவாஸமெழுந்தருளிய பின், மஹாராஜர் பிழைக்கப் போகின்றதில்லை; மகாராஜரிறந்த பின் யாவரும் புலம்புவார்களென்பதிலுமையமில்லை. ஆதலின், அன்பர்களே! இங்கிருந்து இவ்வண்ணம் நல்வினை யற்றவர்களாகுவதினும் விஷத்தையுண்டாயினும் இறக்க; ஸ்ரீராமசந்திரனையாயினுந் தேடிப் பின்றொடர்க; சென்ற ஸமாசாரமும் எட்டாத தூரதேசத்திற் காயினும் ஓடிவிடுக; வஞ்சனை செய்து ஸீதாலக்ஷ்மணர்களுடனே ஸ்ரீராமன் காட்டி லோட்டப்பட்டனர். ஊன் விற்போனிடத்தில் பசுவை விட்டுவிட்டாற்போல நாங்கள் பரதனிடத்தில் கொடுக்கப்பட்டோம். பூரணசந்திரன்போன்ற திருமுகமண்டலமும், நீர் கொண்ட மேகம்போன்ற திருமேனியும், எலும்புமறைய பருத்ததோள்களின் ஸந்தியும், பகைகளைக் கொல்லுந் திறமையும், நீண்ட திருக்கைகளும், செந்தாமரை போன்ற திருக்கண்களும், செருக்கின்றி முன்னமே பேசுவிக்கும் நற்குணமும், அணிகளின்றித் திகழுங் கட்டழகும், ஸத்தியமும், சிறந்த தோள் வலியும், யாவர்க்கு மினிமையும், சந்திரன்போன்ற குளிர்ந்த காந்தியும், மதயானைபோன்ற நடையும் பொருந்திய ஸ்ரீராமசந்திரன் இளையபெருமாளுடனும் ஸீதாபிராட்டியாருடனுங் கூடி மதயானைபோல ஸஞ்சரிப்பவராகி அரணியங்களை விளங்கச்செய்வாரென்பதில் ஸந்தேஹமில்லை; நாமிங்கேன் வாடி வருந்துதல்வேண்டும்—என் றிவ்வண்ணம் புலம்பி, மரணமடையுங் காலையிற்போல மிகத் துன்புற்றுக் கூவி யழுதனர்கள்.

இவ்வாறு இவர்கள ஸ்ரீராமசந்திரனையேநினைந்தழுகையில், கதிரவனுமித் துன்பத்தைக் கண்ணுறப் பொறுதவன்போல அத்தமயகிரியையடைந்தனன். இரவுந் தோன்றிற்று; அப்பொழுது அத்திருவயோத்தியும் ஒருவரும் அக்கினிஹோத்திரஞ் செய்யாமலும், பாகஞ்செய்யாமலும், தீபமேற்றாமலுமிருந்தமையால் விளக்கமற்று வேதகோஷமும் புராணகதைகளு மின்றி இருள்மூண்டு மருள்கொண்டதுபோலாகியது. கடைத்தெருக்கள் மூடப்பட்டு ஜனங்களின்

ஸஞ்சாரமற்றனவாகி விண்மீன்களின் ஒளியற்று மேகங்களா லிருள்கொண்ட ஆகாயம்போலத் தோற்றியது. அவ்வநிதையர்களும் தம்பிள்ளையையுமுடன் பிறந்தார்களையு மோட்டினாற்போல மிக வருந்தி மதிமயங்கிக் கோவென்று கேவியழுதனர்கள். ஸ்ரீராமபத்திரர் அவர்களுக்குப் பிள்ளையைவிடப் பிரிய முள்ளவராக இருந்தன ரல்லரோ? அப்பொழுது ஆட்டம் பாட்டமும் வேதாதிகோஷமுமின்றித் தொனியற்ற அயோத்தியாபுரி ஊழிகாலத்தில் பிரளயகாலாக்கினியால் சோஷிப்பிக்கப்பட்ட நீரையுடைய மஹார்ணவம் போலாயிற்று.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

### ஸ்ரீராமன் பலநதிகளைக்கடந்து எழுந்தருளியது.

---

இப்பால் சக்கரவர்த்தித் திருமகன், தந்தை வாக்கியத்தைத் தலைக் கட்டுவதில் உறுதிகொண்டு, பின்றொடர்ந்து வந்தவர்களைத் தமஸாநதி யின் கரையில் விட்டுவிட்டு, அவரறியாவண்ணம் அன்றிரவு கழிந்து பொழுது விடிவதன் முன்னமே நெடுந்தூர மெழுந்தருளினர். உதயமான பின்பு ஒருநதியில் நீராடி நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு புறப் பட்டு உத்தரகோஸல தேசத்தின் தென்புறத்தெல்லை சேர்ந்து ஆங்குள்ள பற்பல கிராமங்களையும், விதைப்பதன் பொருட் டுழப்பட்ட நிலங்களையும், தளிர்த்து மலர்ந்த வனங்களையும், விரைந்தெழுந்தருளுகையிலும் அவ்வவ்விஷ யங்களின் அழகினில் மூழ்கியமன முடையவ ராதலின், மெல்லெனச் சென்றே மென்றுணருமாறு கடாக்ஷித்துக்கொண்டு எழுந்தருளினர். ஆங்கு அவ்வவ் வூர்களிலுள்ள ஜனங்கள், தசரதமஹாராஜர் மிகவும் காமவிடாய்கொண்டு மதிமயக்கமுள்ளவராயினர்; அந்தோ! பாவி கைகேயியுங் கொடும்பாவஞ் செய்யத்துணிந்து, மரியாதை தப்பிக் கெட்டவளாயினள்; இல்லையாயின், மிகவும்


ஸ்ரீராமர்
சீதை
தேர்
கங்கை
(குகன்)
(ரதசாரதி)
(லக்ஷ்மணர்)
(குதிரைகள்)
(ரு-க-எ)

நல்லறிவினனும், தயாளுவும், புலன்களி னடக்க முடையவனும், தரும சிந்தை யுடையவனுமாகிய இத்திருமகனைக் காடேறச் செல்லவிடுவார்களோ? ஜனகமஹாராஜன் திருமகளாகிய சீதாதேவியும், இதுவரையி லொருதுன்பமு மறியாதவள், இப்பொழுது இக்கானகத்தின் கொடுந்துயரங்களை எவ்வண்ண மனுபவித்து வாழ்வுறுவள்! அந்தோ! யாவர்க்கு மினியனை இத்திருமகனைத் துரத்திவிடவுந் துணிந்த தசரதமஹாராஜர் மிகக் கருணையற்றவர்—என்றிவ் வண்ணம் புலம்பிக் கூவினர்கள். அவ்வாக்கியங்களைத் திருச்செவி சார்த்திக் கொண்டு அக்கோஸல நாட்டைக் கடந்தெழுந்தருளி, வேதசுருதியென்னும் புண்ணிய நதியையுந் தாண்டித் தென்றிசை நோக்கி நெடுந்தூர மெழுந்தருளி னர். ஆங்கு பல பசுக்கூட்டங்கள் கூடிய கரையையுடைய கோமதீநதியையும், அதற்கப்பால் மயூரஹம்ஸஸாரஸாதிகள் கூடிக்களித்துக் கூவப்பெற்ற ஸ்யந்திகா நதியையுந் தாண்டினர். அவ்விடத்து முன்பு மனுமஹாராஜனால் இக்ஷ்வாகு மஹாராஜன்பொருட் டளிக்கப்பட்டுப் பற்பல நாடுகளுடன் கூடி நீர்வள நிலவளங்கள் பொருந்திப் பொருள் மிகுந்துள்ள தேசத்தைக் கண்டு அதனைச் சீதாதேவிக்குங் காண்பித்தனர். பிறகு ஸாரதியை நோக்கி, ஸுமந்திரரே! யான் வனவாஸந் தீர்ந்து மீள வந்து, தாய்தந்தையர்களுடன் கலந்து மகிழ்ந்து, ஸரயூநதியின் தீரத்திலுள்ள மலர்நிறைந்து மணங்கமழ்கின்ற மஹாவனத்தில் வேட்டையாடுங் காலம் எப்பொழுது நேருங்கொலோ? காட்டில் வேட்டை யென்பது மனமகிழ்ச்சியின் பொருட்டும், கொடிய மிருகங்களினா லுண்டாகும் பீடையைப் போக்குவதின் பொருட்டுமே இவ்வுலகத்தில் கற்பிக்கப்பட்டிருக்கின்றதன்றோ? அஃது ராஜ்ஜிய காரியங்களை விட்டு நிரந்தரமாகச் செய்யப்படின், (ஸ்த்ரீத்யூதமிருகயாமத்ய வாக்பாருஷ்யோக்ரதண்டதா:। அர்த்தஸ்யதூஷணஞ்சேதி ராஜ்ஞாம்வ்யஸனஸப்தகம்) என்று நிந்திக்கப் படுகின்றமையால், அதனை நிரந்தரமாக யான் வேண்டுகின்றிலேன். ச்ராத்தாதி காலங்களில் வேதியர்களாலும் வேண்டப்படுவதும், ஓரிடத்திலும் நிலைகொள்ளாத குறிகளை யடிக்குந் திறமை கற்கும் பொருட்டும் கொடிய மிருகங்களின் பீடையை வளரவொட்டாது விலக்குதற் பொருட்டும் அரசர்களால் கோரப்பட்டதுமான அவ்வேட்டையை விநோதமாக யானு மொருகால் வேண்டுகின்றேன்; வேட்டையாடுவதில் விருப்பங்கொள்வது ராஜரிஷிகளனைவராலும் அங்கீகரிக்கப்பட்டதே யன்றோ? என்றிவ்வண்ண மினிதாகப் பலபல வார்த்தைகள் அருளிச் செய்துகொண்டே வழிகடந் தெழுந்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## ஐம்பதாவது ஸர்க்கம்.

### குஹப்பெருமான் சக்கரவர்த்தித் திருமகனைக்கண்டு இனிது அருளிச்செய்தது.

அனந்தரஞ் சக்கரவர்த்தித் திருமகன் ஸீதாலக்ஷ்மணர்களுடனே விரிந்து அகன்றழகிய தக்ஷிணகோஸல நாட்டையுங் கடந்தெழுந்தருளித் திருவயோத்திக்கு எதிராக நின்று கைகுவித்து, காகுத்தர்களினால் பரிபாலனஞ் செய்யப்பட்ட திருவயோத்திமாநகரே! உன்னையும், உன்னைப் பாதுகாக்குந் தேவர்களையும், உன்னிடத்தில் நித்திய வாஸஞ்செய்யுந் தெய்வங்களையும், யான் வனவாஸஞ்சென்று மீண்டு வருவதன்பொருட்டு விடைகேட்டுக் கொள்ளுகின்றேன்; வனவாஸஞ் செய்து தந்தையின் கடனைத்தீர்த்து மீள வந்து தாய் தந்தைகளுடன் கூடி உன்னைக்கண்டு மகிழ்வுறக்கடவே னென்று, தேசாந்தரஞ் செல்வோர் செய்யும் முறைமைப்படி க்ருஹக்ராம நகராதி தேவர்களை வேண்டிக்கொண்டனர். பிறகு தமக்குற்ற துன்பத்தையறிந்து வருந்துகின்ற அந்நாட்டிலுள்ளோரை நோக்கி வலதுகையை யுயரவெடுத்து, நாட்டிலுள்ள நல்லோர்களே! உங்களால் என்மீது அருளு மன்பும் நன்கு செய்யப்பட்டன; இப்பொழுது நீங்கள் என்னை நெடுங்காலம் பார்த்துக்கொண்டு நிற்பது உங்களுக்கு இன்னும் அதிகமான துன்பத்திற்கிடமாகு மாகையால், உங்கள்செயல்களைச் செய்யச் செல்லக் கடவீர்களென விடைமொழி யருளிச் செய்தனர். அந்நாட்டார்களும் அவ்வருளிச்செயலைக் கேட்டுப் பிரிய மனமின்றி தீனமாகப் புலம்பி ஸ்ரீராமபிரானுக்குத் தண்டஞ் சமர்ப்பித்து அவரது திருத்தேரை வலம்வந்து ஆங்காங்கு நின்று ஸ்ரீராமன் மறையுமளவும் பார்த்துக்கொண்டிருந்தனர்கள். சக்கரவர்த்தித் திருமகனும் அவர்களிடத்தில் விடைபெற்றுக் கொண்டு, சூரியன் மாலைப்பொழுதில் மறைவதுபோல அவர்களுக்குக் கட்புலனாகாமல் மறைந்து கோஸல நாட்டி னிடையே யெழுந்தருளினர். அந்நாடெங்கும் தனதானியங்கள் நிறைந்து கொடையாளர்கள் குடிகொண்டிருப்பதும், பயமென்பது சிறிது மின்றிப் பற்பல தேவாலயங்களாலும் யூபஸ்தம்பங்களாலும் விளங்குவதும், பூஞ்சோலை மாஞ்சோலைகள் செழித்துக் குளிர்ந்த நன்னீர்கள் நிறைந்த வாபீகூப தடாகங்கள் பொருந்திப் பிரகாசிப்பதும், துன்பமற்று மின்பமுற்றும் மகிழ்ந்த ஜநங்கள் திகழ்ந்து கற்று நிரைகள் நிறைந்து அரசர்களும் கண்டு அவாவுறத் தக்கதாகி வேதகோஷங்கள் ஒலிக்கப் பெற்று மகிழ்ந்து திகழ்ந்து விளங்குவதுமாகிய அழகிய அக்கோஸலநாட்டின் சிறப்புக்களைக் கடாக்ஷித்துக்கொண்டே அந்நாட்டு நடுவில் நெடுந்தூர மெழுந்தருளிக் கடையில் கங்காநதிபோய்ச் சேர்ந்தனர். அந்நதி யெத்தன்மைத்தெனில்,—நற்பேறளிக்கு நல்நீர் செறியப்பெற்றது; பாசிகளற்றுப் பளிங்கு போல விளங்குவது; மகாரிஷிகளின் ஆசிரமங்களினால் திகழப் பெற்றது; தெய்வப்பெண்களால் மகிழ்ந்து ஜலக்கிரீடை செய்யப்பெற்றது; தேவதானவ கந்தர்வ கின்னர கிம்புருஷோரகாதிகளினால் ஆச்சிரயிக்கப்பட்டது; பற்பல தேவர்களு மின்புறத்தக்க மலைகளினாலுஞ் சோலைகளினாலுஞ் சூழப்பட்டுள்

ளது; வானவர்களின்பொருட்டுப் பொன்னுலகம் மன்னியுள்ளது; தேவர்களுக்குரிய தாமரைகள்மலரப்பெற்றது; சிலைகளி லலைமோதியெழுந்த பேரொலியி னட்டஹாஸத்தால் அச்சந்தருவது; நுரையென்னும் நிர்மலமாகிய புன்னகைபொரிந்தியுள்ளது; மேடுபள்ளங்களில் கூந்தல்களின் பின்னல் போன்ற நீரின் பெருக்குடையது; சிலவிடங்களில் கொப்பூழ் போன்ற ஆழ்ந்த சுழிகள் சுழித்தோடுவது; சிலவிடங்களில் அசைவற்று கம்பீரமாகியும், சிலவிடத்தில் வேகம் பொருந்தியும், சிலவிடத்தில் துவனியுற்றும், சிலவிடத்தில் துவனியற்றும் பெருகுவது; தேவகணங்களால் மூழ்கப்பட்ட மகிமையுடையது; நெய்தல் தாமரை முதலிய பூங்கொடிகள் படர்ந்துள்ளது; சிலவிடத்தில் அகன்ற நொய்யமணற் குன்றுகளும், சிலவிடத்தில் பெருமணற் குவையுந் தோற்றித் துலங்குவது; மதங்கொண்ட ஹம்ஸஸாரஸ சக்கரவாகாதி நீர்ப்பறவைகளால் துவனிசெய்யப்பெற்று மனமகிழ்ச்சி யுண்டாக்குவது; சிலவிடத்தில் இருகரையிலும் முளைத்த மரங்களி னிரைகளால் மாலைபூண்டதுபோல விளங்குவது; சிலவிடத்தில் கமல குமுத கைரவங்களினால் நிறைந்துள்ளது; சிலவிடத்தில் பலவகை மலர்களின் பராகங்கள் படரப்பெற்றுமதங்கொண்டதுபோல மின்னுவது; சிலவிடத்தில் கல்மஷமின்றி வைடூரிய மணிபோல நின்மலமாகிப் பிரகாசிக்கின்றது; மதமேறித்திரிகின்ற திசாகஜங்களினாலும், வனகஜங்களினாலும், தேவவாஹநங்களினாலும், அடிக்கடி தொனி செய்யப்பெற்ற தீரங்களையுடையது; கனிகளாலும், மலர்களாலும், தளிர்களாலும், புதர்களாலும், பறவைகளாலும், நீர் யானைகளாலும், முதலைகளாலும், நீர் நாகங்களாலுஞ் சூழப்பட்டுள்ளது; பலவகை யணிகள் பூண்டு மதங் கொண்ட மத்தகாசினிபோல விளங்குவது.

విష్ణుపాదచ్యుతాన్దివ్యా మపాపాంపాపనాశినీం।
సముద్రమహిషీంగఙ్గాం సారసక్రౌఞ్చనాదినీం।
ఆససాదమహాబాహుః శృంగిబేరపురంప్రతి॥

* விஷ்ணுபாதாச்யுதாந்திவ்யா மபாபாம்பாபநாசிநீம் |
ஸமுத்ரமஹிஷீங்கங்காம் ஸாரஸக்ரௌஞ்சநாதிநீம் |
ஆஸஸாதமஹாபாஹு: ச்ருங்கிபேரபுரம்ப்ரதி ||

---

* சிலர் கங்கை ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவடியினின்றும் பிறந்திலதென்றும், விஷ்ணுபதமென்று லாகாச மாதலால், ஆகாயத்தில் உறைகின்றமையால், அதற்கு விஷ்ணுபதியென்னும் பெயர் வாய்த்ததென்றி முரைக்கின்றனர்கள். அஃது மிகுதியுந் தகுதியற்றது: விஷ்ணுபதமென்று ஆகாசத்துக்கும் பெயருளதாயினும், விஷ்ணுபதீயென்னும் பெயர் அதனடியாகவருவதற்கு ஈகாராந்தமாவது பொருந்தாது; அவ்வண்ணமாவதற் கிலக்கணச் சூத்திரமில்லை. ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஸ்ரீபாதத்திலுண்டாகியதென்று பொருள்கொள்ளின், (பாதோங்யதரஸ்யாம்) என்னும் பாணிநிஸூத்திரத்தால், ஏகபதீ - துவிபதீ - என்னுமாபோல விஷ்ணுபதீயென்று ஈகாராந்த மாவதற்குக் குறையில்லை. மேலும் ஆகாசத்திற்கு விஷ்ணுபதமென்று பெயருளதேயன்றி, விஷ்ணுபாதமென்று பெயர் நிகண்டுகளிலு மில்லை, லோக வேதங்களிலு மில்லை; ஆதலின், அவ்வண்ண முரைசெய்பவர்களுக்கு 'விஷ்ணு பாதச்யுதா'மென்று இங்கிருப்பது ஒருபொழுதும் ஒவ்வாது. மற்று மிவ்விஷயத்திலுள்ள சங்கைகளைப் பாலகாண்டத்திலே பரிஹாரஞ் செய்துவிட்டோம்.

மூவுலகங்களையும் மூவடிகளாலளந்து மாவலியையடக்கி வானவர்களைப் பாதுகாத்த ஸர்வலோக சரண்யனான ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவடிகளினின் றும் அவதரித்து மிகப் பரிசுத்தமாகிப் பொன்னுலகில்வீழ்ந்து, பிறர்களின் பாவங்களைப் போக்க பகீரதன் பொருட்டாய் மண்ணுலகிலும் பன்னகா லயத்திலும் பெருகி, ஸமுத்திரராஜனுக்கும் பட்டமகிஷியாகி, ஸாரஸக்ரௌஞ் சாதி நீர்ப்பறவைகளால் ஒலிக்கப்பெற்று விளங்குகின்றதுமான அந்தக் கங்கா நதிபோய்ச் சேர்ந்தனர் ஸ்ரீராமன். அவ்விடம் சிருங்கிபேரமென்னும் குஹப் பெருமான் பட்டணத்திற்குச் சமீபம். ஆங்கு பேரலைமோதி யொலிக்கின்ற கங்காநதியைக் கடாக்ஷித்து ஸ்ரீராமபிரான் ஸுமந்திரரை நோக்கி, ஸாரதி! இன்றிரவினை இங்கிருந்து போக்குவோம்; இந்நதியினருகில் தளிர்களடர்ந்து மலர்கள் கயழ்ந்து உயர்ந்து படர்ந்து தழைத்துச் செழித்து இவ்விங்குணமரம் மிகவழகியதாக விருக்கின்றது; இதனடியிலே யிறங்குவோம். யாவராலும் புக ழப்பட்ட இந்நதியையுங் கண்ணுற்று மகிழ்வோம்—என்றருளிச்செய்தனர். இளையபெருமாளும் சுமந்திரரும், அவ்வண்ணமே யாகுகவென்று உடன்பாடு கூறினர். பிறகு சுமந்திரர் அம்மரத்தினடியில் திருத்தேரை நடாத்தி ஸ்ரீராம சந்திரரை இறங்கும்படி விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும், பிராட்டியாருட னும் இளையபெருமாளுடனும் திருத்தேரினின்று மிறங்கி அம்மரத்தடியில் வீற்றிருந் தருளினர். சுமந்திரரு மிறங்கிக் குதிரைகளை யவிழ்த்து ஓரிடத் தில் கட்டி, ஸ்ரீராமபத்திரரிடம் வந்து கைகட்டி நின்றனர். அப்பொழுது அந்நகரத்திற்கு இறையவராகிய குஹப்பெருமான், ஸ்ரீராமபிரான் அவ் விடத்தி லெழுந்தருளியதைக் கேட்டுப் பெருமகிழ்வுகொண்டு சிறந்தமந்திரிக ளுடனும் தன்னினத்தார் சுற்றத்தார்களுடனுங் கூடிப் புறப்பட்டு ஸ்ரீராம சந்திரர் வீற்றிருக்கு மிடம் நோக்கி நடந்து வந்தனர். அவர் ஸ்ரீராமனுக்கு உயிர்போன்ற தோழர், வேடுவசாதியிற் பிறந்தவர், சிறந்த பலமுடையவர், ஸ்ரீராமபக்தரென்றும், பரமபாகவதரென்றும் புகழப்பட்டவர். பக்தவத்ஸல ரான ஸ்ரீராமசந்திரர் அவர் வருவதைக்கண்டு எதிர்கொண்டழைத்து வந்து, இளையபெருமாள்போலவே இவருமொரு தம்பியென்னும்படி * நட்புச் செய் தருளினர். குஹப்பெருமானும் ஸ்ரீராமபத்திரருக்குற்ற துன்பங்களை யறிந்து மிகத் துயரமுற்று, ஸ்ரீராமசந்திரரை ஆலிங்கனஞ் செய்துகொண்டு அவரை நோக்கிக் கூறுகின்றனர்:—

---

(ஹீநப்ரேஷ்யம் ஹீநஸக்யம் ஹீநகேஹ நிஷேவணம்) என்று ஈனருக்கடிமை செய்வதும், அவர்களுடன் நட்புச்செய்வதும், அவர்களின் வீடேறச்செல்வதும் உபபாத கங்களென அருளிச்செய்யப் படுகின்றமையால், புருஷோத்தமனான ஸ்ரீராமபிரான் இழிகுலத்தோனாகிய குஹப்பெருமானுடன் நட்புச்செய்தது தகுமோவென்னின், தகும்: (நிஷாதஸ்தபதிம்யாஜயேத்) என்று, வேடுவராஜனும் யாகஞ் செய்விப்பதற் குரியவ னென் றிருப்பதாலும், (நசூத்ராபகவத்பக்தா விப்ராபாகவதாஸ்ம்ருதா: | ஸர்வவர் ணேஷுதேசூத்ரா யேஹ்யபக்தாஜநார்தநே) என்றிருப்பதாலும், பாகவதர்களல்லாத வேதியர்களே சூத்திரர்கள்போல நட்புக்கொள்ளத் தக்கவர்களல்லர்; பாகவதர்களாகிய சூத்திரர்கள், வர்ணாச்ரம நியதங்களான, கொள்வது கொடுப்பது முதலிய, ஸம்பந்தம் செய்துகொள்ளத் தகாதவர்களாயினும், நட்புக்கொள்ளத் தகுதியுடையராகத் தடை யில்லையிறே. இவ்விஷயத்திலுள்ள பல சங்கைகளையும், ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் திருமந்த்ரார்த்தத்தில் கசடறப் பரிஹாரஞ் செய்தருளி யிருக்கின்றார்.

యథాయోధ్యాతథేయంతే రామకింకరవాణితే।
ఈదృశంహిమహాబాహో కఃప్రాప్స్యత్యతిథింప్రియం॥

* யதாயோத்யாததேயந்தே ராமகிங்கரவாணிதே ।
ஈத்ருசம்ஹிமஹாபாஹோ கஃப்ராப்ஸ்யத்யதிதிம்ப்ரியம் ||

ஸ்வாமி, ரகுகுலநந்தனரே! திருவயோத்தி தேவரீருக்கு எவ்வண்ண முரியதோ, அவ்வண்ணமே இந்நகரும் தேவருக் குரியதாம்; இஃது அடியேனுடையதன்று; ஆதலின், தேவர் இங்கபிஷேகங்கொண்டு, அடியோங்களைப் பாதுகாத்தருளக் கடவீர். அடியேனும் தேவரீருக்கு நித்திய கைங்கரியஞ் செய்து, ஆனந்தமடையக் கடவேன்; லோகநாதரான தேவரீரே இவ்வண்ணமருள்செய்து ப்ரியமான அதிதியாக வெழுந்தருளப்பெற்ற பெரும்பாக்கியம் எவனுக்குக்கிடைக்கும் - என்று இனியமொழி கூறினர். பிறகு பற்பல விதமான நல்லுணவுகளையும் அர்க்கிய பாத்யாதிகளையும் விரைவிலழைப்பித்து, மீளவும் ஸ்ரீராமபத்திரரை நோக்கி, இக்ஷுவாகுகுலநந்தனரே! தேவரீர் வரவு நல்வரவாகக் கடவது. அடியேனுடையதென் றபிமானிக்கப்பெற்ற இவ்விராஜ்ஜிய மெல்லாந் தேவரீருடையதே. அடியோங்களெல்லோருந் தேவரீரடியார்களே, தேவரீரே யாவர்க்கும் பர்த்தா; அடியோங்களை யங்கீகரித்து இவ்விராஜ்

---

* யதாயோத்யா என்னும் சுலோகத்திற்குப் பின் வருமாறும் பொருள் உரைத்துக்கொள்க.

ஸ்ரீராம! தேவரீருக்குத் திருவயோத்தி எவ்வண்ணம் ஸ்வாதீனமோ, இந்நகரு மவ்வண்ணமே ஸ்வாதீன முடையது; அடியேன் தேவர்க்குத் தொண்டஞ்கையால், தேவர்க்கு நித்திய கைங்கரியஞ் செய்வதே அடியேனுக்குரியது, தேவரீரை யதிதியாகப் பெற்ற யாவன் தேவரீர்க்கடிமை செய்யாது ராஜ்ஜியத்தை விருப்புறுவான்? இந்நகரிலும் திருவயோத்தியிற்போலக் கைகேயிபோன்றவர்கள் தடைசெய்யாவண்ண மடியேன் அடிமைசெய்து பாதுகாப்பேன்; மஹாராஜர்போல அடியேன் முன்பு ராஜ்ஜியத்தையளித்துப் பின்பு அபகரித்துக் காடேறச்செல்ல விடுவேனென்று ஐயமுறற்க; தேவர் விஷயத்தில் இவ்வண்ணம் யாவன் செய்வான் என்பது ஒருபொருள். உ—(இயம்-யதா-அயோத்யா-ததா-கிங்கரவாணி) என்று அந்வயங்கொண்டு, இயம் - இந்நகர், யதா அயோத்தியா-எவ்வண்ணந் திருவயோத்திபோலாகுமோ, ததாகிங்கரவாணி-அவ்வண்ணமடியேன் செய்யக்கடவேன்; இங்கு இவ்விஷயத்தில் தடைசெய்பவன் யாவனுளன். இதற் காரசனாகிய யானே மகிழ்ந்தளிக்கையில், இதற்குத் தடை செய்பவர் ஒருவருமில்லையென்றும் பொருள் கொள்ளலாம். ௩—தேவரீர் பதினான்கு வருஷம் நகரம் புகாமல் வனவாஸஞ் செய்வேனென்று பிரதிஞ்ஞைகொண்டு எழுந்தருளினமையால், திருவயோத்திபோல இந்நகரமும் புகவொண்ணாத தாயிற்றே, அடியேன் என்ன செய்வேன், இந்த பாக்கியத்தை யாவன் பெறப்போகின்றான்; அடியேனே பெறுமையால், ராஜ்ஜியத்தில் விருப்பமுற்றே நட்புக்கொண்ட சுக்ரீவனும், விபீஷணனும், இந்தப் பாக்கியத்தைப் பெறுவார்களோ? அவர்களும் பெறார்கள் எனவும் பொருள்படும். ௪—

ஜியத்தை நன்குபாதுகாத் தருளக்கடவீர். ஸ்வாமி! இதோ நாநாவிதமான போஜனவகைகளும், பற்பல பக்ஷ்யவகைகளும், பரமான்னங்களும், பான வகைகளும் ஸித்தமாயிருக்கின்றன; தேர்க்குதிரைகளுக்கு வேண்டிய தீனிகளும் இதோ இருக்கின்றன; இரவில் சயனித்துத்திருக்கண்வளரச் சிறந்த சயனங்களுஞ் சித்தஞ்செய்யப்பட்டு இருக்கின்றன; இவைகளையு மங்கீகரித்து அடியேனை யளித்தருளக் கடவீர்-எனவேண்டினர்.

இவ்வண்ணம் பத்திமையால் வேண்டுகின்ற குஹப்பெருமானை நோக்கிச் சக்கரவர்த்தித் திருமகன், தோழனே! நீயென்பொருட்டு நெடுந்தூரம் நடந்து வந்து உனக்குள்ள விசுவாசத்தை வெளிபிட்டு இங்ஙனம் இனியமொழி கூறுகின்றமையாலேயே நாமுன்னால் நன்கு பூசிக்கப்பட்டவர்களாயினோம்; சந்தோஷமுமடைந்தோமென்று அருளிச்செய்து, பிறகு பருத்து நீண்டுருண்ட திருக்கைகளினால் அவரை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, நிஷாதராஜனே! தெய்வாதீனம், பந்துக்களுடனே பிணியற்று மகிழ்வுற்ற உன்னை யான் காணும்படியாயிற்று; உனக்கும், உந்நாட்டுக்கும், நேசர்களுக்கும், பொருள்களுக்குங் குறைவற்று நலம் வளருகின்றதா? என்னிடத்திலுள்ள அன்பினால் நீ ஸித்தஞ் செய்துவந்த இவ்வுபசாரங்களைக் கண்டவளவிலே மிகவுஞ் சந்தோஷமடைந்தேன்; இவையாவையும் உனக்கேயிருக்கக்கடவன. இப்பொழுது யான் தானம் வாங்கிக்கொள்ளும் தருமத்தை மேற்கொண்டிலேன், இப்பொழுது யான் குசசீராஜிநங்களைத்தரித்துக் கந்தமூலபலங்களைப்புசித்து வனத்தில் வசித்து தவசியாகி, பித்ருவாக்கிய பரிபாலனம் பண்ணுவதில் ஊக்கமுடையேனென வுணர்க. இப்பொழுது இக்குதிரைகளுக்கு உணவளிக்கும் விஷய மொன்றில் மாத்திரமே நான் யாசகனாகி யிருக்கின்றேன். மற்றெவ்விஷயத்திலும் யாசகனாகேன்; இவ்வொன்றினாலே யான் பூஜிக்கப்பட்டே னாகுவேன் என்றருளிச்செய்து, குதிரைகளுக்கு நீரு முணவுங் கொண்டளிக்கும்படி கட்டளையிட்டருளினர். குஹப்பெருமாளு முடனே அங்கிருந்து விரைவாக மனிதர்களை யனுப்பி, இக்குதிரைகள் தசரதமஹாராஜருக்கு மிகவும் பிரியமுள்ளன வாதலின் இவைகளை மகிழ்விப்பதே சக்கரவர்த்தித்திருமகனார் திருவுளத்திற்கு உகப்பென்று நல்லுணவுகளைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டு, ஸ்ரீராமபத்திரர் கட்டளைப்படி செய்வித்தனர். அநந்தரஞ் சக்கரவர்த்தித் திருமகன் மரவுரியை யஜ்ஞோபவீதமாகத்தரித்து, வெய்யோன் அஸ்தகிரியை யடைகையில் ஸந்தியாவந்தனாதிகளைச் செய்தருளி இளையபெருமாள் கொணர்ந்த கங்கோதகத்தையே யமுதுசெய்து கால் கைகளைச் சுத்திசெய்து ஆசமனம் பண்ணிப் பிராட்டியுடன் அம்மரத்தடியில் சயனங்கொண்டருளினர். இளையபெருமாளும் தமக்குரிய கைங்கரியங்களைச் செய்து முடித்து, மற்றொரு மரத்தினடியில் குஹப்பெருமாளுடனும் சுமந்திரருடனுங் கூடி நின்றனர். குஹப்பெருமாளும் வில்லுங் கையுமாக நின்று, இளையபெருமாளுடன் ஸ்ரீராமபிரானது குணங்களையே புகழ்ந்து கொண்டு, தூக்கமின்றி யூக்கத்துடன் ஸ்ரீராமபத்திரரைப் பாதுகாத்து வந்தனர். இன்ப

முறுதற்கே யுரியராய்த் துன்பமென்பதை யென்றுமறியாத மகாத்மாவாகிய சக்கரவர்த்தித் திருமகன் இவ்வண்ணந் துயில்கொண்டிருக்கையில், அவர்களுக்கு அன்றிரவு நெடியதாக வளர்ந்தது.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

இளையபெருமாளும் குஹப்பெருமானும் ஸ்ரீராமனைக் குறித்து வியாகுலப்பட்டுக்கொண்டே துயில்கொள்ளாமல் விழித்துப் பாதுகாத் திருந்தது.

---

ஸ்ரீராமசந்திரன் இவ்வண்ணம் திருக்கண்வளர்ந்த போழ்து, உண்மையான பக்தியுடன் விழித்திருந்து அவரைப் பாதுகாத்தருளும் இளைய பெருமாளை நோக்கி குஹப்பெருமான் மிகவுஞ் சோகமடைந்து கூறுகின்றனர்: சக்கரவர்த்தி குமாரா! உமக்காக இவ்விடத்தில் தளிர்களாலும், மலர்களாலும், இனிய படுக்கை செய்யப்பட்டிருக்கின்றது; இதில் நீர் படுத்துத் துயில் கொள்ளக் கடவீர். அடியோங்கள் காட்டு மனிதர்க ளாதலால், தூங்காமல் விழித்திருப்பது முதலிய வருத்தங்களைப் பொறுப்போம்; நீர் மஹாராஜர் திருமகனுதலாலும், இதுவரையில் துன்புற்றறியீராதலாலும், நீர் இன்புற்று வாழத்தக்கவர்; ஸ்ரீராமபத்திரனைப் பாதுகாப்பதன் பொருட்டு நாங்களெல்லோரும் விழித்திருக்கிறோம்; எனக்கு இவ்வுலகினில் ஸ்ரீராமபத்திரரை விட வேறொருவரும் பிரியமுள்ளவராகார்; இவ்விஷயத்தை நான் ஸத்தியமாகச் சொல்லி ஆணையுஞ் செய்வேன்; நான் ஸ்ரீராமசந்திரருடன் நட்புக்கொண்டு இவரது அநுக்கிரஹத்தால் சிறந்த புகழ்பெறக் கோருகின்றேன்; இவரது அருளினாலேதான் அறம்பொருளின்பம் வீடுகள் கிடைக்கின்றன; ஆதலின் அடியேன் என்னினத்தார்களுடன் வில்லுங் கையுமாகச் சூழ்ந்து நின்று, யோகநித்திரைகொண்டு பிராட்டியாருடன் சயனங்கொண்ட பேரருளாளனை

விழித்துக் காத்திருப்பேன். இவ்வனத்தில் யான் எப்பொழுதுந் திரிந்தலை கின்றமையால், இங்கு யானறியாதது ஒன்று மில்லை ; பிறர் நால்வகைப் படை கொண்டு போர்செய்ய வெதிர்க்கினும், அவர்களை வெற்றி கொள்ள வல்லோம் என்று கூறி இனிமையாக வேண்டினர். அது கேட்ட இளையபெருமாள் அவரை நோக்கி, கேளீர் நிஷாதராஜரே! எம்மைப் பாதுகாக்க நீரும் வல்லீர், இவ்விடத்தில் யாங்களும் பயமுற்றிலோம்; ஆகிலும், நீர் சற்றுத் தருமத்தை ஆராய்ந்து பாரீர்: சக்கரவர்த்தித் திருமகனும், லோகநாதனுமாகிய எம்மையன் ஸீதாபிராட்டியாருடன் தரையில் படுத்திருக்கையிலே, யான் நித்திரையையாயினும், நன்குயிர் வாழ்வையாயினும், இன்பங்களையாயினு மெவ்வண்ணமுறுவேன் ; யாவரொருவர் தேவாசுரர்களெல்லோரு மொன்று சேர்ந்து எதிர்த்திடர் செய்யினும் பின்வாங்காது வெற்றிகொள்ளுந் திறமையுள்ளவரோ, அந்த இவ்வையரும் ஸீதாபிராட்டியாருடன் புல் அணையின்மீது படுத்திருக்கின்றனரே! அந்தோ! அரிய பெரிய பல மந்திரஜபங்களும் தவங்களும் புரிந்து படாதபாடுபட்டுத் தசரதமகாராஜன் எவரை தமக்கு மிகப் பிரியமான முதற்குமாரராகப் பெற்றனரோ, யாவரும் புகழத்தக்க ஸகலலக்ஷணங்களுமமைந்த அவ்வருமை மைந்தனை வனத்திற்கோட்டிவிட்டு, மஹாராஜர் நெடுநாள் வாழ்ந்திரார்; விரைவிலே இப்பார் மடந்தை அரசின்றிக் கைம்பெண் போலாகு மென்பதில் ஐயமில்லை; மஹாராஜர் திருமாளிகையில், வனிதையர்கள் யாவருங் கூவிக் கூவி யழுது மூர்ச்சைகொண்டு ஒழிவார்களென எண்ணுகின்றேன் ; கோஸலையாரும், என் தாயும், மஹாராஜரும், இன்றிரவு பிழைத்திருப்பார்களெனவும் நான் நம்புகின்றிலேன் ; சத்துருக்கனைக்காண்போமென்னு மாசையினால் என் மாதா ஒருகாலுய்யினு முய்வள்; வீரனான ஒரே திருமகனைப் பெற்றிழந்த கோஸலராஜன் திருமகள் இத்துன்பத்தை எவ்வண்ணம் பொறுத் துயிர் வாழ்வாள்? மிகவு மன்புடைய ஜநங்கள் நிறைந்து மிகவுங் கண்ணுறத் தக்கதாக விளங்கும் அத்திருவயோத்தி, மஹாராஜருடைய சோகத்தால் பீடிக்கப்பட்டு முற்று மழியும்; முக்கடன்களையுந் தீர்ப்பவரும் தெய்வத்தன்மை யுள்ளவரும், மூத்தவரும், பிரியமுள்ளவருமாகிய எம்மையனைக் காணமல், மஹாராஜருடைய உயிர் அழியுந் தன்மையுடைய அவா திருமேனியில் எவ்வாறு நிலைத்திருக்கும்? இத்துயரம் தாங்காது மஹாராஜர் மரித்த பின்னர் கோஸலையாரு மிறப்பார்; உடனே என் மாதாவும் மரணமடைவள் ; என் தந்தை எம்மையனுக்கு அபிஷேகஞ் செய்து முடிசூட்டாமல், தங்கோரிக்கை யீடேறாமலே விரைவில் மரணமுறுவா ரந்தோ! நிகழ்ந்தது நிகழ்ந்ததேயன்றி, நிகழுமதாகுமோ? மஹாரஜர் மரணமுறுங்கால், அருகிலிருந்து சரமகைங்கரியஞ் செய்வோர்க ளன்றோ பாக்கியசாலிகள்? யாங்களந்த பாக்கியத்தையு மிழந்து பிரிந்தோமந்தோ! அழகிய நற்சந்தியுடையதும், நன்கு பிரிக்கப்பட்ட ராஜமார்க்க முடையதும், உயர்ந்த மாடமாளிகையுடையதும்,சிறந்த பொதுமகளிர்களால் திகழ்வதும்,ரதகஜதுரகபதாதிக ளடர்ந்துள்ளதும், நிருத்த கீதவாத்திய கோஷங்கள் முழங்குவதும், மங்கலங்களெல்லா

வற்றாலும் நிறைந்ததும், மகிழ்ச்சியும் செல்வமும் நிறைந்த மஹாஜனங்கள் வசிப்பதும், தோட்டங்களும் உத்தியான வனங்களும் சூழப்பெற்றதும், பலவகை யுத்சவங்கள் நடக்கப்பெற்றதுமான திருவயோத்தியில் நல்வினையோர்களல்லரோ வஸித்து மகிழ்வார்கள்? யாங்கள் மீண்டும் வருமளவும் மஹாராஜா உயிர்வாழ்வரோ? யாங்கள் மீண்டுவந்து அவரைக்கண்டு மகிழ்வுறுவோமோ? பிரதிஜ்ஞை தீர்ந்த எம்மையருடன் திரும்பித் திருவயோத்தி சேர்ந்து வாழ்வோமோ? என்றிவ்வண்ணம் துயரங்கொண்டு பலவாறு புலம்பினர். இங்ஙனம் புலம்பாநிற்கையில் அன்றிரவு நீங்கிப் பொழுது விடிந்தது. இளையபெருமாள் உண்மைகூறிப் புலம்பி யழக்கண்டு, குஹப்பெருமானும் அவர்களிடத்தி லுள்ள நேசத்தாலும், பக்தியாலும் மிகவுஞ் சோகமுற்று, ரோகங்கொண்ட நாகம்போலப் பதைத் திளைத்துக் கண்ணீர்பெருக்கி வாடி வருந்தினர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் சுமந்திரருக்கு விடைகொடுத்துத் தலைமயிரை ஜடைதிரித்துக்கொண்டு ஸீதாலக்ஷ்மணர்களுடன் கங்காநதியைத் தாண்டி எழுந்தருளியது.

---

அன்றிரவுகழிந்து விடியற்காலமானபொழுது சக்கரவர்த்தித்திருமகன் திருப்பள்ளியெழுந்து இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! இரவுநீங்கிக் கதிரவ னுதிக்குங் காலை யாயிற்று; குயி லினிமையாகக் கூவுகின்றது; மயில்களின் துவனியுங் கேட்கின்றது; ஆதலின், வேகமான வெள்ளத்தையுடைய இக்கங்காநதியைத்தாண்டிச் செல்லுவோமென் றருளிச்செய்தனர். அதுகேட்டு இளையபெருமாள் உடனே ஓடம் சித்தஞ்செய்யும்படி குஹப்பெருமானுடனும் ஸுமந்திரருடனு மருளிச்செய்து ஸ்ரீராமபிரானருகில் வந்து நின்றனர். குஹப்பெருமானும் அவ்வண்ணமே செய்வேனென்று ஸ்ரீராமபத்திருடைய ஆஞ்ஞையைச் சிரத்தில்கொண்டு, விரைவாகத் தம் மந்திரிகளை யழைப்பித்து, அமைச்சர்களே! திறமையுள்ள * கர்ணதாரனையழைத்து, இன்பந்தருவதும், ஸுகமாகத் தாண்டுவிக்கத் தக்கதுமான திடமுள்ள சிறந்த நாவத்தை துடுப்புமுதலிய உறுப்புகளுடனே விரைவில் துறைமுகத்தில் நிறுத்தத்திட்டஞ் செய்வீர்களெனக் கட்டளையிட்டனர். அவர்களு முடனே யவ்வண்ணம் சித்தஞ் செய்வித்து இவருக்குத்தெரிவித்தனர்கள். அநந்தரம், குஹப்பெருமான் கைகுவித்துக்கொண்டு ஸ்ரீராமசந்திரரை நோக்கி, ஸ்வாமி, ரகுநந்தனா! நாவம் இதோ ஸித்தஞ்செய்யப்பட்டு நிற்கின்றது; மீளவும் அடியேன் செய்யவேண்டுவது யாது? தேவரீர் இத்தரணியில் ஏறியருளக்கடவீர்கள். அடியேனே இந்நதி

* கர்ணதாரன் - படகை யோட்டுகிறவன்.

யைத் தாண்டுவிப்பே னென்று விண்ணப்பஞ்செய்தனர். சக்கரவர்த்தித் திருமகனும் அவரை நோக்கி, தோழனே! யானும் ஸித்தமாகவே யிருக்கின்றேன்; ஸீதையின் ஆடையாபரணங்களையும், எமதாயுதங்களையும், ஓடத்திலேற்றக்கடவீ ரெனக் கட்டளையிட்டனர். அவர் அங்ஙனமே செய்ய, ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் அம்பறாத்தூணீரங்களையும் வாள்களையுங் கட்டிக்கொண்டு கோதண்டங்களையுங் கையிலேந்தி, பிராட்டியாருடன் கங்காநதியின்வழிபற்றி நடந்தெழுந்தருளினர்கள். சுமந்திரர் அப்பொழுது வணக்கத்துடன் கைகுவித்து, ஸ்வாமி! அடியேன் செய்யவேண்டும் வகையேதோ, அதனை யருளிச்செய்யவேண்டு மென்று விண்ணப்பஞ் செய்தனர். சக்கரவர்த்தித் திருமகன் வலது திருக்கரத்தினால் அவர்கரத்தைப் பற்றி அவரை நோக்கி, சுமந்திரரே! நீர் விரைவாக மீண்டு சென்று மஹாராஜரருகில் ஊக்கத்தோடிருந்து அவரைப்பாதுகாக்கக் கடவீர். உடனே மீண்டுசெல்லுக; மஹாராஜர் கட்டளையின்படி நாடுகளைத் தாண்டி எங்களை இவ்விடம்கொண்டு வந்துவிட்டீரன்றோ? இனியாங்கள் ரதமின்றிக்கால்களினாலே கடுங்கானங் கடந்து நடப்போமென் றருளிச்செய்தனர். இவ்வண்ணம் தமக்கு ஸ்ரீராமபத்திரர் விடை கொடுத்து விட்டதையறிந்து, சுமந்திரர் அவரை நோக்கி, ஸ்வாமி! மஹாநுபாவரான தேவரீர் இளையபெருமாளுடனும் சீதாபிராட்டியுடனும் யாரோ அற்பர் போலக் காலால் நடந்து காடுகடந்து திரிவதை இவ்வுலகினில் எவரேனும் நன்கென வுகந்து உடன்படுவரோ? ஸ்வாமி! தேவரீருக்கு இவ்வகைத் துன்பம் நேரிடுவதென்றால், இவ்வுலகில் ப்ரஹ்மசரிய விரதத்தினாலும், வேத மோதுவதனாலும், பொறுமைகொள்வதனாலும், கபட மில்லாத நேர்மையாலும் ஒரு பயனுமில்லையென வுணர்கின்றேன். தேவர் இளையபெருமாளுடனும் பிராட்டியாருடனும் வனத்தி லெழுந்தருளியிருந்து, மூவுலகினிலும் வியாபித்த ஸ்ரீமஹாவிஷ்ணுபோலப் பெரும்புகழ் பெற்று வாழ்வுறுவீர்; அடியோங்களை நெடுந்தூரம் பின் தொடர்ந்தும் தேவரீரை விட்டுப் பிரிந்தவர்களாகி பாவி கைகேயிக்கு வசப்பட்டுத் துன்பமுற்றுக் கெடுவோமென்று, தம்முயிர்க்கு நிகரான ஸ்ரீராமசந்திரர் தம்மை விட்டெழுந்தருளுவதைக் கருதிக் கண்ணீர் பெருக்கி நெடுநேரமழுதார். பின்பு தாமே தேறிக் கண்களைத் துடைத்துக்கொண்டு ஆசமனஞ் செய்து சுசியாகிப் பின்னும் சுமந்திரர் ஸ்ரீராமபிரானைத் தொடர்ந்து சென்றனர். அப்பொழுது அவரை நோக்கி ஸ்ரீராமபத்திரர் இனிமையாக மீளவு மருளிச்செய்கின்றனர்: ஸுமந்திரரே! என் தந்தையர்க்கு உம்மைப்போன்ற இஷ்டர் வேறொருவரையுங் காண்கிலேன்; ஆதலின் அவர் என்னை நினைந்து துன்புற்று வருந்தாவண்ணம் நீரே அவரருகிலிருந்து அவரைத் தேற்றவேண்டும்; அவர் சோகத்தினால் மனம் நொந்து மூப்படைந்திருப்பதுமன்றி கைகேயினால் பீடிக்கப்பட்டவருமாகி வருந்துகின்றனர். ஆதலின், நானு மும்மை மீண்டு செல்ல வேண்டுகின்றேன்; மஹாராஜர் கைகேயியைக் களிப்புறச்செய்யும் பொருட்டு எப்பொழுது என்ன கட்டளையிடினும் நீர் தடையில்லாமல் உடனே அதனைச் செய்யக்கடவீர்.

ఏతదర్థంహిరాజ్యాని ప్రశాసతినరేశ్వరాః।
యదేషాంసర్వకృత్యేషు మనోనప్రతిహన్యతే॥

ஏததர்த்தம்ஹிராஜ்யாநி ப்ரசாஸதிநரேச்வரா: |
யதேஷாம்ஸர்வக்ருத்யேஷு மநோநப்ரதிஹந்யதே ||

தங்கள் விருப்பம் எந்தக் காரியத்திலும் தடைப்படாமல் நிறைவேற வேண்டுமென்பதற்காகவே யன்றோ உலகத்தில் அரசர்கள் அரசாட்சி செய்கின்றனர். ஆதலின், சுமந்திரரே! மஹாராஜர் துன்பத்தினால் வருந்தாமலும், பிரியமின்மையுறாமலும், இன்பமுறுமாறு நீர் செய்யக் கடவீர். இதுவரையும் துன்ப மறியாதவரும், மூப்பினரும், யாவரும் பூஜைசெய்யத் தக்கவரும், எங்கள் மீது மிகப் பக்ஷமுடையவருமாகிய மஹாராஜரை என் பொருட்டுத் தண்டம் சமர்ப்பித்து, நான் விண்ணப்பஞ் செய்ததாக இதனை விண்ணப்பஞ் செய்யக்கடவீர். அஃதாவது, 'என் தந்தையரே! திருவயோத்தியை விட்டு வந்தோமே யென்றும், வனத்தில் வாசஞ்செய்கிறோமே யென்றும், யான் சிறிதும் துன்ப முற்றிலேன்; லக்ஷ்மணனும் சோகங்கொண்டிலன்; ஸீதையும் அதனைச் சிந்தை செய்திலள்; பதினான்கு வருஷங்கள் எளிதில் தீர்ந்து மீண்டு வந்த அடியோங்களைக் கண்டு ஆநந்தமடையப் போகின்றீர்' என்றிவ்வண்ணம் தந்தையுடன் விண்ணப்பஞ் செய்து, பின்பு கோஸலை, சுமித்திரை, கைகேயி முதலிய தாய்மார்களெல்லோரையும் நோக்கி எங்களுடைய க்ஷேமத்தைச் சொல்லி, நாங்கள் மூவரும் அடிபணிந்து தண்டன் ஸமர்ப்பித்ததாகவும் சொல்லவேண்டும். மீளவும் மஹாராஜரை நோக்கி, விரைவாகச் சிரஞ்சீவி பரதாழ்வானை யழைப்பித்து அபிஷேகஞ்செய்து பட்டங்கட்டி இளவரசனாகச் செய்தருளக் கடவீரென்றும் விண்ணப்பஞ் செய்க; பரதாழ்வானையும் நோக்கி, அடா பரதா! நீ மஹாராஜரிடத்தில் எவ்வண்ணம் பத்தி விசுவாஸ விநயங்களுடன் நடக்கின்றனையோ, அவ்வண்ணமே நம்மாதாக்களெல்லோர்களிடத்தும் பக்ஷபாத மின்றி ஒரே சீராக நடந்து கொள்ளக் கடவை; உனக்குக் கைகேயி ஸுமித்திரையர்கள் எவ்வண்ணம் அன்புசெய்யத் தக்கவர்களோ, என் மாதாவாகிய கோஸலையாரும் அவ்வண்ணமே அன்புசெய்யத் தக்கவளாம்; மஹாராஜர் கட்டளையின்படி நீ இளவரசுப் பட்டங்கொண்டு, நீதி வழுவாது இராஜ்யத்தைப் பாதுகாத்து வருவையாயின், இம்மை மறுமை இரண்டிலும் உனக் கழியா நன்மையுளதாகுமென் றிவ்வண்ணம் உரை செய்யக் கடவீரென் றருளிச்செய்து, ஸுமந்திரருக்கு விடைகொடுத் தருளினர். இவ்வண்ணம் திரும்பிச் செல்ல விடையளிக்கப்பட்டவராகி ஸுமந்திரர், ஸ்ரீராமபத்திர ரருளிச்செய்த வாக்கியங்களைக் கேட்டும், ஸ்ரீராமசந்திரரிடத்தில் தமக்குள்ள பத்திமையினால் திரும்ப மனமின்றிச் சக்கரவத்தித் திருமகனை நோக்கி விண்ணப்பஞ் செய்கின்றனர்: ஸ்ரீராமசந்திரரே! காகுத்தரே!

యదహంనోపచారేణ బ్రూయాంస్నేహాదవిక్లబః।
భక్తిమానితితత్తావ ద్వాక్యంత్వంక్షన్తుమర్హసి॥

யதஹம்நோபசாரேண ப்ரூயாம்ஸ்நேஹாதவிக்லப: ।
பக்திமாநிதிதத்தாவத் வாக்யந்த்வம்க்ஷந்துமர்ஹஸி ॥

அடியேன் இப்பொழுது ஒரு விண்ணப்பம் பண்ணுகின்றேன்; இஃது ஸ்நேஹத்தினாலன்றி, உபசாரமாகச் சொல்லுகிறேனல்லேன்; ஆதலின், அடியேன் எதிர்த்து உரைக்கின்றேனென்று சீறியருளன்மின்; இவன் நம் பக்கலில் பத்தியுடையவனென்பதைத் திருவுளம்பற்றி, அடியேன் செய்யு மிவ்வபராதத்தைப்பொறுத்தருளக்கடவீர். தேவரீர் பிரிந்தெழுந்தருளினமையால், பிள்ளையைப் பறிகொடுத்தவள்போல வொளிபிழந்து பாழடைந்த திருவயோத்தியில் தேவரீரை விட்டு அடியேன் மாத்திரம் தனியே எவ்வண்ணம் புகுவேன்? புறப்படுங்காலையில் தேவர் வீற்றிருந் தலங்கரித்த இத்திருத்தேர் இப்பொழுது தேவரின்றித் தனியே புகக்கண்டு, சோகத்தால் அத்திருநகரி சிதறுண்டழியாதோ? போர்க்களத்தில் ரதிகனின்றித் தேர்ப்பாகன் மாத்திரம் தேரைத் திருப்பிக்கொண்டு செல்லுகையில், சேனைகள் அதனைக் கண்டு சோகமுறுவதுபோல வறியதாகச் செல்லும் இத்திருத்தேரை நகரியுள்ளோர் கண்டு சோகங் கொண்டிறக்கார்களோ? இப்பொழுது தேவர் நெடுந்தூரமெழுந்தளி யிருக்கினும் எதிரிலிருப்பதுபோல நிரந்தரம் தியானஞ் செய்பவர்களாகிப் பிரஜைகளெல்லோரும் உணவுமின்றி வருந்தி இருப்பார்களென்பதில் சிறிதும் சந்தேஹமில்லை. சக்கரவர்த்தித் திருமகனாரே! தேவரீர் வநவாஸம் புறப்படுகையில், நகரத்திலுள்ளோர் யாவரும் சோகங்கொண்டழுது புலம்பிப் பட்டபாடுகளைத் தேவரே கண்டருளினீரல்லீரோ? முன்பே தேவரீர் பொருட்டுப் புலம்பி யழுத அவர்கள் இப்பொழுது தேவரீரை விட்டுப் பிரிந்து திரும்பிய இத்திருத்தேரைக் கண்ணுற்றால் நூறுமடங் கதிகமாகப் புலம்பியழுது வருந்தார்களோ? நான் மீண்டு திருவயோத்தி சேரின், கோஸலையார் என்னைக் கண்டு, ஸுமந்திரரே! என் பெறலரும் புதல்வனை எங்கே விட்டு வந்தீரென்று வினவுவாராயின், அதற்கு நான் என்ன விடையளிப்பேன்? அம்மா மஹாதேவி! நான் ஸ்ரீராமபத்திரரை மாதுலனாகிய கோஸலராஜனுடைய திருமாளிகையில் விட்டு வந்தேனென்று சொல்லிச் சமாதானப்படுத்தலாமா? ஒருபொழுதும் பொய்யென்பதை யறியாமல் உண்மை பேசிப் பிழைத்த அடியேன் இவ்வண்ணம் பொய்ம்மொழியை எவ்வண்ணங் கூறுவேன்? அம்மா! உன் திருமகனைக் கலையுங் கரியும் பரிமாவுந் திரியுங் கானங் கடக்கச் சொல்லவிட்டு வந்தேனென்று உண்மையுரைப்பேனாயின், அவரக்கணமே அச்சோகத்தைப் பொறாமல், மூர்ச்சைகொண் டிறப்பாரே! அவ்வளவு கொடுமைதங்கிய அம்மொழியை எவ்வண்ண முரைசெய்வேன்? மிகுந்த அறிவுள்ள இச்சிறந்த குதிரைகளும் இதுவரையில் தேவரீரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து புகழும் மகிழுமுற்று,

இப்பொழுது தேவரீரை விட்டுப்பிரிந்து ஒளியிழந்த இத்திருத்தேரை எப்படி இழுத்துக்கொண்டு மீண்டுசெல்லும்? ஆதலின் ஸ்ரீராமபத்திரரே! தேவரீரை விட்டுப் பிரிந்து அடியேன்மாத்திரம் திரும்பிச் செல்லேன்; வநவாஸஞ்செய்யத் தேவரீரை யடியேனும் பின்றொடர்ந்துவருமாறு யநுஜ்ஞை கொடுத் தருளக்கடவீர். இவ்வண்ணம் அடியேன் வேண்டியும் இரங்காமல் அடியேனை யூருக்குத் திருப்பியனுப்பிக் கைவிடவே திருவுளங்கொண் டிருப்பீராகில், தேவரீர் விட்டுச்சென்ற தக்ஷணமே பெருந்தீயை வளர்த்து இத்திருத்தேருடன் அடியேனு மதில்வீழ்ந்திறப்பேன். அரணியத்தில் தேவரீர் தவமுயற்சிகொண்டு நியமந்தரித்திருக்கப் போகின்றமையால், அடியேன் அருகிலிருந்து தேவரது நியமங்களுக்கு விக்கினஞ்செய்யு முயிர்களைத் தேரினால் தடுத்தடித் தோட்டுவேன். தேவருக்குத் தேர்ப்பாகனாகிக் கிருதார்த்தனாகுவேனென்னு மெண்ணத்தினாலேதானே அடியேன் தேரோட்டுஞ் செயலிற் பழக்கங்கொண்டு, தேவரீர் முன்னோர்களுக்கும் தேர்ப்பாகனாகியிருந்தேன்; இப்பொழுது தேவர்க்குச் சாரதியாயிருக்கும் பேறலரு மின்பத்தைப்பெற்றேன்; இனி தேவருடன் வநவாஸஞ்சென்று மகிழ்ந்துவாழு மின்பத்தைப்பெற விரும்புகின்றேன். அரணியத்திலும் அடியேன் தேவருடன் வந்து பணிசெய்து மகிழுமாறு அருள்செய்க; ஸுமந்திரனே! நீ நமக்குத் துணையாயிருந்து, நமக்குக்குற்றேவல்களைச் செய்துகொண்டு வாவென்று அடியேனுக்கு மகிழ்ந்து அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்கின்றேன்; இத்திருத்தேர்க் குதிரைகளும், அரணியங்களிலும் தேவரீருக்குச் செயற்குரிய கைங்கரியங்களைச் செய்யுமாகில் புகழ்ச்சியும் பெற்று நற்கதியுமடையும்.

తవశుశ్రూషణంమూర్ధ్నా కరిష్యామివనేవసన్।

అయోధ్యాంస్వర్గలోకంవా సర్వథాప్రజహామ్యహం॥

தவசுச்ரூஷணம்மூர்த்னா கரிஷ்யாமிவநேவஸந் ।

அயோத்த்யாம்தேவலோகம்வா ஸர்வதாப்ரஜஹாம்யஹம் ||

அடியேன் தேவர் கட்டளையைச் சிரத்தில் வகித்து வநத்திலுறைந்து ஸர்வவித கைங்கரியங்களையும் செய்துகொண்டிருந்து மகிழ்வேன்; இவ்வண்ணம் மகிழ்கையில், திருவயோத்தியையாயினும் தேவலோகத்தையாயினும் மனத்திலும் நினைந்து வருந்தேன்; இப்பேரின்பத்தை நோக்குங்கால் அவ்வின்பங்களெல்லாம் சிற்றின்பங்களாமாகையால், அவை யற்பமென விட்டுவிடுகின்றேன்; தேவேந்திரனது அமராவதி பட்டணம் பாவஞ்செய்தவனால் புகவொண்ணாததுபோல, தேவரீரை விட்டுப் பிரிந்த அடியேனால் திருவயோத்தி புகவொண்ணாது. வனவாஸம் தீர்ந்தபின்பு இத்திருத்தேரின்மீது தேவரீரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு மீண்டு திருவயோத்தி யுட்புகவேண்டுமென்பதே அடியேனுடைய சிறந்த விருப்பம். தேவருடன் கூடி வாழ்வேனாயின், அடியேனுக் கிப்பதினான்கு வருஷங்களும் ஒரு கணப்பொழுதாகத்தீரும்;

தேவரீரைப் பிரிந்திருக்கின், இப்பதினான்கு வருஷங்களே பலகோடி நூறாயிரம் வருஷங்களாக வளரும். அடிமைப்பட்டோர்களுக் கருள்புரியும் ஆராவமுதே! சக்கரவர்த்தித் திருக்குமாரரே! தேவரீருக்கு பக்தனும், தொண்டனும், தேவரீர் சென்ற நன்னெறி பற்றி நடப்பவனும், தேவரீர் திருவுளத்திற்கு இசைவாக ஒழுகுபவனுமாகிய அடியேனைத் தேவரீர் இவ்விடத்தில் விட்டுவிட் டெழுந்தருளுவது தகுதியன்று; ஆதலின், இவ்வண்ணந் திருவுளம் பற்றக்கூடாதென்றிவ்வாறு பலமுறை பணிந்து வேண்டிக்கொண்டு வருந்தி நின்றனர். சக்கரவர்த்தித் திருமகனாரும் பக்தவற்சலராகையால், அவரைச் சமாதானஞ் செய்யாமல் எழுந்தருளத் திருவுள மின்றிச் சுமந்திரரை நோக்கிக் கூறுகின்றனர். தேர்ப்பாகரே! உமக்கு எம்மிடத்திலுள்ள பத்தியினையும் அன்பினையும் நன்கறிவோம்; ஆயினும், உம்மை இங்கிருந்து திருவயோத்திக்குத் திருப்பியனுப்புங்காரணமுரைக்கின்றோம்; கேளீர். நீர் என்னுடன் வருவீராயின், கைகேயித் தாயார் நான் வனமே சென்றேனென்பதை நம்பாமல், புறநகர்களில் சென்று வாழ்வேனென்றே எண்ணங்கொள்வர்; நீர் மீண்டு செல்வீராயின், உம்மைக்கண்டு, நான் வனவாஸமே சென்றேனென்பதை நம்புவர்; அதனால் மிக மகிழ்வுற்று தார்மிகராகிய மஹாராஜாவரைப் பொய்யரென் றையங்கொள்ளாமலும் துன்பப் படுத்தாலு மிருப்பார்; பரதனால் நன்கு பாதுகாக்கப்பட்ட சிறந்த ராஜ்ஜியத்தைக் கண்டு சந்தோஷமடைந்து வாழ்வார்; இவைகளே எனது முக்கியமான கோரிக்கைகளாம். ஆதலின், என்னுடைய நன்மையையும், மஹாராஜருடைய நன்மையையும் கருதி நீர் மீண்டு செல்லக்கடவீர். அங்குசென்று நீர் சொல்லவேண்டிய சங்கதிகளை முன்னமே சொல்லியிருக்கின்றேனே, அவ்வண்ணம் அங்கு விண்ணப்பஞ் செய்யக்கடவீரென் றிவ்வண்ணமருளிச்செய்து, பலமுறை தேற்றி யருளினர். பிறகு குஹப்பெருமானை நோக்கி, நிஷாதாதிபதே! நானிப்பொழுது நாட்டார்நகரத்தார்களுடன் வாஸஞ் செய்வது தகுதியற்றது; தவசிபோலத் தனியே காட்டிலுறையும் படியே கைகேயி கட்டளையிட்டது; நானும் அவ்வண்ணமே யாகுக வென்று உடன்பட்டு வந்திருக்கின்றேன்; ஆதலின், நான் இப்பொழுது தந்தைக்கும் ஸீதா லக்ஷ்மணர்களுக்கும் இதத்தைக்கருதி, மாதவத்தோர்க் கணியாகிய ஜடை திரித்துக்கொள்வது முதலிய நியமங்களை மேற்கொண்டு செல்வேன்; ஆதலின் ஜடை திரித்துக்கொள்வதன்பொருட்டு ஆலம்பால் கொண்டுவந்தளிக்கக்கடவாயென்று கட்டளையிட்டருளினர். குஹப்பெருமானு முடனே ஆலம்பாலைக்கொணர்ந்து ஸமர்ப்பித்தனர். நீண்டுருண்ட திருத்தோள்களையுடைய ஸ்ரீராமலக்ஷ்மணர்க ளிருவரும் அந்தப்பாலினால் ஜடை திரித்துக்கொண்டு மரவுரியுடனே நின்றவளவில், சிறந்த மஹாயோகிகள்போலத் திகழ்ந்தனர்கள். இவ்வண்ணம் ஸ்ரீராமசந்திரர் இளையபெருமாளுடன் வைகாநஸ விரதம்பூண்டு குஹப்பெருமானை நோக்கி, தோழனே! நீ படைகளையும், பொருட்சாலையினையும், அரணையும், நாட்டையும், மிக ஊக்கங்கொண்டு தக்கபடி பாதுகாத்து வருக; ராஜ்ஜியமென்பது மிகத்திறமையுள்ளவர்களுக்கும் எளிதாகப் பாதுகாக்

கத்தக்க தாகாதன்றே என்றருளிச்செய்து, அவரையும் நிற்கும்படி விடை கொடுத்தருளினர். பிறகு ஸீதாலக்ஷ்மணர்களுடன் விரைவாக வெழுந்தருளி ஸ்ரீராமன் கங்கையின் கரையில் சித்தமாய் நிற்கின்ற சிறந்த ஓடத்தைக் கடாக்ஷித்து, அந்நதியைத்தாண்டி எழுந்தருளுவதன் பொருட்டு இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! நீ இந்த நாவத்தில் மெதுவாக ஏறிச் சீதையையும் பற்றி ஏற்றுவிக்கக் கடவை யென்று கட்டளையிட்டருளினர். இளையாழ்வானும் தமையன் கட்டளையின்படி பிராட்டியாரை யந்நாவத்தில் முன்ன மேற்றுவித்துப் பின்பு தாமுமேறி நின்றனர். சக்கரவர்த்தித் திருமகனும் உடனே அம்மரக்கலத்திலேறியருளித் தமக்கு இதத்தைக்கருதி, பிராஹ்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் உரியவையான நவாரோஹண மந்திரங்களை ஜபஞ் செய்தருளினர். குஹப்பெருமான் அந்நாவத்தைக் கடத்தும்படி தம்பரிஜனங்களுக்குக்கட்டளையிட்டனர். இளையபெருமாள் விதியின்படி யாசமனஞ் செய்து பிராட்டியாருடன் அந்நதியினை மகிழ்ந்து பணிந்தனர். பெருமாள் சுமந்திரருக்கும், பரிவாரங்களுடன் கூடிய குஹப்பெருமானுக்கும், விடை கொடுத்தருளி, ஓடத்தைச் செல்லவிடும்படி நாவிகர்களுக்குக் கட்டளையிட்டருளினர். அநந்தரம் அந்நாவம் நாவிகர்களா லோட்டப்பட்டுச் சிறந்த துடுப்புகளின் வேகத்தினால் விரைவாக அந்நீரினைக் கடந்து சென்றது. ஸீதாபிராட்டி ஆற்றினடுவில் செல்லுகையில், கைகூப்பிக் கங்கையை நோக்கி, தாயே! தசரதமஹாராஜர் திருக்குமாரராகிய என் பிராணநாதர் தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணுவதன் பொருட்டு வனவாஸஞ் செல்லுகின்றனர்; இவர் சுகமாக வனத்தில் வஸித்து மீளும்படி நீ யருள்செய்து பாதுகாக்கக் கடவை; பதினான்கு வருஷங்களும் சுகமாகத் தீர்ந்து, குறைவின்றி நான் பர்த்தாவுடனும் லக்ஷ்மணருடனும், ஸுகமாக மீண்டு வருவேனாகில், மிக மகிழ்ந்து எல்லாக் கோரிக்கைகளு மீடேறி, உன்னைக் குறித்து யாகஞ் செய்விப்பேன்; நீ மூவுலகங்களிலுஞ் சென்று அங்கங்குள்ள ஜனங்களை வானேற்றிச் சமுத்திரராஜனுக்கு பாரியையாகி மிகப் புகழ் பெற்றிருக்கின்றனை யன்றே? என்கணவர் ஸுகமாக மீண் டெழுந்தருளிப் பட்டாபிஷேகங் கொள்வாராகில், உன்னைப் பலமுறை தொழுது துதிசெய்வேன்; உனக்குப் பிரியஞ் செய்வதின் பொருட்டு, அநேக நூறாயிரம் பசுக்களையும், சிறந்த ஆடையாபரணங்களையும், அறுசுவையுள்ள அன்னங்களையும், வேதியர்களுக்கு அளிப்பேன்; நியமங்கொண்டு ஆயிரம் சாராயக் குடங்களினாலும், மாம்ஸமே முதலாகவுள்ள அன்னங்களினாலும், உன்பொருட்டு யாகஞ் செய்விப்பேன்; உன்னுடைய தீரங்களில் வாழுந் தேவர்கள்பொருட்டும், மற்றுமுள்ள புண்ணிய

தீர்த்தங்களிலும், தேவாலயங்களிலும், * மணிகர்ணிகாதி கட்டங்களிலு முள்ள தேவதைகளின் பொருட்டும் யாகஞ்செய்விப்பேன்; ஆதலின், என் பர்த்தா இளையபெருமாளுடனும் என்னுடனும் ஒரு குறையு மின்றி வனவாஸந் தீர்ந்து திருவயோத்திக் கெழுந்தருளுமாறு அருள்செய்து பாதுகாக்கக் கடவையென் றிவ்வண்ணம் வேண்டிக்கொண்டே அந்நதியின் தென்கரை போய்ச் சேர்ந்தனள். பகைவர்களை வெல்லுந் திறமையுள்ள ஸ்ரீராமபத்திரர் ஸீதாலக்ஷ்மணர்களுடனே கங்கையின் தென்கரை சேர்ந்து, வங்கத்தை விட்டிழிந்து காடேறப் புறப்பட்டெழுந்தருளி இளையபெருமாளைநோக்கிக் கூறுகின்றனர். ஸௌமித்திரா நந்தனு! இக்கானகம் மிகக் கொடிய தாதலின், ஜனங்களிருக்கினும் இல்லாவிடினும் உபேக்ஷயாயிராமல் மிகவும் ஊக்கத்துடன் பாதுகாத்து வரக்கடவை. இதுவரையிலிவ்வநம் நாம் கண்டதன்றாதலின், எவ்விடத்திலென்ன தீங்குநேரிடுமோ? ஆனதுபற்றி அவசியம்ஊக்கமாகக் காத்துச் செல்லவேண்டும். நீ முன்பு செல்லக்கடவை; ஸீதை இடையில் செல்லக்கடவள்; யானுன்னையும் ஸீதையையும் பாதுகாத்துக்கொண்டு பின்றொடர்ந்து வருகின்றேன். இவ்வண்ணம் நாம் ஒருவர்க்கொருவர் பாதுகாத்துச் செல்லவேண்டும்: எஃது எப்பொழுது செய்யத்தக்கதோ அதனை அப்பொழுதேசெய்தல்வேண்டும்; செய்தற்குரியகாலம்கடந்தபின்பு அதனைச்செய்வதுமிக வருத்தமாகும். இப்போழ்துதான் ஸீதை வனவாஸத்திலுண்டாகுந் துன்பமிஃதெனவுணர்வாள்; ஏனெனில், இஃது ஜனஸஞ்சாரமில்லாதது; உத்தியானம்,நன்செய் புன்செய் போன்ற நிலங்கள்ல்லாமல், மேடுபள்ளம் படுகுழிகள் நிறைந்தவிடம்; கோரமாகிய இவ்வனத்தில் இப்பொழுதுதான் இவள் புகப்போகின்றனளென்றருளிச்செய்தனர். இளையபெருமாள் தமையனருளிச்செயலைக்கேட்டு முன்னடந்தனர்; அவரைத்தொடர்ந்து ஸீதாபிராட்டி எழுந்தருளினார்; அவர்களைத்தொடர்ந்து ஸ்ரீராமபத்திரர் எழுந்தருளினர். இவ்வண்ணம் இவர்கள் எழுந்தருளுமளவும்சுமந்திரர் கங்கையின்வடகரையினின்றுபார்த்துக் கொண்டிருந்து, ஸ்ரீராமபத்திரர் கண்ணுக்குக்காணுமல் நெடுந்தூரமெழுந்தருளியபின் கடுந்துயரமடைந்து கண்ணீர் பெருக்கி யழுதனர். சக்கரவர்த்தித் திருமகனே, அம்மஹாநதியைத்தாண்டிய பிறகு பலவகைப்பொருள்கள் நிறைந்து நீர்வளநிலவளம் பொருந்திமகிழும் ஜனங்களுடையதாகிவிளங்கும் வற்சதேசத்தை யடைந்தனர். ஆங்கு ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும், மாலைப்பொழுதாகு

* மணிகர்ணிகை என்பது, காசியில் அறுபத்திநான்குபடித் துறையிலொன்று.

மளவும், பிராட்டியாருடன் கூடி வழிநடந்து, க்ஷத்திரியர்களுக்கு உணவாக விதிக்கப்பட்ட சிறந்த வராஹமும், கலைமானும், புள்ளிமானும், கறுப்புக் கலைமானுமாகிய நான்கு மிருகங்களை * அடித்தெடுத்துக்கொண்டு, மாலைப்பொழுதாயினவுடனே பசியதிகரித்தவர்களாகி விரைவாக நடந்து ஓர் மரத்தினடியிலிறங்கி இன்புற்று மகிழ்ந்தனர்கள். †

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபத்திரர் தம் மாதாவின் துயரத்தை நினைந்து தம்மை வெறுத்து வருந்துகையில், இளையபெருமாள் சோகந்தணியத் தேற்றியது.

---

மரத்தினடியி லெழுந்தருளியபின்னர் சக்கரவர்த்தித்திருமகன் மாலைச் சந்திக்கடன்களைச் செய்தருளி இளையபெருமாளை நோக்கியருளிச் செய்கின்

---

* ஸ்ரீராமபத்திரர் மிகவும் பூததயை யுடையராகியும், தம் பசியின் ஆத்திரத்தால் மிருகங்களைக் கொலைசெய்ய எவ்வண்ணந் துணிந்தனர்; அப்படிக்கொல்வதுந் தருமமாகுமோவெனின், தருமமாகும்; க்ஷத்திரியர்கள் மிருகங்களைப் புசிக்கலாகுமென்று விதியிருக்கின்றமையால். வேதியர்களும் யாகாதிவிதிகளில் அஜத்தைக் கொன்று, ஹோமமுதலியவை செய்கின்றனரன்றே. (சஹஜேகிளஜேவிணிந்தியே ணஹ¬சேகம்ம விவஜ்ஜணீயயே | பசுமாளண கம்மதாளுணே அணுயம்பாமியுயெவ்வ சொத்தியே) என்று ஸ்ரீ காளிதாஸ மஹாகவி சொன்னபடி, விதிப்படி செய்த இக்கொலையினால் ஸ்ரீராமபத்திரர் கொடியரென வெண்ணப்படாரெனவுணர்க.

†இந்த சர்க்கத்தில் இல்லறம் பூண்டிருந்த ஸ்ரீராமபத்திரர் வர்ணப்பிரஸ்தாச்சிரமம் தரித்ததா யிருக்கின்றது; இவர் இல்லறத்தை விட்டே அதனை மேற்கொண்டனரோ, அல்லது, இல்லறத்திலிருந்தே அவ்வறத்திற் குரிய நியமங்களை மாத்திரம் செய்தருளினரோ? மேன்மேலுயர்ந்த ஆச்சிரமத்தை மேற்கொண்டவர், மறுபடியுங் கீழ்மைப்பட்ட ஆச்சிரமத்திற்கு வரலாகாதென்றும், ஒரு சாகையிலுள்ளவன் மற்றொரு சாகையின்படி நடந்தால் சாகாரண்ட னென்னப்படுவதுபோல இவர் ஆச்சிரமரண்டரெனப் படுகின்றாரென்றும் இருப்பதனால், ஸ்ரீராமசந்திரர் மீளவும் இல்வாழ்ந்து அரசுசெய்வதுஒக்குமோ? ஒவ்வாதே; ஆதலின், முதல்பக்ஷமும் இரண்டாவது பக்ஷமுங் கூடாவெனின், அங்ஙனமன்று. ஒரு ஆச்சிரமத்திலுள்ளவர் ஸத்தியபரிபாலனத்தின் பொருட்டாயினும், ஒரு காரியத்தை ஸாதனஞ் செய்துகொள்வதின் பொருட்டாயினும், தமக்கு நேரும் ஆபத்தைப் போக்கிக்கொள்வதன் பொருட்டாயினும், வேறு ஆச்சிரமங்களுக்குரிய வேஷங்களைத்தரிக்க நேரிடுமாயின், மறுபடி அவர்கள் தந்தங் காரியங்க ளீடேறினபின்பு முன்போலத் தமக்குரிய ஆச்சிரமத்திற் புகுவது தருமமே: (ஸம்யக்ஸங்கல்பஜ: காமோ தர்மமூலமிதம் ஸ்ம்ருதம்) என்று, இவ்வண்ண மொக்குமென மநு நூலிலும் ஓதப்படுகின்றது. ஆனதுபற்றியே, தருமபுத்திரரும் அஜ்ஞாதவாஸத்தில் ஸந்யாஸியாயினர்; அர்ஜுநனும் ஸுபத்திரையை விவாகஞ் செய்துகொள்வதன்பொருட்டு யதியாயினன்; நம் அருள் வள்ளலாராகிய ஸ்ரீமத்பாஷ்யகாரரும் வெள்ளைசாத்தி யருளினர். அவ்வண்ணமே இங்கு ஸ்ரீராமசந்திரர் வைகானஸ விரதங்கொள்வதுந் தருமமென்றேயுணர்க.

நனர்: 'கேளடா லக்ஷ்மணா! நாம் நாடுவிட்டுக் காடு சேர்ந்தபின்பு நமக்கு நேர்ந்த முதல் இராத்திரி இதுதான். இப்பொழுது ஸுமந்திரரும் திரும்பி விட்டனரே, நாம் தனியே நின்றோமேயென்று நீ துன்புறற்க; இன்று முதல் நாமிருவருமே விழித்துக் காத்திருத்தல் வேண்டும்; இனி ஸீதையைப் பாது காத் தளிக்கும் பாரம் நமக்கே மிகுந்த தன்றோ? இங்குள்ள புல் முதலிய வற் றைப் படுக்கையாகப் பரப்பிப் படுத்துத் துயின்று எவ்விதமாயினும் இன்றிர வைப் போக்குவோம்' என்றருளிச்செய்து பூமியின்மீது வீற்றிருந்து, இளை யாழ்வானை நோக்கி மீளவும் பற்பல கதைகளை யருளிச் செய்யலுற்றனர். 'லக்ஷ்மணா! இப்பொழுது மஹாராஜர் நம்மைநினைந்து துன்புற்றுப் படுத்திருப் பாரே யன்றி இன்புற்றிரார். கைகேயி மாத்திரம் தம் விருப்ப மீடேறிற்றே யென்று மகிழ்ந்திருப்பாள். அவள் ராச்சியத்தினிடத்திலுள்ள ஆசையினால் மஹாராஜரிடம் சங்கைகொண்டு அவரை வருத்திக் கொலைசெய்யாதிருப் பாளா? பரதனை அழைப்பித்து அவனைக்கண்டு மகிழ்ச்சியுற்றிருப்பாளோ? மஹாராஜ ரிப்பொழுது அநாதராகவும் விருத்தராகவும் என்னைப் பிரிந்தவ ராகவும் இருக்கின்றமையால், கைகேயியினால் பீடிக்கப்பட்டவராகி என்செய் வாரோ? இவ்வண்ணம் நமக்குற்ற துன்பத்தையும், மஹாராஜருக்குக் காமத் தினாலுற்ற மதிமயக்கத்தையும் ஆராயுங்கால், அறம்பொருள்களைவிட இன் பமேவலியுடையதென வெனக்குத்தோற்றுகின்றது; இல்லையாகில், மஹாராஜர் என்னைக் காடேறவிட்டதுபோல, முழு மூடனாயிருப்பவனாயினும் இப்படிப் பெண்புத்திக் கிணங்கி இனிய குமாரனை யோட்டி விடுவானோ? பரதன் மனை யாளுடன் கூடி மகிழ்ந்து, சிறந்து செழித்து மகிழ்ந்த கோஸல தேசங்களை யெல்லாம் மஹாராஜர்போலப் பாதுகாக்கப் போகின்றனனே, அவனொரு வனே யன்றோ நல்வினையினன்! தந்தையும் மூப்பினராகி யானும் காடடைந் தமையால், அவனொருவனே எல்லா ராஜ்ஜியத்திற்கும் முதன்மையனாகு வான்.

అర్థధర్మౌ పరిత్యజ్య యః కామమనువర్తతే।
ఏవమాపద్యతే క్షిప్రం రాజా దశరథో యథా॥

அர்த்ததர்மௌ பரித்யஜ்ய யஃகாமமனுவர்த்ததே |
ஏவமாபத்யதே க்ஷிப்ரம் ராஜாதசரதோயதா ||

தருமத்தையும் அர்த்தத்தையும் கைவிட்டுக் காமத்தை மாத்திரம் யாவ னொருவன் முதன்மையாகக் கொள்ளுகின்றானோ, அவன் நம் தந்தைபோல விரைவில் கடுந்துயரத்தை யடைந்தழிவான்; நம் தந்தை இறப்பதன்பொருட் டும், நாம் காடடைவதன் பொருட்டும், பரதன் அபிஷேக மடைவதன் பொரு ட்டுமே கைகேயி வந்து சேர்ந்தனளென்று நான் நினைக்கின்றேன்; தானே அழகினளென்று மதமேறி மதிமயக்குற்ற கைகேயி கோஸலையையும், ஸுமித் திரையையும், இப்பொழுது வருத்தமுறச் செய்யா திருப்பாளா? அடா லக்ஷ்மணா! ஸுமித்திராதேவியும் என்பொருட்டுத் துன்புறவேண்டுமோ? ஆத

லின், நீ பொழுது விடிந்தது மெழுந்து திருவயோத்திக்குப் போய்ச் சேர்ந்து தாயை மகிழ்விக்கக்கடவை. நானொருவனே ஸீதையை யுடன்கொண்டு தண்டகாவனஞ் செல்வேன்; அநாதைபோல வருந்தும் என் மாதாவுக்கும் நீ தஞ்சமாகக்கடவை. கைகேயி மிகக்கொடியவ ளாதலால், அடிக்கடி காரண மின்றியே பகைகொண்டு மாதாவை வருத்துவள்; அங்ஙனம் அவளை வருத் தாமல் பாதுகாத்தருளென்று, நீ தரும முணர்ந்த பரதனிடத்தில் என் தாயை யடைக்கலங் கொடுக்கக்கடவை. என் தாய் முன்பிறப்பில் பெண்களைப் பிள்ளைகளுடன்கூட விடாமல் பிரித்து வருத்தினள்போலும்; ஆனதுபற்றியே இப்பொழுது அவளுக் கித்துன்பம் நேர்ந்தது; ஐயோ! அவள் நெடுங்காலந் தவம்செய்து என்னைப் பெற்றெடுத்து வளர்த்தாள்; அதன் பயனை அவள் அனுபவிக்கவேண்டிய இக்காலத்தில் (யான் அவளுக்கு உபசாரஞ் செய்ய வேண்டிய காலத்தில்) யான் அவளைவிட்டுப் பிரிந்தேன். என்னைவிடத் தீவினை செய்தவனு முளனோ?—

మాస్మసీమన్తినీకాచి జనయేత్పుత్రమీదృశం।
సౌమిత్రేయోహమంబాయా దద్మిశోకమనన్తకం॥

மாஸ்மஸீமந்திநீகாசிஜ் ஜநயேத்புத்ரமீத்ருசம் ।
ஸௌமித்ரேயோஹமம்பாயா தத்மிசோகமநந்தகம் ॥

ஸௌமித்ரே! நானிப்பொழுது என் அன்னையார்க்கு முடிவில்லாத இவ் வகைத் துயரத்தை விளைத்ததுபோல இவ்வண்ணந் துன்ப முறுவிக்கத்தக்க மகனை யொருத்தியும் பெறக்கடவளல்லள்.

మన్యేప్రీతివిశిష్టాసా మత్తోలక్ష్మణశారికా।
యస్యాస్తచ్ఛ్రూయతేవాక్యం శుకపాదమరేర్దశ॥

மந்யேப்ரீதிவிசிஷ்டாஸா மத்தோலக்ஷ்மணசாரிகா ।
யஸ்யாஸ்தச்ச்ரூயதேவாக்யம் சுகபாதமரேர்தச ॥

லக்ஷ்மண! என் தாயாரால் வளர்க்கப்பட்ட அந்தச் சாரிகைப்பறவை என்னைவிட அதிகமான அன்புடையதென நினைக்கின்றேன்; அஃது கூட்டி லிருந்துகொண்டு பூனை வருவதைக் கண்டு அருகிலுள்ள கிளியை நோக்கி, *அரே கிளியே! நீ பகையாகிய இப்பூனையின் காலினைக் கடியென்று இவ்வண் ணம் கூவி, என் அன்னையார்க்கு அதிகமான அன்பு விளைவிக்குமன்றோ? இவ்வண்ணம் நல்வினையற்றவளாகித் துன்புறுகின்ற அன்னையார்க்கு என்னால் ஒருதவியு மின்மையால் அவளுக்கும் மலடிக்கும் வாசியென்ன? அவள் என் னைப்பிரிந்து சோகக்கடலில் மூழ்கி இருக்கின்றமையின், அவளை விட நல் வினை யற்றவர்களுமுளரோ?—

---

* 'அடா கிளிபோலழகிய ராமா! நீ சத்துருவின் மூலத்தைக் கண்டிக்கக் கடவை யென்று என்னை நோக்கிச் சொல்வி'—என்றும் ஒருபொருள் தோன்றும்.

ఎకోహ్యహమయోధ్యాంచ పృథివీంచాపిలక్ష్మణ।
తరేయమిషుభిఃక్రుద్ధో ననువీర్యమకారణం॥

ஏகோஹ்யஹமயோத்யாஞ்ச ப்ருதிவீஞ்சாபிலக்ஷ்மண |
தரேயமிஷுபி:க்ருத்தோ நநுவீர்யமகாரணம் ||

கேளாய் லக்ஷ்மணா! நான் தருமத்தை விட்டுச் சினங்கொள்வேனாகில், நான் ஒருவனே பாணங்களால் அயோத்தியையும், மற்றுமுள்ள பூமண்டலத்தையும் வென்று அபிஷேகங் கொள்வேன்; இப்பொழுது சினங்கொண்டு வீரஞ்செய்வது தகுதியற்ற தன்றோ? அதருமத்துக்கும், பரலோகத்திற்கும் அஞ்சியே இப்பொழுது யான் அபிஷேகஞ் செய்துகொண்டிலேனேயன்றித் திறமையின்மையாலன்று' என்றிவ்வண்ணம் நிர்ஜனமான அவ்வனத்தில் அவ்விரவிலே பற்பல மொழிகளை யருளிச்செய்து பிறகு கண்ணுங் கண்ணீருமாய் மொழியற்று மவுனியாயினர். இவ்வண்ணம் அழுது வருந்தி, அனலற்ற நெருப்புப்போலவும், அலையினொலியற்ற ஆழ்கடல்போலவும் வீற்றிருக்கின்ற ஸ்ரீராமபத்திரரை இளையபெருமாள் நோக்கி ஆச்வாஸப்படுத்தலாயினர். 'ஸ்வாமி எம்மையனே! இப்பொழுது திருவயோத்தி முழுமதி நீங்கிய இரவுபோலத் தேவரீரை விட்டு நீங்கி ஒளியிழந்து இருள்மூடி யிருக்குமென்பது உண்மையே! ஆயினும், தீரோதாத்த கம்பீர குணகணசாலியான தேவரீர் இவ்வண்ணம்மனந்தளர்ந்து வருந்திப் பிராட்டியாரையும், அடியேனையும், துன்புறச்செய்தல் தகுதியற்றது; தேவரீரை விட்டுப் பிரியுங்கால், பிராட்டியாரும் அடியேனும், நீரினின்று மெடுத்துக் கரையில் போட்ட மீன்கள் போலத் துடிப்போம்; ஒரு முகூர்த்தகாலங்கூடப் பிழைத்திரோம்; தேவரீரைவிட்டு அடியேன் தந்தையையாயினும், தம்பியையாயினும், தாயையாயினுங் காண விருப்புறேன்; வானுலகம் பெறினும் வேண்டேன்' என்றிவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்து தேற்றி மகிழ்வித்தனர். அநந்தரம் ஸ்ரீஸீதா ராமசந்திரர்களிருவரும், அவ்விடத்தில் இளையபெருமாளால் ஆலமரத்தடியில் தளிர்களா லியற்றப்பட்ட சயனத்தி லெழுந்தருளிப் பள்ளி கொண்டருளினர்கள். இளையபெருமாள் இவ்வாறு விண்ணப்பஞ்செய்த இனிமையான வாக்கியங்களை ஸ்ரீராமபத்திரர் திருச்செவி சார்த்திப் பதினான்குவருஷம் இளையபெருமாளுடன் கூடி இருக்கத் திருவுள்ளம்பற்றித் துயில்கொண்டருளினர். இவர்களிருவரும் மிகவும் தீரரும் வீரரும் சூரரும் ஆதலின், கிரிகந்தரத்தில் வாஸஞ்செய்யும் இரண்டு சிங்கங்கள்போல, அந்தக் கோரமான கானகத்தில் சிறிதும் பயமுறாமல் இனிதாக வாழ்ந்து மகிழ்ந்தனர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

இந்த 53-ம் ஸர்க்கத்து விசேஷார்த்தத்தை இதனடியில் காண்க:—

இந்த ஸ்ரீமத்ராமாயணமென்னும் இதிஹாஸ மஹா காவ்யத்தில் ஸம்ப்ரதாயார்த்தங்கள் சருக்கங்கள் தோறும், சுலோகங்கள் தோறும், பாதங்கள் தோறும், பதங்கள்தோறு மிருக்கின்றன; ஆகிலும், அவ்வர்த்தங்களையும் விவரித்து எழுதப்புகுந்தால் மிக வளருமென்பதனாலும், அவ்வர்த்தங்கள் குருமுகமாகக் காலக்ஷேபஞ்செய்தே அறிந்துகொள்ளவேண்டுமென்பதனாலும், அவ்விஷயங்களை முதலிலிருந்துமிகுதியாகஉரைத்திலோம்; சிற்சில விடங்களிற் சில விசேஷார்த்தங்களை மாத்திரம் சில துராக்ஷேபங்களுக்கு ஸமாதானமாகக் குறித் துரைசெய் திருக்கின்றோம். இதில் சகல சாஸ்திரங்களினுடைய முக்கியார்த்தங்களும், சகல வேதங்களினுடைய முக்கியார்த்தங்களும், சுருங்க வருளிச்செய்யப்பட்டிருக்கின்றன. அறம்பொருளின்பம்வீடென்னும்நான்குபுருஷார்த்தங்களும், அவைகளைப் பெறும் வகைகளும், நன்கருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுள், ஸர்வதேசங்களிலும், ஸர்வ காலங்களிலும், ஸர்வாவஸ்தைகளிலும், ஸர்வ ஜநங்களுக்கும் ஸுலபமானதும், விரைவில் பயன் தந்தே காப்பதும், நிரந்தரஞ் செய்யத்தக்கதாகி வருத்தாமல், ஒரே தரத்தில் ஒரே க்ஷணத்தில் செய்யத்தக்கதும், ஐந்தங்கங்களையுடையதும், மந்திர விசேஷாநுஸந்தானமடியாக வுள்ளதுமான உபாயமொன்று உண்டு; அஃது பெரிய பிராட்டியாருந் தாமுமொன்றாகிப் பரப்ரஹ்மமென்று ஓதப்பட்ட ஸ்ரீயஃபதியாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடியைச் சரணமடைவதே. இஃது இத்தன்மைத் தென்பது வேதாந்தங்களி லோதப்படுகின்றது; பற்பல மஹாயோகிகளும் அருளிச்செய் திருக்கின்றனர்கள். இதனையே முதன்மையாக மதித்து ஸ்ரீவான்மீகி பகவான் இந்தப் பிரபந்தத்தை யருளிச்செய் திருக்கின்றமையால், இதற்குச் சரணாகதி சாஸ்திரமென்று நம் பூர்வாசாரியர்களால் திருநாமம் சாற்றப்பட்டிருக்கின்றது. இவ்விசேஷார்த்தத்திலுள்ள நோக்கினாலேதான் சிலவிடங்களில் வெளிப்படத்தோற்றும் பொருள்களில் விரோதம்போலத் தோன்றும்; அதற்கு ஆங்காங்கு லோகரீதியாகவே ஸமாதானமுங் கூறினோம்; முற்றுங் குருமுகமாகவே அறிந்துக் கொள்ள வேண்டுமாயினும், முக்கியமான சில விசேஷார்த்தங்களை மாத்திரம் வந்தவிடங்களில் எடுத்துரைப்போம், எல்லாவிடங்களிலும் இவ்வண்ணமே ஊஹித்துக் கொள்க. இந்த ஸ்ரீமத்ராமாயணம் இதிஹாஸ மென்பதையும், மஹாகாவ்யமென்பதையும், அதனுள்ளும், த்ருச்யகாவ்யங்களிற் சிறந்த மஹாநாடகமாகு மென்பதையும், மற்று மிதற்குள்ள ஆக்ஷேபஸமாதானங்களையும், பிரமாணங்களுடனும், உதாரணங்களுடனும் பெரியோர்கள் பலவிடங்களில் அருளிச்செய் திருக்கின்றமையால், அவ்விஷயங்களை இதிற் கூறுகின்றிலேம்.

ஓ! ஓ!! திகைப்பூண்டை மிதித்து வழிதப்பி நெடுந்தூரஞ்சென்றோம்; இப்பொழுது இச்சருக்கத்திலுள்ள விசேஷங்களை யன்றோ எழுதமுயன்றோம். ஆம் ஆம்; இச்சருக்கத்தில் ஸ்ரீராமசந்திரர் தம் தந்தை தம்மை அநியாயமாகக் காட்டிலோட்டினரென்றும், அவர் மிகவுங் காமாதுரரென்றும் இகழ்ந்திருக்கின்றார். தாமும் பலவாறாகத் துயரங்கொண்டு அற்பர்போலப் புலம்பி யழுகின்றார். ஆதலின், இவர் பரப்ரஹ்மமென்பதும், நிரோதாத்தகுணங்களை யுடையவரென்பதும், எவ்வண்ணம் பொருந்துமெனின்? பொருந்தும்; (ஆத்மானம்மாநுஷம்மந்யே ராமந்தசரதாத்மஜம்) என்று யுத்த

காண்டத்தில் ஸ்ரீராமபத்திரரே பிரஹ்மருத்திரேந்திராதி தேவர்களைப் பார்த் தருளிச் செய்கிறபடி இவர் தம் பரத்துவத்தை வெளிப்படுத்தாமல் மனுஷியபாவனை செய்கின்ற படியால் இவ்வண்ணந் துன்பம் நேருங்கால் ஸாதாரணமாக இதரஜனங்கள் எவ்வண் ணம் துன்பப்பட்டு வருந்துவார்களோ, அவ்வண்ணமே இவர் அபிநயம் செய்தனரென வுணர்க. அன்றியும், இவர் தந்தையை இகழ்ந்து மிலர், தாம் துன்புற்று மிலர், அவ்வி டங்களில் தோன்றும் உண்மையான பொருளை யடியில் எழுதுகின்றோம். ஒவ்வொரு சுலோகத்தின் அர்த்தத்தையும் கணக்கிட்டிருக்கிறபடி முறையே காண்க:—

(ஸதம்வ்ருக்ஷமித்யாதி)—(ரமந்தேயோகிநோநந்தே ஸத்யாநந்தேசிதாத்மநி | இதி ராமபதேநாஸௌ பரம்ப்ரஹ்மாபிதீயதே) என்கிறபடி பரப்ரஹ்மமாகிய ஸ்ரீராம பிரான் (த்வாஸுபர்ணேத்யாதி) ச்ருதியி லோதப்படுகின்றபடி விபவசரீரத்தைத் திரு வுளம் பற்றித் திருவநந்தாழ்வானைநோக்கி, க—(அத்யேயமித்யாதி)—தம்பி லக்ஷ்மணா! சுத்தஸத்வமின்றி இருள்கொண்டிருக்கின்றது இந்தப் பிரகிருதிமண்டலம்; ஆதலின், நாம் வந்த காரியம் முடிவதன் முன்னமே நித்திய விபூதியை யடையவேண்டுமென்று விரும்பற்க. உ— (ஜாகர்த்தவ்ய மித்யாதி)—கோபமின்றிச் சாந்தியுடைய ஸாதுபங்தி யின் யோகக்ஷேமங்கள், (அநந்யாச்சிந்தயந்தோமாம் யேஜநாஃபர்யுபாஸதே | தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||) என்று நான் பிரதிஜ்ஞைசெய்திருக் கிறபடி நம் மதீநங்களாக இருக்கின்றமையால், நாம் மிகவும் ஊக்கத்துடன் விழித் திருக்கவேண்டும்; ௩—(ராத்ரிமித்யாதி)—நாம் கர்மவசிய ரல்லராயினும், என்னுடைய ஸங்கல்பமாத்ராயத்தங்களாகிய போகோபகரண போகஸ்தாநாதிகளை யனுபவித்து, ஸங்கல்பித்த காலத்தை இந்த லீலாவிபூதியிலே போக்குவோம்; ச—(ஸதுஇத்யாதி)— நித்யவிபூதியில் திருமாமணி மண்டபத்தில் திருவநந்தாழ்வான் மேல் யோகநித்திரை கொண் டருளத்தக்கவ ராயினும், பிரகிருதி மண்டலத்தின்மீது வீற்றிருந்தருளி இளையபெருமாளை நோக்கி, மேலும் அருளிச்செய்கின்றனர். ரு—(த்ருவமித்யாதி)— லக்ஷ்மணா! நானிப்பொழுது ஸ்ருஷ்டிஸ்திதி என்னு மிரண்டு தொழில்களையே செய் தருளுகின்றமையால், மூலப்பிரகிருதியில் லீனமாயிருந்த ஜீவாத்மா இப்போழ்து பூர்வகர்மாநு குணமாகிய பலங்களை யநுபவித்து மயங்கியுறங்கும், எனது மாயை மிக வளர்ந்து மகிழ்ந்துவாழும். சு—(ஸாஹி இத்யாதி)—நல்வினை வாய்ந்ததைக்கண்டும், அதனைச் சேரவிடாமல் என்மாயை ஜீவாத்மாவைப் பொருளாசையின் பொருட்டுத் தீ வினையில் மூழ்கச்செய்து, அழிவுறுமாறு செய்யாதிருக்குமா? எ—(அநாத இத்யாதி)— நானெங்கும் நிறைந் தருகிலிருந்தும் மாயையின் மயக்குக் குள்ளாகி மயங்கி ஜீவாத்மா வானவன் என்னை இழந்து, நெடுங்காலஞ்சுழன்று ஸம்ஸாரவாஸனை மேலிட்டுக் காமத் தன்மையானுகிக் கதியற்றுத் தவிக்கின்றமையால், அவன் யாது செய்வான்? (பரிஹா ரார்த்தம்) என் தந்தை தர்மபாசத்தினல் கட்டுண்டு, கைகேயியின் வசப்பட்டவரும், விருத்தரும், புத்திரப்பிரேம முடையவரு மாதலின், நானிப்போது பிரிந்தமையால் உயிரைவிடாம லென்செய்வார். அ— (இதம்இத்யாதி)—ஜீவாத்மா இவ்வண்ணம் மதி மயங்கித் துன்பமடைகின்றமையால், அறம் பொருள்களைவிடக் காமமே சிறந்ததென வெண்ணுகின்றேன்; மஹாராஜர்பொருளிழக்கினும், தருமந் தவறினும், இவ்வண்ணம்

துன்புறு றென்று எண்ணுகின்றேன்; இவர் என்னைப் பிரிந்ததுபற்றி மிகவுந் துன்ப மடைந்தமையால், மக்களாசையறம்பொருளை விடச்சிறந்ததென உணர்கின்றேன். ௯— (கோஹி இத்யாதி) அகாரவாச்சியமாகிய பிரம்ஹத்தை யறிந்தவனாயிருந்தும் (வித்வாம் ஸமபிகர்ஷதி) என்கிறபடி காமத்தை யடக்க முடியாமல் மாயையிலுழன்று, வேண்டு மவைகளை யருள்செய் தளிக்கு மென்னை யாவன் விட்டுவிடுவான்? எவரும் விடார்க ளன்றோ? இவ்வண்ணம் பற்றாசை மிகவும் சிறந்ததாயிருக்க, என் தந்தை ஸத்திய வாக்கியத்தின் பொருட்டு, மிகவும் பிரியமுள்ள என்னை விட்டு விட்டாரன்றோ? இவ் வண்ணம் யாவன் புத்திரனை விட்டாவது ஸத்தியத்தைப் பாதுகாக்க விரும்புவான்? ௧௦—யாவனொருவன் ஸர்வசேஷியாகிய பரப்ரஹ்மம்போலவே நித்திய முக்தர்க ளுடன் கூடி, உயர்வற உயர்நலம்பெற்று, பரிபூர்ண ப்ரஹ்மாநந்தாநுபவம் பெற்று மகிழ்வானோ, ஆத்மாத்மீயர்களுடன் நம் பக்கலில் பரஸமர்ப்பணஞ் செய்த அந்த மஹாபுருஷனன்றோ ஸுகியாவான். ௧௧—உலகத்தார்களுடைய வயோதிகர்களான தந்தை முதலானோர் சிந்தாகுலர்களாகி, மைந்தர்களுக்கு இம்மையில் நன்மை செய்வதையே முதன்மையாகக் கருதுகின்றமையாலும், யானும் அவர்களது கர் மாநுகுணமான பல ப்ரதான ஸங்கல்ப முடையவனாகி யவர்க ளறியாவண்ணம் வேதா ரணியத்திடை புகுந்து, பரமயோகிகளுக்கும் வாங்மநஸாபரிச்சேத்யனாகி இருக்கின்ற மையாலும், ஸகல சேதநர்களும் விஷயபரர்களாகிப் பேரின்பத்தையிழந்து, பற்பல யோநிகளிற்பிறந்து வருந்துவதைக்கண்டு, அத்துயரம் தமக்கே நேர்ந்ததுபோலெண்ணி யவர்களுக்கு ஜ்ஞாநோபதேசஞ் செய்து நற்கதிபெறச் செய்யும் ஆசிரியனன்றோ, எல்லா வுலகத்திற்கும் முதன்மையாகிப் புருஷகாரஞ் செய்கின்றமையால், துறையா கின்றான். ௧௨—தன் பொருளையும், அஃதடியாக வந்த தருமங்களையும் விட்டு விட்டாயினும், யாவனொருவன் நிருபாதிகமாகிய மோக்ஷகாமத்தை யாவர்க்கு முண்டு பண்ணித் தானும் ஆசரிக்கின்றானோ, அவன் ராஜாதிராஜனாகிய ஸ்ரீகருடவாஹனனைப் போலவே புகழப்படுகின்றான். யாவனொருவன் அறம்பொருளின்பம் மூன்றினையும் விட்டு வீடளித்துக் காக்கவல்ல எம்மை யநுவர்த்தித்து நடக்கின்றானோ, அவன் எம் தந்தைபோலவே புகழப்படுகின்றான். ௧௩—சேதநர் கடை சேர்வதன்பொருட் டும், எம்மைச் சரணமடைவிப்பதன்பொருட்டும், ஆசாரியனுக்குச் சிறப்பு வாய்ப்பதன் பொருட்டும், இம்மாயை பரிணமித்தது. ௧௪—குணங்களின் பரிணாமபேதத்தால் விகாரப்பட்டு மயக்குகின்ற இம்மாயை நம்மால் பேரின்பமளித்தருள்செய் தளிக்கப் பட்ட முக்தர்களது பந்தியையும், ஆசாரிய ரூபமாய் அவதரிப்பித்தளித்த நித்யாம்ச சேதனர்களையும் வருத்தாதன்றோ? ௧௫—நாம் நித்திய விபூதியை விட்டு லீலா விபூதியை யடைந்தோமாதலின், நித்ய ஸூரிகளது குழாமென்பொருட்டு ஒருகால் வருந்தினும் வருந்தும்; ஆதலின், நீயும் அர்ச்சிராதிவழியே சென்று வைகுந்தம் சேர்ந்து அவர்களை மகிழ்விக்கக் கடவை. ௧௬—நானொருவனே பூமகளுடன் இவ் விபூதியில் சில்நாள் வாழ்ந்து மீளுகின்றேன்; இப்பொழுது நாமிங் கிருக்கின்றமை யால், நாதனற்ற நித்யவிபூதிக்கு நீயே நாதனாகிச் செல்லக் கடவை, அன்றியும், நான் லோகாலோகசீரனாகிப் பிராட்டியுடன் சஞ்சரிக்கின்றமையால், என்னுடைய ஸங்கல்பாதீ னமாகிய கர்மாநு குணமாக ஜநநமரணங்களி லுழன்றழியாவண்ணம் நீயே ரக்ஷகனாகிப் பாதுகாக்கக் கடவை. ௧௭—மாயை மிகவும் கொடுமையுடையதாதலின், நம் தொண் டர்களை மேன்மேலும் நீதிதப்பி வருந்தச்செய்யும்; அவ்வண்ணம் வருத்தாமல் நம் அடிய வர்களது திரளை ஆசாரிய யாதீநஞ் செய்து பரஸமர்ப்பணஞ் செய்யும்படி செய்து பாது காக்கக்கடவை. ௧௮—முற்பிறப்பில் நம் தொண்டர்கள் மிகக் கொடிய தீவினைகள் செய்தமையால், இப்பிறவியில் அதன் பயனை யநுபவிக்கின்றனர்கள். ௧௯—நெடுநா

ளாகப் பிறவிகள் தோறும் நம்மைத் தொழுது, நம்மையே நினைந்து நம்பியிருந்தபோதி லும், கர்மசேஷத்தால் பரந்யாஸம் செய்யாமையால், அந்திமஸ்மரணமின்றிப் பலன் கைகூடுங் காலத்தில் நம்மை இழந்தனர்கள்; ஸித்த ஸங்கல்பத்துக்குப் பங்கம் வாரா மைக்காக யான் முத்தி கொடாமல் ஒழிந்தேன்; அதற்காக என்னையே நான் நிந்தனை செய்து கொள்ள வேண்டும். ௨௦—நான் ஸர்வசக்தனாயிருந்தும் அடுத்தவர்களையும் கடைத்தேற்று விக்காமல், ஸத்திய ஸங்கல்பாதீனமாய் கர்மாநுகுண பலன்களை யளித் து, ஏககாலத்தில் ஸர்வர்களுக்கும் முத்திகொடாமல் துன்பத்தையே விளைவிக்கின் றமையால், என்னைப்போன்ற பிள்ளையை இம்மாயை ஆசாரியனாகப் பெறுமால் அன்பு கூர்ந்தவனைப் பெறக்கடவள். ௨௧—அடா லக்ஷ்மணா! (மத்தஃ) என்னைக் காட்டிலும், (சாரிகா) பிரணவமாகிய வில்லினால் ஆத்துமாவாகிய சரத்தைப் பிரயோகஞ்செய்யும் ஆசிரியர்களது திரளே, பத்த சேதநர்களிடத்தில் மிகவும் அன்பு கூர்ந்ததென்று நம்பு கிறேன்; அஃது எம்மைச் சரணமடைந்து (ஹேசுக) கீரம்போன்ற பசிய திருமேனி யையும், இனிய திருவாய் மொழியையும் உடைய ஸ்ரீமந்நாராயணா! (அரேஃ) பிரஹ்மா நந்தம் பெறவிடாது தடைசெய்து சத்துருவாகின்ற இந்த ஸம்ஸாரத்தினுடைய (பாதம்) வேரை (தச) கண்டித்து நிவ்ருத்தி செய்தருள்க என்று, பரஸமர்ப்பணஞ் செய்யப்பட்ட வாக்கியம் இனிமையாகக் கேட்கப்படுகின்ற தன்றோ? ௨௨—சேதனர் கள் நல்வினையற்று வருந்துகையிலும், நான் அவர்களை நற்கதி யடைவிக்காம லிருக்கின் றமையால், என்னால் இவர்களுக் கென்ன உதவி செய்யப்பட்டதாயிற்று, ஒன்றுஞ் செய்யப்படவில்லையே! ௨௩—தொண்டர்கள் என்னை இழந்து மிக வருந்துகின்றன ராயினும், அவர்களது நல்வினை யற்பமாதலின், அதற்கு நாம் செய்யத்தக்கது யாது? ௨௪—நானொருவனே யாவரையும் முத்தி யடைவிக்கவும், அவர்களது தீவினைகளை மாய்க்கவும் வல்லேன்; ஆயினும், புருஷகார மின்றி ஸித்த ஸங்கல்பத்துக்கும் பங்க முண்டாக்கி, லீலாவிபூதிக்கும் இடையில் அழிவு செய்வது தகுதியன்றன்றோ? ௨௫— ஆதலின், என் ஸங்கல்பத்துக்குப் பங்கம் வராமைக் காகவும், மற்று மநேக காரணங்களுக்காகவும், நானிப்பொழுது யாவரையும் முத்தி யடைவிப்பேனென்று ஸங்கல்பித்திலேன். ௨௬—

இந்த ஐம்பத்து மூன்றாவது ஸர்க்கத்தி லிதில் குறித்த கணக்கின்படி சுலோ கத்தை முறையே பார்ப்பவர்களுக்கு, இக்கருத்து நன்கு பொருந்துமென்று மனமுகக் கும்; இதனால், ஆக்ஷேபத்திற்கும் ஸமாதானம் கண்டு கொள்க. இவ்வண்ணமே மேலும் பொருள் ஊஹித்துக்கொள்க. முன்னும் பின்னும் இவ்வண்ணமே எல்லா விடங்களிலும் பொருள்தோற்றும்; முக்கியமான இடங்களில் மாத்திரம் எடுத்துரைக் கப்படும்; முழுவதும் இவ்வண்ண முரைக்கப்புகின் மிக வளருமெனப் பயந்து மொழி யாது ஒழிந்தனம்.

---

## ஐம்பத்து நான்காவது ஸர்க்கம்.

சக்கரவர்த்தித் திருமகன் பரத்துவாஜர் ஆச்சிரமத்துக் கெழுந்தருளியது.

---

அநந்தரம் ஸீதையும் ராம லக்ஷ்மணர்களுமாகிய மூவர்களும், அந்தச் சிறந்த மரத்தடியிலே அன்றிரவைப்போக்கி, மறுநாளுதயமான பின்பு பிர்யாண மாகி கங்கையும் யமுனையும் கூடுகின்ற பிரயாகக்ஷேத்திரத்தை யுத்தேசித்துப்

புறப்பட்டுக் கடுங்கானகத்தி னிடையே சென்று, அதுவரையும் காணுத பற்பல விநோதங்களைக் கடாக்ஷித்துக்கொண்டு, குறையென்பது சிறிது மின்றிச் சூரியாஸ்தமன காலம் வரையும் சுகமாகக் கானகங்கடந் தெழுந்தருளினர்கள். மாலைப்பொழுதில் ஸ்ரீராமபத்திரர் இளையபெருமாளை நோக்கி, 'தம்பி, ஸுமித்திரா நந்தனு! இந்தப் பிரயாகக்ஷேத்திரத்தின் நாற்புறங்களிலும் ஹோமதூமம் மேலெழுந்து சூழ்ந்து விளங்குகின்றதுபார்; ஆதலின், இங்கு மஹாமுனிவர் எழுந்தருளியிருப்பாரென்றுஎண்ணுகின்றேன். கங்காயமுனநதிகளின்ஸங்கமஸ்தானம் வந்துவிட்டோம்; கங்கை யமுனைகளின் பிரவாஹம் ஒன்றேடொன்று தாக்கி மிக வொலிக்கின்ற சத்தம் மிக்க கம்பீரமாகக் கேட்கிறதல்லவா? வனத்திலுள்ள பொருள்களைக்கொண்டு ஜீவிப்பவர்களால் இங்குள்ள விருக்ஷங்களில் இதோ அநேகம் கட்டைகளும் வெட்டப்பட்டிருக்கின்றனபார்; இங்கு பரத்துவாஜர் ஆச்சிரமமென்று கேட்டிருக்கின்றேமே; இம்மரங்கள் அவரது ஆச்சிரமத்தில் சேர்ந்தனவேயாம்' என்றனர். இவ்வண்ண மருளிச்செய்துகொண்டே சூரியாஸ்தமயகாலத்தில் பரத்துவாஜர் ஆச்சிரமத்துக் கருகில் கங்கை யமுனைகளின் ஸங்கமஸ்தானம் போய்ச் சேர்ந்தனர். பிறகு தம்மைக்கண் டங்குள்ள விலங்குகள் அஞ்சும்படியாக அங்கிருந்து அவர்கள் சிறிதுதூர மெழுந்தருளி ஸீதையுடனே அவ்வாச்சிரமத்தி னுட்புகுந்து அம்முனிவரைக் காணவேண்டிச் சிறிது தூரத்திலேயே நின்றூர்கள்.

அப்பால், ஒரு சீஷரை முன்னிட்டுக்கொண்டு அநேக சிஷ்ய ஜனங்களால் சூழப்பட்டு வீற்றிருக்கின்ற அந்தப் பரத்துவாஜமகா முனிவரருகிற் சென்று அவரைக் கண்டு ஸ்ரீராமன் பத்தியுடன் கைகுவித்துக்கொண்டு ஸீதாலக்ஷ்மணர்களுடன் தண்டம் ஸமர்ப்பித்தனர். அம்முனிவர் தவத்தின் மகிமையால் முக்காலமு முணர்ந்த மஹாயோகி. ஸ்ரீராமபிரான் அவரை நோக்கி, 'மாதவச் செல்வரே! நாங்களிருவரும் தசரதசக்கரவர்த்தியின் குமாரர்கள்; இவள் அடியேனுடைய பத்தினி; ஜனகமஹாராஜர் புதல்வி; அடியேன் தந்தையின் கட்டளைப்படி வனவாஸம் புறப்படுகையில், இவ்விருவரும் என்னைப் பிரியோமென்று உடன்தொடர்ந்து வந்தார்கள்; ஆதலின், நாங்கள் மூவரும் தபோவனஞ் சேர்ந்து, கந்தமூலபலங்களைப் புசித்து, வைகானஸதர்மத்தையே அநுஷ்டித்து வாழ வந்தனம் என்று விண்ணப்பஞ் செய்தருளினர். பரத்துவாஜமஹர்முனிவர் ஸ்ரீராமனது அருளிச்செயலைக்கேட்டு மகிழ்ந்து, அவர்களுக்கு அர்க்கியபாத்யம் முதலியவைகளும், மதுபர்க்கத்திற்காகப் பசுவும், ஆகாரத்திற்காகக் கந்தமூலபலாதிகளும் வரவழைத்து வாஸத்திற்கு விடுதியும் ஏற்படுத்திக்கொடுத்து, அவர்களை யேற்றபடி உபசரித்துப் பூஜித்தனர். மிருகபக்ஷிகளுடனும், மற்றுமுள்ள முனிவர்களுடனும் வீற்றிருந்து அம்முனிவர் அளித்த அப்பூசனைகளை விநயத்துடன் பெற்றுக்கொண்டு சக்கரவர்த்தித் திருமகன் ஸீதா லக்ஷ்மணர்களுடன் அம்மஹாமுனிவரது ஆஜ்ஞையால் வீற்றிருந்தருளினர். பிறகு பரத்துவாஜமஹாமுனிவர் ஸ்ரீராமபிரானை நல்வரவு விசாரித்து 'ஸ்ரீராமசந்திரா! நீ இவ்விடம் வருவது மிகவும் அருமையன்றே? உன்னை அகாரணமாய்க் காட்டுக் கனுப்பிய செய்தியை யான் முன்னமே

கேள்வியுற்றேன். இரண்டு நதிகள் சந்திக்கின்ற இவ்விடம் மிகவும் ஏகாந்தமாயும், மனோஹரமாயும், புண்ணியகரமாயு மிருக்கின்றமையால், இவ்விடத்திலே வஸிக்க விருப்பமாயின், இங்கேயே நீங்கள் சுகமாகவஸிக்கலாம்' என்று அருளிச்செய்தனர். கௌஸல்யா நந்தனரும் அம்மஹாமுனிவரை நோக்கி 'குலபதியாகிய மஹாயோகி! இவ்வாச்சிரமம் நாட்டிற் கருகி லிருக்கின்றமையால், இவ்விடத்திற்கு அடிக்கடி அடியோங்களைக் காண்பதன் பொருட்டு, நாடு நகரத்தோர்கள் வந்து சேர்வார்கள். ஆதலின், இவ்விடத்தில் வாஸஞ் செய்வது உசிதமெனத் தோற்றவில்லை; பிறர் புகவொண்ணாமை லேகாந்தமான விடம் யாதோ அதனை யருளிச்செய்யக்கடவீர். என் மனையாள் மிகவும் சுகமாக வாழ்வுற்றவ ளாதலின், அவ்விடம் இவள் மகிழ்வுறத்தக்கதாக இருக்க வேண்டுகிறேன்' என்று விண்ணப்பஞ்செய்தருளினர். இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்த சக்கரவர்த்தித் திருமகனார் வாக்கியத்தைப் பரத்துவாஜமஹாமுனிவர் திருச்செவிசார்த்தி யவரைநோக்கி, 'ஸ்ரீராமபத்திரா! அங்ஙனமேயாகுக; இவ்விடத்திற் கிரண்டுயோஜனை தூரத்தில் மிகவும் புண்ணியகரமாகி, ரிக்ஷ வாநர கோலாங்கூலாதி மிருகங்களாலும், தேவ கந்தருவ கின்னராதிகளாலும், ஹம்ஸ பரமஹம்ஸ வானப்ரஸ்த்த வைகானஸாதி முனிகணங்களாலும் சூழப்பெற்றுள்ளதாயும், கந்தமாதந மலைபோன்றதாயு மிருக்கின்ற சித்திரகூடமென்னு மோர் மலையிருக்கின்றது; அதில் நீங்கள் ஏகாந்தமாக வாழ்ந்து மகிழ்வுறலாகும். அந்தச் சித்திர கூடத்தின் சிகரங்களை எப்பொழுதொருவன் கண்டு களிக்கின்றனனோ, அது முதல் அவன் நல்வினையையே செய்வா னல்லது, தீவினை செய்யான்; அவன் மனமும் பாவச்செயலில் செல்லாமல் நிலைபெற்றிருக்கும். அவ்விடத்தில் அநேக மகாயோகியர் நெடுங்காலந் தவஞ்செய்து நிர்யாணதசையில் பிரஹ்மநாடிமுகமாய்ப்புறப்பட்டு முத்தியடைந்திருக்கின்றார்கள். அவ்விடம் நீங்கள் வாசஞ்செய்யத்தக்க ஏகாந்தஸ்தலமென்று நினைக்கின்றேன். இல்லையாயின், இவ்விடத்திலேதானே என்னுடன் கூடி வாழ்ந்து மகிழக்கடவையென் றருளிச்செய்து, மிகவும் பிரியமுள்ள அதிதியாதலால், அவர்களுக்குவேண்டும் பதார்த்தங்களைக்கொண்டு பலவிதமாக உபசாரஞ்செய்து கொண்டாடி யருளினர். பிறகு பற்பல கதைகளை மஹாமுனி யருளிச்செய்துகொண் டிருக்கையில், மாலைப்பொழுது கழிந்து இரவு நேர்ந்தது; ஸ்ரீராமசந்திரர் ஸீதா லக்ஷ்மணர்களுடன் அன்றிரவைச் சுகமாக அவ்வாச்சிரமத்திற் போக்கிப் பொழுது விடிந்தவுடன் எழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு, பரத்துவாஜமாமுனிவர்க்குத் தண்டம் ஸமர்ப்பித்து அவரை நோக்கி, மாதவச்செல்வரே! தேவரீருடைய இந்த ஆச்சிரமத்தில் இன்றிரவைச் சுகமாகப் போக்கினோம்; பொழுது விடிந்தமையால், சித்திரகூடாச்சிரமத்திற்குச் செல்ல அநுஜ்ஞைசெய்தருள்கவென்று விண்ணப்பஞ் செய்தருளினர். பரத்துவாஜ முனிவரும் ஸ்ரீராமசந்திரரை நோக்கி, கௌஸல்யா தேவி குமாரா! தேன் காய் கனி கிழங்குகளுடன் கூடி யழகிய சித்திரகூடத்திற் கெழுந்தருளக்கடவீர்; அஃது நீங்கள் வாஸஞ்செய்வதற்கு ஏற்றவிடமாகும். அஃது தளிர்த்து மலர்ந்து காய்த்துப் பழுத்துச் செழித்த நாநாவித

மான விருக்ஷங்கள் அடர்ந்ததும், கின்னரோரகாதிகள் உறையப் பெற்றதும், யானை புலி சிங்கம் கரடி மான் முதலிய மிருகங்கள் சூழப்பெற்றதும், பற்பல பறவைகள் பாடப் பெற்றதுமாகி மிகவும் அழகிய சிகரங்களை யுடைய தாய்ப்புகழ்பெற்று விளங்குகின்றது; மேலும், அது பாவங்களைத்தீர்ப்பதும், புண்ணியந்தருவதும், கண்ணுறத்தக்க நீர்வளம் நிலவளம் பொருந்தியதுமாம்; யானைக் கூட்டங்களாலும் மான் கூட்டங்களாலும் எங்கும் ஸஞ்சாரஞ் செய்யப்பெற்று, காறு சுனைநீர்பெருகிய தாழ்வரையுடையதாய், கற்பிளவு பள்ளம் குகை முதலிய கம்பீரஸ்தலங்களுடையதாக விளங்குவதைக் கண்டு, ஸீதாபிராட்டியுடன் நீர் சந்தோஷமடைந்து வாழ்வீர். ஆதலின், மகிழ்ச்சி கொண்ட நாரை குயில் முதலிய பறவைகளி னொலிபொருந்தி, மான், மதங்கொண்ட யானை முதலிய விலங்குகளால் சூழப்பட்டுள்ள அந்தச் சித்திரகூட மலைசேர்ந்து, சுகமாக மகிழ்ந்து வாழ்ந்திருக்கக் கடவீரென்று அருளிச் செய்து அநுமதி யளித்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாவதுஸர்க்கம்.

பெருமாள் பரத்துவாஜாச்சிரமத்தினின்றும் யமுனைத் துறை போய்ச் சேர்ந்தது.

---

பெருமாளிளையபெருமாளிருவரும், அந்தப்பரத்துவாஜர் ஆச்சிரமத்தில் அன்றிரவு ஸுகமாக வாஸஞ்செய்து, மறுநாளுதயகாலையி லெழுந்து, நித்ய கருமங்களை விதிப்படி முடித்துப் பரத்துவாஜமஹாரிஷிக்குத் தண்டம் ஸமர்ப்பித்து விடைபெற்றுச் சித்திரகூடகிரியை நோக்கிப் புறப்பட்டனர். அப்பொழுது அங்குள்ள பல முனிவர்களும் அவர்களுடன் புறப்பட்டனர்; தந்தை தன் மக்களுக்குப் போலப் பரத்துவாஜமஹாரிஷி அவர்களுக்குப் பிரியவசனமருளிச்செய்து வாழ்த்தி விடைகொடுத்துச் சக்கரவர்த்தித் திருக்குமாரர்களை நோக்கி உரைக்கின்றனர்: 'ஸ்ரீராமலக்ஷ்மணர்களே! இங்கெதிரில் கங்கை யமுனைஇரண்டு நதிகளுங் கூடுகின்றனவே; அங்குச்சென்று யமுனையின் கரை பற்றி, அங்கிருந்து குடதிசை நோக்கி செல்லக் கடவீர்கள். கடையில் பலர் நடந்து தேய்ந்த யமுனைத் துறைசேர்ந்து, தெப்பங்கட்டி அதன்மீ தேறிச் சென்று அக்கரை சேருக; அங்குப் படர்ந் துயர்ந்து பருத்துக் கறுத்துத் தழைத்துள்ள ஆலமரமொன்று உளது; அதனடிசேர்ந்து சீதை அதனை நோக்கிக் கைகுவித்து விருப்பங்களை வேண்டிக்கொள்ளக்கடவள். அவள் நடந் திளைப்பினை யுற்றவளாயின், அதனடியில் உட்கார்ந்து இளைப்பாறலாம்; இலளாயின், முன்வழிபற்றி நடந்து செல்லலாம். அங்கிருந்து ஒரு குரோச தூரத்தில், இருண்டு தழைத்த கானகத்தைக் காண்பீர்கள். அஃது யமுனை நீர் பாய்ந்து வளர்ந்தமையால், மிகக் கறுத்து, பலாசு இலந்தை முதலிய பல

வகை மரங்கள் நிறைந்திருக்கின்றது; அதுவே சித்திர கூடத்திற்குக் கல்கர டற்று மெதுவாயுள்ள நல்வழி; யானும் அவ்வழியால் பலமுறை சென்றிருக் கின்றேன்' என்றிவ்வண்ணம் சிறிதுதூரம் பின்சென்று நல்வழிகாட்டியருளி னூர். அவ்வண்ணமே செய்வோமென்று பெருமாள் தண்டம் ஸமர்ப்பித் துத் திருவுள்ளம் பற்றி விடைகொண்டு அம்முனிவரை திரும்பிச் செல்லும் படி வேண்ட, அவரும் அங்ஙனமே திரும்பி எழுந்தருளினூர்.

பின்பு பெருமாள் இளையபெருமாளை நோக்கி, லக்ஷ்மணு! நமது பாக்கி யமே பாக்கியம்; நாம் முற்பிறப்பில் மிக நல்வினைசெய்தனம்; இம்மஹாமுனி வர் நம்பால் மிக அருள்புரிந்து, இவ்வண்ண மருளிச்செய்தன ரல்லரோ! என் று கூறி மகிழ்ந்து புகழ்ந்து, பிராட்டியாரை முன்னிட்டுத் தாங்கள் பின்னெ ழுந்தருளி, கங்கையின் தடையினுல் தேம்பி மேலெழாமல் விரைவாகப் பெரு கும்அந்த யமுனையின் துறைசேர்ந்தனர். ஆங்கு அந்நதியைத் தாண்டும் வகை யைச் சிந்தைசெய்து, அவ்விடத்தில் முறிந் துலர்ந்துகிடந்த கட்டைகளையும் கோரைநெட்டி முதலியவைகளையும் கொணர்ந்து தெப்பமாகக் கட்டினூர்கள்; நீர் வஞ்சித் தழைகளையும், நாவலின் தழைகளையும் அதன்மீது பரப்பி இலக்கு மணர் பிராட்டிக்கு ஆஸனம் போட்டுச் சித்தஞ்செய்தனர். உடனே பெருமாள் பெரியபிராட்டிபோன்ற பெருமைபெற்றவளாயினும் வெட்கத்தினுல் சற்றுத் தலைகுனிந்து நின்ற ஸீதாபிராட்டியைக் கைபிடித்துத் தெப்பத்திலேற்றினூர். பிறகு பிராட்டியாரருகில் ஆடையாபரணங்களையும் ஆயுதங்களையும் மண்வெட் டி புட்டில் முதலிய கருவிகளையும் வைத்தருளி இளையபெருமாளுடன் கூடி, அந்தத் தெப்பத்தைப்பற்றி ஊக்கத்துடன் நடாத்தி யக்கரைசேர்ந் தரு ளினர். பிராட்டியார் அந்தயமுனூநதியினிடையிற் செல்லுகையில், அந்நதிக்கு வந்தனஞ்செய்து அதனைநோக்கி, அம்மா, காளிந்தி! உன்னை யான் தாண்டிச் செல்லுகின்றேன்; உனக்கு மங்கல முண்டாகக் கடவது. என் பிராணநாதர் எளிதாக விரதத்தை முடித்துக் கரைசேர்ந்து மீண்டெழுந்தருளக்கடவர். என் கணவர் மீண்டு திருவயோத்தி சேர்ந்து மகிழ்ந்து வாழ்வராகில், உன்பொருட்டு யான் ஆயிரம்கோதானம் செய்து, ஆயிரங்குடம் சாராயத்தால் யாகமும் செய்விப்பேன் என்றிவ்வண்ணம் வேண்டிக்கொண்டே சென்றனர்.

அந்நதியின் தென்கரை சேர்ந்தவுடன் தெப்பத்தை விட்டிறங்கி, அக் கரையிலுள்ள கடுங்கானத்திடையே யெழுந்தருளி, பரத்துவாஜமஹாரிஷி சுட்டிக்காட்டி யருளிய செழித்துத் தழைத்துக் குளிர்ந்து கறுத்திருண்டு நீண்ட ஆலமரஞ்சேர்ந்தனர். அதனைப் பிராட்டி நோக்கி, சிறந்தமரங்களுக் கரசே! உன் பொருட்டு வந்தனஞ்செய்கின்றேன்; என்பர்த்தா விரதக்கடலின் கரைசேரக்கடவர். யானும் அவருடன் மீண்டு திருவயோத்தி சேர்ந்து, கோ ஸலையாரையும், ஸுமித்திரா தேவியையும் கண்டு களிப்புறக்கடவேன்; இவ் வண்ணம் நீ யருள்செய்க என்று கைகுவித்து வேண்டி வலம்வந்து நின்ற னர். அப்பொழுது பெருமாள் இளையபெருமாளை நோக்கி தம்பீ! நீ ஸீதைக்கு முன் செல்க; இவளிடையில்வருக; யானிருவருக்கும் பின் நடந்து பாதுகாத்து வருவேன்; நடுவழியி லிவள் தளிர் பூ காய் கனி முதலியவைகளைக்கண்டு

விருப்புற்றுக் கேட்பாளாயின், உடனே அவைகளைக் கொணர்ந்து அளிக்கக்கடவையென்று ஆஞ்ஞைசெய்தனர். அவ்வண்ணமே அவ்விருவருக்கு மிடையே பிராட்டி எழுந்தருளுகையில், மதயானைகள் இரண்டினடுவிற் செல்லும் யானைப் பேடுபோல விளங்கினாள். அவ்வாறு செல்லுகையில், பிராட்டி தாம் அதுகாறுங் கண்ணுறாத மரஞ்செடி பூ கனி காய்களைக்கண்டு விரும்புற்றுக் கேட்பாள்; இளையபெருமாள் உடனே அவ்வவ்வஸ்துக்களைக் கொணர்ந்து ஸமர்ப்பித்து மகிழ்விப்பார். அன்றியும் ஸீதாபிராட்டியார், பற்பல மணற்குன்றுகளையுடையதும், ஹம்ஸம்ஸாரஸம் முதலிய நீர்ப்பறவைகளொலிக்கப்பெற்றதுமாகிப் பெருகிவருகின்ற காளிந்தி நதியினையும், கரையிலுள்ள பற்பல விநோதங்களையுங்கண்டு மிகவு முளமகிழ்ந்தனர். இவ்விதமாக இரண்டுநாழிகை வழித்தூர மெழுந்தருளி பெருமா ளிளையபெருமா ளிருவரும் தூய்மையுள்ள பலமிருகங்களை யடித்தெடுத்துக்கொண்டு மயிலினங்க ளாடவும், வாநர வாரணாதிகளான விலங்குகள் உலாவவும், மணங்கமழ்ந்து குளிர்ந்துள்ள அந்த யமுனாநதியின் தீரத்தில் மேடுபள்ள மின்றிப் பிராட்டியார்க் குவப்பாயுள்ள ஓரிடத்திலிறங்கி இன்புற்று மகிழ்ந்தார்கள்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தாறுவதுஸர்க்கம்.

### பெருமாள் சித்திரகூடத்திற் கெழுந்தருளியது.

அவ்விடத்தில் அன்றிரவு சுகமாக நீங்கியது; பொழுது விடிந்து கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைகையில் பெருமாள் துயிலெழுந்தனர். துயிலின்றிப் புறத்தில் விழித்துக் காத்திருக்கும் இளையபெருமாள், அப்பொழுது தான் சற்றுக் கண்ணயர்ந்ததுபோ லிருந்தனர். பெருமாள் அவரை மெல்ல, எழுப்பி, லக்ஷ்மணா! இக்கானகத்திலுள்ள பறவை விலங்கு முதலியயாவுந்துயிலுணர்ந்து காலையில் இனிது கூவுகின்றனவே; நாம் புறப்பட்டு வழிநடக்கும் வேளை வந்துவிட்டதல்லவா? நாம் புறப்பட்டுச் செல்வோம்.—என்றனர்.

స సుప్తస్సమయే భ్రాత్రా లక్ష్మణః ప్రతిబోధితః।
జహౌ నిద్రాఞ్చ తన్ద్రీఞ్చ ప్రసక్తఞ్చ పథిశ్రమం॥

* ஸஸுப்தஸ்ஸமயேப்ராத்ரா லக்ஷ்மணஃப்ரதிபோதிதஃ।
ஜஹௌநித்ராஞ்சதந்த்ரீஞ்ச ப்ரஸக்தஞ்சபதிச்ரமம்॥

---

* (ஸஸுப்தஃ) என்னும் சுலோகத்திற்குச் சிலர் இளையபெருமாள் இப்பொழுது துயில் கொண்டதாகவும், பெருமாள் எழுப்ப விழித்துத் துயில்நீங்கிய தாகவும், பொருள் கூறுகின்றனர். அஃது ஒருபொழுதும் ஒவ்வாது: இந்தக் காண்டத்தில் ஐம்பத்தோராவது ஸர்க்கத்தில், குஹப்பெருமாள் இளைய பெருமாளைத் துயிலும்படி வேண்டு

தாம் அவதாரஞ்செய்தருளின பிரயோஜனத்தை மறந்துறங்கிப் பெருமாளுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய முயன்ற இளையபெருமாள், தமது அவதாரத்தின் பிரயோஜனத்தைக் கடுக முடிக்கத் திருவுள்ளம்பற்றிக் கைகேயியை வியாஜமாகக்கொண்டு திருவயோத்தியை விட்டுக் காடேற வெழுந்தருள நிச்சயங்கொண்டகாலையிலே பெருமாளால் அறிவுறுத்தப்பட்டவராகி, அப்பொழுதே துயிலையும், உணவினையும், மோகத்தையும், சோம்பலையும், கோபத்தையும், வனவாஸத்திற்றோன்றும் புல்லிய வருத்தத்தையும், நிரந்தர கைங்கர்யலாபமாகிய மஹாநந்தக்கடலில்மூழ்கிமகிழப்போகின்றமையால், கனவிலுங் காமுறுது பற்றற விட்டுவிட்டவரன்றோ? ஆதலின், முன்னடக்க ஸந்நத்தராயினர். உடனே எல்லோரும் எழுந்து, யமுனாநதியிலேயே ஸ்நாநஸந்திகளைமுடித்துக்கொண்டு, பரத்துவாஜமஹாமுனிவர் சுட்டிக்காட்டிய நல்வழிபற்றிச் சென்றனர். செல்லுகையில், பெருமாள் பிராட்டியைநோக்கிக் கூறுகின்றனர்: ‘பாரடீ வைதேஹீ! இப்பலாசமரங்கள் நாற்புறங்களிலும் மலர்ந்த பூக்கள் நிரம்பச் சூழ்ந்தொளிர்கின்றமையால், காட்டுத்தீப்பற்றி எரிகின்றவைபோலக் காணப்படுகின்றன; அன்றியும், இவ்விடம் மானிடசஞ்சாரமற்றதாதலின், இங்குச் செராய்மரங்களும் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துத் தழைத்திருக்கின்றன; இக்கனிகளைப் புசித்து யான் காலத்தைப் போக்கிப் பிழைக்கவல்லேன். அன்றியும், மரங்கள்தோறும் இரண்டு மரக்காலளவுள்ள தேனடைகள் தேனீக்களால் கட்டப்பட்டுத் தொங்குகின்றன காணாய். நச்சுக்குருவி இங்குக்கூவுகின்றது; மயிலங்கு அதற்குப் பிரதியாகக் கூவுகின்றது; இவ்வரணியம் எங்கும் மலர்ந்து மணங்கமழ்ந்து வீசுகின்றது; காட்டு யானைக்கூட்டங்கள் சூழ்ந்து, பற்பல பசுபக்ஷி மிருகங்களொலிக்க, உயர்ந்த சிகரங்களுடனே விளங்கும் இந்தச் சித்திரகூடகிரியையுங் கண்ணுற்று மகிழ்வுறுயென் றருளிச்செய்தனர். பிறகு இளையபெருமாளை நோக்கி, இளையோனே! நாம் இம்மலைமிசை மேடுபள்ளமின்றிப் பற்பல மரங்கள் தழைத்துக் குளிர்ந்துள்ள விடத்திலே வாசஞ்செய்வோமென் றருளிச்செய்துகொண்டே நடந்தெழுந்தருளினர்.

அப்பால் அந்தச் சித்திரகூடகிரிசேர்ந்து, அதனழகினைக் கடாக்ஷித்து, மீளவும் இளையபெருமாளைநோக்கிக் கூறுகின்றனர். லக்ஷ்மணா! இவ்விடம் பற்பலசெடி கொடி பூண்டுகள் சூழப்பெற்றதாகி, பலவகைக் காய் கிழங்கு கனிகள் நிறைந்து குளிர்ந்து ருசியுள்ள நன்னீர் பொருந்தி இருக்கின்றமையால், இங்குச் சுகமாக வாழ்ந்து மகிழ்ச்சியுறலாகுமென்று எனக்குத்தோற்று

---

கையில், அதற்கிவர் (கதந்தாசரதௌ பூமௌ சயாநேஸஹஸீதயா। சக்யா நித்ராமயா லப்த்துஞ் ஜீவிதம்வாஸுகாங்க்ஷிவா) என்று தொடங்கி, பெருமாள் பிராட்டியுடன் தரையில் படுத்திருக்கையில், நானெவ்வண்ணந் துயில் கொள்வேனென்று புலம்பி விழித்திருந்ததாகவே அருளிச்செய் திருக்கின்றமையாலும், பதினான் காண்டு துயிலுணவற்றவனல்லது மற்று யாவராலும் தனக்குக் கொலை நேரற்கவென்று இந்திரஜித்து வரம்பெற்றிருந்ததாகவும், இளையபெருமாள் அவ்வண்ண மிருந்தமையாலே அவனைக் கொலை செய்ததாகவும்மேல் உத்தர காண்டத்தில் இருக்கின்றமையாலும், இந்தச் சுலோகத்திற்கு நாம் எழுதியவண்ணமே பொருள் கொள்ளல் வேண்டுமென்றுணர்க.

கின்றது. இம்மலையில் பல மஹா முனிவர்களும் வாசஞ் செய்கின்றனர் களாதலின், இவ்விடத்திலேயே வாசஞ்செய் தின்புறுவோமென் றருளிச் செய்தனர்.

பின்பு ஸீதா ராம லக்ஷ்மணர்கள் மூவரும், அங்கிருக்கின்ற வான்மீகி மஹா முனியி னாச்சிரமத்தைக் கண்டு கைகுவித்துக்கொண்டு அதனுட்புகுந்து அந்த மஹாரிஷியைக்கண்டு தண்டம் சமர்ப்பித்தனர். வான்மீகி மஹாயோகி இவர்களுக்கு அர்க்கியபாத்யாதியாகவுள்ள உபசாரங்கள் செய்து, ஆஸநம் அளித்து உட்காரும்படி யநுமதி யருளிச்செய்து நல்வரவு வினவி யருளினர். பெருமாளும் அம்மஹாரிஷியை நோக்கி, மாதவச் செல்வரே! அடியேன் தசரத சக்கரவர்த்தியார் குமாரன், இவள் என் பத்தினி, இவன் அடியேனுக் கிளையோன். அடியேன் ஸபத்நீ மாதாவின் வரங்களிரண்டினையும் பூர்த்தி செய்து பிதாவை ஸத்தியவாதியாக்கி, தன்னியனாக வேண்டுமென நினைத்துக் காடேறப் புறப்பட்டேன்; இவர்களும் அடியேனை விட்டுப் பிரிய மனமின்றித் தொடர்ந்து வந்தனர்கள். ஆதலின், அடியே னிவ்விடத்தில் சிலநாள் வாஸஞ் செய்ய விரும்புகின்றேனென்று விண்ணப்பஞ் செய்தனர். அம்மஹாமுனி வரும் அங்ஙனமே அனுமதி யளித்தனர். பிறகு ஸ்ரீராமபிரான் இளைய பெருமாளை நோக்கி,

ల క్ష్మణానయ దారూణి దృఢానిచవరాణిచ।
కురుష్వావసథంసౌమ్య వాసేమేభిరతమ్మనః॥

* லக்ஷ்மணாநய தாரூணி த்ருடாநிசவராணிச |
குருஷ்வாவஸதம்ஸௌம்ய வாஸேமேபிரதம்மந: ||

லக்ஷ்மணா! சிறந்தனவென விதிக்கப்பட்டனவும், வலிமை யுள்ளனவு மாகிய கழிகளைக் கொணர்ந்து பர்ணசாலை யியற்றக்கடவை; பர்ணசாலையில் வாஸஞ்செய்ய என்மனம் விருப்புற் றிருக்கின்றதென் றருளிச் செய்தனர். உடனே இளையபெருமாள் பற்பல மரங்களைக் கொணர்ந்து ஆங்கு முறைப் படி பர்ணசாலை யியற்றினர்: ஆழக் கல்டகால் வெட்டி அஸ்திவாரம் போட்டுச் சுவர் வைத்து, வாசற்கால் தூண் முதலியன நிறுத்திச் சரந்தூலம் முதலியன

* 'லக்ஷ்மணாநய' என்னுஞ் சுலோகத்தின் கருத்துரை.

1. அடா லக்ஷ்மணா! (த்ருடாநிச) வலிமைதங்கி நெடுங்காலம் அழிவற்றிருக்கத் தக்கனவும், (வராணிச) யாவரும் மகிழ்ந்து புகழ்ந்து பணிந்து ஆச்ரயிக்கத்தக்க நல்வினை யுள்ளனவுமாகிய, (தாரூணி) கர்மசேஷத்தால் பிரகிருதியுள் லீனமாய்க் கட்டைபோலச் செயலற் றிருக்கின்ற சேதன விசேஷங்களை, (ஆநய) என் கடாக்ஷத்திற்குப் பாத்திர மாகும்படி திருத்திக்கொணர்வாய்; (ஆவஸதம்) தத்ததநுகுணங்களான பிரஹ்மக்ஷத்திரிய-வைசிய ஸூத்ராதி பரிணதசரீர விசேஷங்களை, (குருஷ்வ) இயற்று; (மேமந:) என்மனம் (வாஸே) தததநுப்ரவேசத்தில், (அபிரதம்) மிகவும் விருப்புற்றிருக்கின்றது என்பதாம்.

மேலெடுத்து வலிமையாகக் கட்டித் தழை நிறைத்து இலக்குமணர் அதனை நன்கு கட்டிமுடித்தனர். அந்தப் பர்ணசாலையைக் கடாக்ஷித்து மகிழ்ந்து பேரருளாளன் இளையபெருமாளை நோக்கி, தம்பி! வாஸ்துஹோமஞ்செய்ய மான் மாமிசங் கொண்டுவருக; நெடுநாள் வாழ்வுறக் கருதுபவர்கள் வாஸ்து ஹோமஞ் செய்வது கடமையன்றோ? ஆதலின் விரைவாக ஒரு மானை யடித்துக் கொண்டுவா; இவ்வண்ணஞ் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட் டிருக்கின்றமையால், இவ்விஷயத்தில் நம்மைப் பாவ மணுகாது; நீயும் முன்னூலை நன்காராய்ந்து உணர்ந்தவனே யன்றோ என் றருளிச்செய்தனர். தம் கட்டளைப்படி உடனே மாம்ஸங் கொணர்ந்த தம்பியை நோக்கி அவர்மீளவும், அடா, லக்ஷ்மணா! நாம் கிருஹப்பிரவேசஞ் செய்வதற் குரிய நல்ல முஹூர்த்தமும் தெய்வ வசமாகக் கூடியிருக்கின்றமையால், விரைவாக இம் மாம்ஸத்தைப் பாகஞ்செய்க; வாஸ்து ஹோமஞ் செய்வோமென் றருளிச்செய்தனர்.

இளையபெருமாள் உடனே தீயைவளர்த்தி அதனிடையில் அந்தக் கறுப்பு மான் மாம்ஸத்தை நன்கு சமைத்தனர். அஃது பக்குவ மானவுடன் ஸ்ரீராமபிரானை நோக்கி, எம் மையனே, இந்தக் கறுப்புமானினது மாம்ஸம் சிவப்புற்றிருக்கினும், நன்ருகப் பக்குவ மானமையால் முன்போலவே கறுப்புற்று விளங்குகின்றது; தேவரீர் வாஸ்துஹோமஞ் செய்யக்கடவீர்; தேவரீரே அதனை நன் குணர்ந்தவரென்று விண்ணப்பஞ் செய்தனர். பெருமாளும் அம்மொழி கேட்டு, நீராடி நியமந்தரித்து, அதற்குரிய மந்திரங்களை ஜபித்து, சுருக்கமாக அந்தச்சடங்குகளை யெல்லாம் முடித்து, கிருஹ தேவதைகளைக் குறித்து ஹோமஞ்செய்து மன மகிழ்ச்சியுடன் கிருஹப் பிரவேசஞ் செய்தருளினர். பிறகு வைசுவதேவஞ் செய்தருளி, ருத்திரபலியும், வைஷ்ணவ ஹோமமுஞ் செய்து கிருஹபீடைகளைப் போக்கவல்ல சாந்திகளையும், நன்மை பயக்கவல்ல புண்யாஹவசனம் முதலிய மந்திரங்களையும் அநுஸந்தித்து, விதிப்படி ஜபமுஞ் செய்தருளினர். விதியின்படி ருத்திரனைக் குறித்து ஹோமஞ் செய்தமையால், அந்த அசுசி நீங்குமாறு மீளவும் நதியில் ஸ்நாநஞ் செய்தருளி, பாவங்கள் தொலையத்தக்க பலியினையும் நிறைவேற்றி, ஆச்சிரமத்திற்குத் தக்க

---

இதனல் திருவநந்தாழ்வானை ஸ்ரீபாஷியகாரராக அவதாரஞ்செய்து விசிஷ்டாத்வைதமதஸ்தாபனஞ்செய்து, அநேகம் ஆசிரியர்களை ஏற்படுத்தி, அவர்களிடத்தும் தாம் அநுப்ரவேசித்து, மூடர்களைத் திருத்திப் பணிகொண்டு, பேரின்பமளித்து ஸம்ஸாரக் கடலின் கரைசேர்க்க ஸங்கற்பமுடையவன் பேரருளாளனென்பது நன்குவிளங்கும்.

2. (த்ருடாநி) வலிமையுள்ளனவும், (வராணிச) பின்னமாகாமல் அர்ச்சாரூபமாக வெழுந்தருளப்பண்ணத் தக்கனவுமாகிய, (தாரூணிச) கட்டை சிலை செம்பு வெள்ளி தங்கம் முதலானவைகளையும், (ஆநய) பிரதிமைகளாகச்செய்; (ஆவஸதம்) கோபுரமண்டப ப்ராகார வாபிகூப தடாகாதிக ளடங்கிய கோயில்களையும், (குருஷ்வ) நன்கியற்று; (மேமந:) என்மனம், (வாஸே) பிம்பத்தில் ஸாந்நித்யங்கொண் டிந்த லீலாவிபூதியில் யாவரு மெளிதில் நம்மைச் சேவித்து நற்கதி பெறும்படியாக வாழ்வதில், (அபிரதம்) மிகவும் ஆஸக்தியுடைய தாகின்றது.—என்றும் அர்த்தமாகும்.

இதனல், ஸ்வயம் வ்யக்த திவ்யார்ஷ மாநுஷங்களாகிய அர்ச்சைகளில் பகவத் ஸாந்நித்யம் நிரந்தரமுள தெனவும் தத்ஸேவாதிகள் யாவர்க்கும் விதியெனவும் நன்கு விளங்கும்.

வாறு அங்கதேவதைகளுக்கும், முக்கியமான ஸ்ரீமந் நாராயணனுக்கும், சுற்றிலும் ஆலயங்கள் நிருமித்துப் பிரதிஷ்டை செய்தருளினர். பிறகு இளைய பெருமாளுடனும் பிராட்டியுடனும் கூடி, காட்டிலுள்ள மலர்களாலும், கனிகளாலும், கிழங்குகளாலும், பக்குவஞ் செய்யப்பட்ட மாம்ஸங்களாலும், நன்னீர்களாலும், ஜபங்களாலும், தர்ப்பணங்களாலும், ஸமித்துக்களாலும், தூப்புற்களாலும், பூதங்க ளெல்லாவற்றையும் விதிப்படி பூஜித்து மகிழ்வித்து, மற்றுமுள்ள ரிஷிகணங்களுடன் கூடி, தேவதைகளுடன் தேவேந்திரன் ஸுதர்மை யென்னும் தேவஸபையில் பிரவேசஞ் செய்வதுபோல், நன்கியற்றப்பட்ட அந்தப் பர்ணசாலையினுட் புகுந்தனர். பின்பு அவர்கள், பலவகைப் பறவைகளும் மிருகங்களுஞ் சூழப் பலவகைப்பட்ட விநோதமாயுள்ள பூ கனி காய்கள்நிறைந்தமரங்கள்அடர்ந்து, பாம்பு புலி கரடி யானை சிங்கம் முதலியவை தொனிசெய்ய, கோரமாகியும், அழகாகியு முள்ள அக்கானனத்தில் விஹாரஞ் செய்துகொண்டு விநோதமாக வாழ்ந்தனர். ஆங்கு பற்பல நீர்ப்பறவைகள் ஒலிக்கப்பெற்றுக் குளிர்ந்த நன்னீருடையதாகிப் பெருகுகின்ற மால்யவதி நதியில் ஜலக்கிரீடை செய்து கொண்டும், அந்தச் சித்திரகூடத்திலுள்ள விநோதங்களைக் கடாக்ஷித்துக்கொண்டும், பெருமகிழ்ச்சி யடைந்தவராகி, திருவயோத்தியைவிட்டு வந்தோமேயெனச் சிறிதுந் துன்பமுறாமல் அவர்கள் மிகவும் ஆநந்தமடைந்து வாழ்ந்திருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தாறுவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்.

ஸுமந்திரர் திரும்பித் திருவயோத்திசேர்ந்து, பெருமாள் தனியே நடந் தெழுந்தருளியதை யுரைசெய்ததும், அதுகேட்டுச் சக்கரவர்த்தி முதலானோர் மிகவுந் துன்புற்றதும்.

குஹப்பெருமாளுக்கும், சுமந்திரருக்கும், பெருமாள் விடை கொடுத்து நிறுத்திவிட்டு, இளையபெருமாளுடனும் பிராட்டியாருடனும் படகேறிக் கங்காநதியைத் தாண்டி எழுந்தருளுகையில், குஹப் பெருமாள் சுமந்திரருடன் கூடிநின்று, பெருமாள் கட்புலன் கடந் தெழுந்தருளுமளவும் இமைக்காமல் கண்ணுற்றுக்கொண்டு, பெருமாளுடைய திருக்கல்யாண குணாதிசயங்களைப் புகழ்ந்து, அவருக்குற்ற துன்பத்தை நினைந்து புலம்பிக் கடுந்துயரங்கொண்டு நின்றனர். பிறகு குஹப்பெருமாள் தேர்ப்பாகரை யுடனழைத்துக்கொண்டு தன்னரண்மனை சேர்ந்து, காட்டி லடிக்கடி ஸஞ்சரிக்கின்றவர்கள் முகமாய்ப் பெருமாள் பரத்துவாஜாச்சிரமத்துக் கெழுந்தருளி யதையும், அங்கிருந்து பிரயாகக்ஷேத்திரஞ் சேர்ந்ததையும், திருச்சித்திரகூடம்வரையி லெழுந்தருளி

யதையுங் கேட்டுணர்ந்து, அல்லும் பகலும் ஸ்ரீராமசந்திரரையே நினைந்து கொண்டிருந்தனர். அதன் பிறகு ஸுமந்திரர், பெருமாள் இனி மீண்டெழுந் தருளாரென நிச்சயித்து நிஷாதபதியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, குதிரைகளைத் திருத்தேரில் கட்டி மிகுந்த சோகத்துடனே திருவயோத் திக்குச் செல்லப் புறப்பட்டனர். செல்லும் மார்க்கத்தில் மலர்ந்து மணங் கமழ்கின்ற காடுகளையும் நதிகளையும் தடாகங்களையுங் கடந்து, நாடுகளி லுள்ள கிராம நகரங்களைக் கண்ணுற்றுக் கொண்டு, சிருங்கிபேரபுரம் விட்ட தினத்திற்கு மூன்றாவது தினம் ஸாயங்காலத்தில் திருவயோத்தியை யடைந்தனர். அந்நகரம் அப்பொழுது சூன்னியமாய் மருகாந்தாரம்போலத் தொனியற்றிருக்கக் கண்டு, சக்கரவர்த்தி முதலிய யாவரும் பெருமாளைப் பிரிந்ததனு லுண்டான சோகாக்கினியால் தகிக்கப்பட்டனரோ வென்று ஐய முற்று, விரைவாகக் கோபுரவாயில் கடந் துட்புகுந்து சென்றனர். திருத்தேர் வருவதைக் கண்டு நகரத்தோ ரெல்லோரும் எதிர்கொண் டோடிவந்து, ஸ்ரீராமனெங்கே? ஸ்ரீராமனெங்கே? யென்று வினவினர்கள். சுமந்தி ரர் அவர்களைநோக்கி, கேளீர் நகரத்தோர்களே! நான் கங்காநதியின் தீரத் தில் விடைகொடுக்கப்பெற்று மீண்டெய்தினேன்; அவர் தருமவழிபற்றிக் கங் கையைக் கடந்து காடேற வெழுந்தருளின ரென் றுரைசெய்தனர்.

அவர்கள் அம்மொழிகேட்டுப் பெருமாள் கங்கையையுந் தாண்டி எழுந் தருளி விட்டனரேயென்று கண்ணீர்பெருக்கி, அந்தோ! ஸ்ரீராமா! என்றும், அய்யய்யோ வென்றும் புலம்பினார்கள். அன்றியும் திரள் திரளாய் நின்று, "அந்தோ! ஸ்ரீராமனை விட்டுவந்த வெறுந்தேரைக் கண்டோமே! யாங்கள் நல் வினையற்றுக் கெட்டோம்; தான யஜ்ஞ விவாஹாதி காலங்களிலும், மஹோற் சவங்களிலும் சபைநடுவில் நாயகமணிபோலத்திகழும் தார்மிகரான ஸ்ரீராமனை இனி யொருகாலுங் காணேமோ? 'இவர்க்கு நன்மை பயக்கத்தக்க தியாது? இவர்க்குப் பிரியம் அளிப்ப தியாது? இவர்க்கு ஸுகந்தருவ தியாது?' என்றிவ் வண்ணம் ஒவ்வொருவருக்கும் வேண்டுவதை விசாரித்து அளித்து இந்நகரி லுள்ளயாவரையும் தம்மக்கள்போலவே ஸ்ரீராமன் பாதுகாத்தளித்தனரன்றோ" என்று பலர் புலம்பினார்கள். மாளிகைமேல் ஜாளகத்தினின்று வனிதையர் திருத்தேரைக் கண்டு, ஸ்ரீராமனைக் காணாத விசனத்தினால் வருந்தி யழலாயி னர். அவ்வழுகைக் கூச்சலைக் கேட்டுக்கொண்டே சுமந்திரர் சோகத்தால் முகத்தை மூடிக்கொண்டு ராஜவீதி வழியாகவே சக்கரவர்த்தி யிருக்குந் திரு மாளிகையைநோக்கியே சென்றனர். அதனைக் கிட்டியவளவில் திருத்தேரை விட்டிழிந்து அரண்மனைக்குள் புகுந்து, ஏழுபிராகாரங்களையுங் கடந்து சென் றனர். ஆங்கு மாடமாளிகை விமானங்களிலுள்ள காந்தையர்கள், ஸ்ரீராமனை விட்டுத் தனியே வந்த சுமந்திரரைக் கண்டு கண்ணீர்பெருக்கி, அந்தோ! அந்தோவென் றழுதார்கள். சக்கரவர்த்தியாரது தேவிமார்களும், மகாராஜர் மிகச் சோக முறுவரே யென்று கூவாமல் மெதுவாகப் புலம்பி யழு தார்கள். 'இராமசந்திரனுடன் புறப்பட்டுப்போன சுமந்திரர் அவனை விட்டுத் தாம்மாத்திரம் வருகின்றன ரந்தோ! என் மகனெங்கே' யென்று கோசலையார்

கேட்பாராகி லதற் கிவரென்ன பதிலுரை செய்வார்? செல்வமகன் காடேற வெழுந்தருளியும், கோஸலையார் உயிரை விடாமல் பிழைத்திருக்கின்றனரே, இஃது மிகவும் அஸாத்தியமான காரியம்; இனிமேலும் அவர் உயிர் வைத்திருப்பாரோ; என்று இவ்வாறு ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு விசன முற்றனர். உண்மையான அவ்வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே சுமந்திரர் சோகாக்கினியால் அனல் பற்றி எரிகின்றதுபோலிருக்கின்ற எட்டாவது பிராகாரத்தினடுவிலுள்ள மகாராஜர் திருமாளிகையை யடைந்து புத்திரசோகத்தாலெரிந்து வருந்தி வாடி வதங்கி இளைத்து வெளுத்துத் தவிக்கின்ற சக்கரவர்த்தியைக் கண்ணுற்று வந்தனஞ் செய்து, ஸ்ரீராமசந்திரர் விண்ணப்பஞ் செய்யும்படி யருளிச்செய் திருந்த வாக்கியங்க ளெல்லாவற்றையும் ஒரு மொழியும் விடாமல் விண்ணப்பஞ் செய்து நின்றனர்.

சக்கரவர்த்தியும் மௌனமாகி யசைவற்று வீற்றிருந்து, அவ்வாக்கியங்களை முற்றுஞ் செவிசார்த்திச் சோகம்பெருகி மனந்தளர்ந்து கண்சுழன்று மூர்ச்சையடைந்து தரையில் வீழ்ந்தனர். அப்பொழுது அந்தப்புரத்திலுள்ள யாவருங் கூக்குரலிட்டுப் புலம்பினர்கள். கோஸலையார் சுமித்திராதேவியுடன் சக்கரவர்த்தியை எடுத் துட்காரவைத்துத் தேற்றி அவரை நோக்கி, எம்பிராணநாதரே! நம் அருமைப் புதல்வனைக் காடேற விட்டுத்திரும்பிவந்து பணிந்து நிற்கின்ற சுமந்திரருடன் ஏன் ஸல்லாபஞ் செய்கின்றிலீர்? ரகுகுல துரந்தரராகிய தேவரீர், ராஜநீதிக்கு விரோதம்போலிருக்கினும், ஸத்தியவாக்கிய பரிபாலனார்த்தமாக ஸ்ரீராமனை வனவாஸஞ் செய்யும்படி கட்டளையிட்டனுப்பி, இப்போழ்தேன் வெட்க முறுகின்றீர்? தேவரீர் செய்தது நற்செயலாகக் கடவதல்லது, வெட்கமுறத்தக்க தீச்செயலாகக் கடவதன்று; ஆதலின், சோகக் கடலில் மனத்தை யமிழ்த்தாமலெழுந்து மனமகிழ்க; பரதனை விட்டு ஸ்ரீராமனிடத்தில் மாத்திரம் இவ்வளவு பக்ஷம்வைத் திருக்கின்றாரே யென்று கைகேயி கோபங்கொள்வாளென்று அஞ்சி, ஸ்ரீராமன் செய்தியைப் பற்றிச் சாரதியைக் கேட்கின்றிலீரோ? அவ்வண்ணம் அஞ்சற்க; அக்கைகேயி இப்போதிங்கிலள்; ஆதலின், அச்சமற்றுச் சுமந்திரருடன் ஸம்பாஷிக்கக் கடவீரெனத்தேற்றினாள். ஆயினும்அவள் தன்சோகத்தையுள்ளடக்கவாற்றலற்றவளாகி உடனே தானும் தரையில் வீழ்ந்து புலம்பலாயினாள். இவ்வண்ணஞ் சக்கரவர்த்தி, கோஸலையா ரிருவரும் கீழேவீழ்ந்து வருந்திப் புலம்புவதுகண்டு அந்தப்புரத்திலுள்ளோ ரனைவரும் கோவென்று கூவியழுதார்கள். அதுகேட்டு அந்நகரத்திலுள்ள பாலவிருத்தர்க ளடங்கலும் கூடிக் கூவியழுதார்கள். அப்பொழுது பட்டணமெங்கும் அந்தப் புலம்பல் நிரம்பி ஸ்ரீராமன் காட்டிற்கெழுந்தருளப் புறப்பட்ட காலத்திலிருந்தவண்ணமாகியது.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தேழாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

சுமந்திரர் சக்கரவர்த்தியாரிடத்தில் பெருமாள் இளையபெருமாள் ஸீதை இவர்களின் வாக்கியத்தை விண்ணப்பஞ் செய்தது.



அநந்தரஞ் சக்கரவர்த்தியார் மூர்ச்சை தெளிந்தெழுந்து மனந்தேறி, ஸ்ரீராமசந்திரனது சரித்திரத்தைக் கேட்பதன்பொருட்டு ஸூதரை யருகே யழைத்தனர். ஸ்ரீராமபத்திரரையே நினைந்து துன்பமும் சோகமுங்கொண்டு மிகவுந் தாபமடைந்து, அன்றைத்தினமே பிடிக்கப்பட்ட யானைபோலப் பெருமூச்செறிந்து, பிணிகொண்ட யானைபோலத் திகைத்துச் சிந்தை நொந்து மூப்பினனு மிளைத்து வெளுத்து நரைத்து வீற்றிருக்கின்ற சக்கரவர்த்தியை நோக்கி ஸுமந்திரரும் கைகுவித்துக்கொண் டெதிரில் வந்து நின்றனர். தசரதசக்கரவர்த்தியும், புழுதிபடிந்து கண்ணீர்ததும்பத் துன்புற்று நிற்கின்ற ஸாரதியை நோக்கி, ஸுமந்திரரே! என் அருமைமகன் காட்டிடையில் எவ்வண்ண மிருக்கின்றான்? எங்கு வசிக்கின்றான்? இதுவரையில் மஹாராஜ போகங்களை அனுபவித்த என் செல்வமகன் மரத்தடியில் படுத்து எவ்வண்ணந் துயில்கொள்ளுகிறான்? எதனைப் புசிக்கின்றான்? இதுவரையில் அவன் அரண்மனையைவிட்டுப் புறப்படுவானாகில், நால்வகைப்படைகளும் அவனைச் சூழ்ந்து செல்லுமன்றோ? அத்தன்மையனாகிய என்புதல்வன் நிர்ஜ்ஜனமாகிய வனத்தில் எவ்வண்ணஞ் சிற்றடிகள் சிவப்புற நடப்பான்; மலைப்பாம்புகளும் பற்பல கொடிய மிருகங்களும் நிறைந்த கோரமான வனத்திடையில் என் குமாரர்கள் ஸீதையுடன் எவ்வண்ணந் திரிவார்களந்தோ! மிகவும் ஸுகுமாரியான ஸீதையுடன் என் குமாரர்கள் தேரைவிட்டிழிந்து எவ்வண்ணம் நடந்து சென்றனர்கள். மந்தரமலையி னிடையில், அசுவினீ தேவர்கள் சென்றாற்போலக் கடுங்கானகத் திடையில் என் குமாரர்கள் நடந்துசெல்லக் கண்டநீர் ஒருவரே யன்றோ மிகவும் நல்வினையினர்! வனத்திடை புகுகையில், ஸ்ரீராமசந்திரன் என்ன விளம்பினன்? லக்ஷ்மணன் யாது கூறினன்? ஜனகமஹாராஜன் மகள் யாது மொழிந்தனள்? அவர்கள் எவ்வண்ண மிருந்தனர்கள்? எவ்வாறு படுத்தனர்கள்? எவ்வண்ணம் உண்டனர்கள்? இவையெல்லாம் உரைசெய்க. யயாதி வானுலகினின்றும் இந்திரனால் தள்ளப்பட்டும், ஸாதுஜனங்களிடத்தில் விழும்படி இந்திரனை வேண்டிக்கொண்டு அவ்வண்ணமே வீழ்ந்துய்ந்ததுபோல, யான் ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்தும் ஸ்ரீராமன் சரித்திரங்களைக் கேட்பதனால் மகிழ்ந்துய்வே னென்று கூறினர்.

இவ்வண்ணம் சக்கரவர்த்தியா லேவப்பட்ட ஸுமந்திரர், சக்கரவர்த்தியை நோக்கிக் கூறுகின்றனர்: 'கேட்டருளீர் திருவயோத்தி மன்னரே! தேவரீர் திருமகன் காட்டினிடையில் தேவரீரைக் குறித்துக் கைகுவித்துச்



(சுமந்திரர்) (தசரதர்) (கோஸலை) (சுமித்திரை)

சிரத்தில் வைத்துத் தலைவணங்கித் தண்டம் ஸமர்ப்பித்து, என்னை நோக்கி யருளிச்செய்ததாவது: "ஸுமந்திரரே! நான் செய்ததாக என் தந்தை யார்க்கு நீர் திருவடிதொழுது வந்தனஞ்செய்யக்கடவீர். அன்றியும், அந்தப் புரத்திலுள்ள யாவரையும்நோக்கி, அவரவர்களுக்குத் தக்கவாறு மரியாதை செய்யக்கடவீர். என் மாதாவை நோக்கிக் குசலம்வினவி வந்தனஞ்செய்து, தாயே! நீர் எப்பொழுதும் ஊக்கத்துடனிருக்கக்கடவீர்; அக்கினிஹோத்திரஞ் செய்யுங் காலங்களில் அங்கிருந்து தருமச்செயல்களைச் செய்யக்கடவீர்; என் தந்தையின் திருவடிகளைத் தெய்வமெனநம்பிப் பணிந்து பாதுகாக்கக் கடவீர்; நாம் உயர் குலத்தின ரென்னுங் கர்வத்தையும், நாம் பட்ட மஹிஷி யென்னும் அஹங்காரத்தையும் விட்டு, எல்லாத் தேவிகளிடத்திலும் அன்பு கூர்ந்திருக்கக்கடவீர்; சக்கரவத்தியாரது திருவுள்ளத்தையும், கைகேயியின் எண்ணத்தையும், அநுஸரித் தொழுகக்கடவீர்; இளவரசனாகிய பரதனிடத்தும், சக்கரவர்த்தியாரிடத்துப்போல மதிப்புக்கொண்டு நடக்கக்கடவீர்.

అర్థజ్యేష్ఠాహిరాజానో రాజధర్మమనుస్మర।

*அர்த்தஜ்யேஷ்டாஹிராஜானோ ராஜதர்மமனுஸ்மர।*

ராஜர்கள் ஞானம் குலம் வயது புத்தி முதலியவற்றால் சிறியவர்களாயினும், செல்வ மொன்றினாலே யாவரினு முயர்ந்தோ ரல்லரோ? அரச நீதியை நன்காராய்க வென்று யான் உரைத்ததாக விண்ணப்பஞ் செய்யக்கடவீர். பின்பு பரதனை நோக்கிக் குசலம் வினவி, கேகயீ நந்தனா! நீ மாதாக்களெல்லோரிடத்திலும் பக்ஷபாதமின்றிச் சரியாக நடந்துகொள்ளக்கடவை; நீ இளவரசனாயிருப்பினும், சக்கரவத்தியார் திருவுளமுகக்குமாறு நடந்து பாதுகாத்தளிக்கக் கடவை; அவர் மிகவும் மூப்பின ராதலின், அவர் திருவுள்ளத்திற்கு விரோதமாக நடந்து அவரை வருத்தக்கடவையல்லை; அவரது கட்டளையின் படியே நீ இளவரசனாகி யொழுகக்கடவை; என் தாயாரை யுன் தாயார்போலவே எண்ணி நடக்கக்கடவை யென்றும், நான் சொல்லியதாக உரைசெய்யக்கடவீர்" என்று கண்ணீர் ததும்பச் சோகங்கொண் டருளிச்செய்து கண்ணுங் கண்ணீருமாக நின்றருளினர்.

பின்னர் இளையபெருமாள் அருளிச்செய்ததையும் விண்ணப்பஞ் செய்கின்றேன்: அவர் மிகக் கோபங்கொண்டு நெட்டுயிர்ப்புற்றவராகி என்னை நோக்கி, "சுமந்திரரே! எம்மையரிடத்தி லென்ன குற்றத்தைக்கண்டு கொடிய கைகேயியின்புன்மதிகேட்டுச்சக்கரவர்த்தியார் அத்திருமகனைக்காடேறவோட்டினர்? எந்தச்செயலால் யாங்கள் மிக வருத்தமுற்றேமோ, அச்செயல் தீச்செயலேயாயினும், நற்செயலெனவே செய்யப்பட்டதன்றே? வரமென்பதை வியாஜமாகக்கொண்டு, பொருளாசையினாலே எம்மையனை யோட்டினமையால், இஃது எவ்விதத்திலுந் தீச்செயலாகுமல்லது நற்செயலாகாது; சக்கரவர்த்தி தாம் யாவர்க்கும் இறையென்பதுபற்றியே தம் மனம் போனபடி இந்தத் தீச்செயலைச் செய்தார்; எம்மையுரைக் காடேறவிட வேறொரு காரணத்தையுங் காண்கிலேன்;—

అసమీక్ష్యసమారబ్ధం విరుద్ధంబుద్ధిలాఘవాత్ ।
జనయిష్యతిసంక్రోశం రాఘవస్యవివాసనం॥

அஸமீக்ஷ்யஸமாரப்தம் விருத்தம்புத்திலாகவாத் ।
ஜநயிஷ்யதிஸங்க்ரோசம் ராகவஸ்யவிவாஸநம் ॥

நன்காராயாமல் மதியின்மையால் தீச்செயலை நற்செயலென வுணர்ந்து விரைந்து செய்தால், அஃது மிகவுந் துன்பத்தையே தருமன்றோ? அவ்வண்ணமே சக்கரவர்த்தியாரும் ஆராயாமல் எம்மையனைக் காடேறவிட்டு, இப்பொழுது துன்புறுகின்றனர். (குரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்ய மஜாநதஃ। உத்பதம்ப்ரதிபந்நஸ்ய பரித்யாகோ விதீயதே॥ என்று,) நீதிதப்பி நடக்கின்ற தந்தையையும் விட்டு விடக் கடவனென விதிக்கப்பட் டிருக்கின்றமையால்,

இந்த ஸர்க்கத்தில் இளையபெருமாள் சக்கரவர்த்தியாரை இகழ்ந்ததாக இருப்பது சரியோவெனின், உலகத்தில் இவ்வகைத் துன்பத்தை யடைந்தவர்கள் இவ்வகையாக இகழ்வார்க ளென்பதைத் திருவுளம்பற்றி, லோகபாவனை செய்தாரென வுணர்க. இதன் உண்மையான கருத் தென்னெனில், உண்மையறியாமல் பகவானைத் துறந்து மண்ணாசை பெண்ணாசை பொருளாசை கொண்டு ஸம்ஸாரக்கடலில் மூழ்கிக் கிடக்கின்ற சேதனர்களை யுஜ்ஜீவிப்பதன் பொருட்டு ஆசிரியன் தத்துவோபதேசஞ் செய்யவேண்டுவதை யருளிச்செய்வதாம். அஃதெங்ஙனமெனில் (கோநாயம் இத்யாதி) ஸர்வாந்தர் யாமியாய், ஸர்வபந்துவாய், ஸர்வஸுலபரா யிருக்கின்ற பெருமாளை என்ன காரணத்தினால் நீ துறந்தனை?—(ராஜ்ஞா இத்யாதி)-தானே கர்த்தாவென்னும் அஹங்காரமுடைய சேதநனால் கைகேயிபோன்ற கொடிய மாயையின் மயக்கிலகப்பட்டு, நாமெல்லோரும் துன்புறத்தக்க செயல்கள் செய்யப்படுகின்றன.—(யதிப்ரவ்ராஜிதஃ இத்யாதி)-பரமாநந்தம் பெறுவிக்கத்தக்க நம்பெருமாளைத் தொழாமல் துறப்பது இம்மையில் புன்மையான பொருளாசையினா லாவதன்றோ? அஃது தீச்செய லாகுமல்லது நற்செயலாகுமோ?—(இதந்தாவத் இத்யாதி) இவ்வண்ணம் பெருமாளைத் துறப்பது தானே சுதந்திரனென்னும் ஆங்காரமடியாக வந்ததேயன்றி யதற்கு நாம் வேறோர் காரணத்தையும் காண்கிலோம்—(அஸமீக்ஷ்ய இத்யாதி) குருகுலவாஸஞ்செய்து வேதாந்தார்த்தங்களை யறிந்து நன்காராய்ந்து விதிப்படி செய்து இகழப்பட்டவைகளைத் துறப்பவர்கள் கடைசியில் பேரின்பம் பெறுவார்கள், தாமே வல்லோமென்று இறுமாப்புற்று நாஸ்திகர்களாகி நம்பெருமாளைத் துறந்து மற்றொரு தெய்வத்தைத் தொழுது தொண்டு செய்பவர்கள் இம்மையிலுங்கெட்டு மறுமையிலும் நரகில் வீழ்ந்து துன்படைவார்க ளென்பதிலும் ஐயமுளதோ?—(அஹந்தாவத் இத்யாதி)—பிரகிருதி ஸம்பந்தத்தால் உறவினராகிய இத் தாய்தந்தை முதலியவர்களைத் தாய் தந்தை முதலானவர்களாக யாம் எண்ணோம்; (பிதாத்வம் மாதாத்வம் என்றபடி) காரணமின்றி யுறவினராகிய பெருமாளையே தாய்தந்தை தமையன் இனத்தார் சுற்றத்தார் முதலிய எல்லா வுறவினராகவும் நினைப்போம்—(ஸர்வலோக இத்யாதி)—நீ இவ்வண்ணம் நாஸ்திகனாகி நம் தெய்வத்தையே துறக்கின், இவ்வகைத் தீச்செயலுள்ள உன்னிடத்தில் யாவர் அன்பு செய்வார்? யாவரும் பகைப்பார்களே!—(ஸர்வப்ரஜா இத்யாதி)-இவ்வண்ணந் தெய்வத்தையுந் துறந்து உலகத்தையும் பகைத்து நிற்கின், நீ எவ்வாறு உயர்ந்தோனாகுவாய்? ஆகாய்; ஆதலின் நீ நம்பெருமாளைச் சரணமடைந்து பெருவீடு பெறக்கடவையென்று ஆசிரியன் உபதேசஞ்செய்ய வேண்டிய முறையினை யருளிச்செய்தனரெனவுணர்க.

நீதிதப்பி எம்மையரைக் காடேறவிட்ட சக்கரவர்த்தியை யான் தந்தையென மதித்தேனல்லேன்; எனக்கு அண்ணன், இறைவன், இனத்தார், சுற்றத்தார், தாய், தந்தை முதலிய யாவரும் ஸ்ரீராமனே! எல்லாவுலகங்களுக்கும் இதஞ் செய்பவரும், பிரியமளிப்பவருமாகிய எம்மையனைக் காடேறவிட்டு, யாவர்க்கும் பகைபோல நின்ற உம்மைக் கண்டு யார்தாம் எவ்வண்ணம் அன்புற்று மகிழ்ந்து, உமது கட்டளையின்படி நடப்பார்கள். நாட்டார் நகரத்தோரெல்லோர்க்குமினியராகிய எம்மையனை யோட்டிவிட்டு,நீரெவ்வண்ணம் அவர்களுக்கிறையாகி யரசாட்சி செய்வீர்" என்று தேவரீருடன் உரைத்ததாக விண்ணப்பஞ் செய்யும்படி யருளிச் செய்தனர்.

ஸீதாபிராட்டியோ, இதுவரையில் தாம் ஒரு துன்பத்தையு மறியாதவராதலின் மிகவும் துன்பமடைந்தவராகி, யான் மீளுவதைக் கண்டும் யாதும் அருளிச்செய்யாமல், பர்த்தாவின் திருமுகமண்டலத்தையேநோக்கிக் கண்ணீர் ததும்ப நின்றனர். ஸ்ரீராமசந்திரர் இளையபெருமாளால் பாதுகாக்கப்பட்டவராகித் திருவயோத்தியை நோக்கிக் கைகூப்பி நின்றருளினர்; பிராட்டியார், திருத்தேரினையும் அடியேனையுங் கண்ணுற்றுக் கண்ணீர்பெருக்கித் துன்புற்று நின்றனர் என்று கூறினர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

ஸுமந்திரர் பின்னும் புகன்றதும், அவ்வாக்கியத்தைக்கேட்டுச் சக்கரவர்த்தியார் புலம்பியதும்.



சுமந்திரர் சக்கரவர்த்தியினிடம் பின்னும் விண்ணப்பஞ் செய்கின்றனர்: "கேட்டருளீர் சக்கரவர்த்தி! பெருமாள் காடேற வெழுந்தருளிய பின்பு நான் திரும்புகையில், திருத்தேர்க்குதிரைகளும் கண்ணீர்பெருக்கிக் காலெழாமல் தட்டித்தடுமாறி வந்தனவேயன்றி மகிழ்ந்தில. யானும் பெருமா ளிளைய பெருமா ளிருவர்க்குந் தண்டம் ஸமர்ப்பித்துக் கைகுவித்துக்கொண்டு சோகத்தை யுள்ளடக்கித் திருத்தேர்மீ தேறிப் புறப்பட்டுக் குஹப் பெருமாளுடன் சிருங்கிபேரபுரஞ் சேர்ந்து, பெருமா ளொருகால் மீளவு மென்னை யழைப்பாரோ வென்னு மாசையினால் அவ்விடத்திலே மூன்றுநாளிருந்து பார்த்தேன்; எவ்வளவு கால மிருந்தும் அவரைக் காணமல் திரும்பிவிட்டேன்.

విషయే తే మహారాజ రామవ్యసనకర్శితాః ।
అపివృక్షాః పరిమ్లానాః సపుష్పాంకురకోరకాః ॥

விஷயேதேமஹாராஜ ராமவ்யஸநகர்சிதாঃ ।
அபிவ்ருக்ஷாঃபரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குரகோரகாঃ ॥

ஹேமஹாராஜரே, தேவரீருடைய இந்நாட்டில் அசேதனங்களாகிய மரங்களும், சேதனர்கள்போலப் பெருமாளுக் குற்ற வனவாஸ சோகத்தினல் மெலிந்து, தளிர்மொட்டு மலர் காய் கனிகளுடன் வாடி வதங்கிக் கருகிக் குன்றிப் பட்டுப்போயின; ஆறு குட்டை குளங்கள் வெயிலின்றியே வெம்மைகொண்டு கொதிக்கின்ற நீருள்ளனவாயின; காடு தோப்புத் தோட்டங்கள் உலர்ந்த இலைகளுள்ளன வாயின; அவ்வனத்திலுள்ள மான் புலி கரடி யானை சிங்கம் முதலிய ஜந்துக்கள் சஞ்சரிக்கின்றில; கொடிய ஜந்துக்கள் திரிகின்றில; அவ்வனமெங்கும் ஸ்ரீராமவியோகத்தாலுண்டான சோகக்கடலில் மூழ்கித் தொனியற்றதாயிற்று; தாமரை யோடைகள் வாடிய பூமடலுள்ளனவாகவும், கலக்கமுற்ற நீருடையனவாகவும், வெப்பங்கொண்ட தாமரை பொருந்தினவாகவும், அடங்கிக் கிடக்கின்ற நீர்ப்பறவை மீன் முதலியன சூழ்ந்தனவாகவு மாயின; நீரிலுள்ள மலர்களும், நிலத்திலுள்ள மலர்களும், முன்போல மணங்கொண்டு மலர்ந்தில; கனிகள் முன்போல உருசிகொண்டு பழுத்தில; எம்மிறையே! அடங்கிய பறவைகளுள்ளனவாகி இவ்விடத்திலுள்ள தோட்டங்கள் வாடியிருக்கின்றன; முன்போலச் செழிப்பாக ஒரு தோட்டத்தை யாயினும் கண்டிலேன். பெருமாளை விட்டுத் தனியே புகுந்த என்னைக்கண்டு ஒருவராயினும் மகிழ்ந்திலர்; திருத்தேர்மீது பெருமாளைக் காணுமல், எல்லோரும் பெருமூச்சுவிட்டுக் கண்ணீர் பெருக்கி நின்றனர்கள். மாடமாளிகைகளின் மேலிருந்த மங்கையர்களும், வெறுமையாகவந்த இத்திருத்தேரைக் கண்ணுற்று, ஒருவர் முகத்தை யொருவர்நோக்கி, அந்தோ! அந்தோ! வென்றுகூவி யழுதார்கள். இவ்வண்ணம் என்னைக் கண்டு அனைவரும் ஒருதன்மையாகத் துன்புற்று நின்றனர்கள். அவர்களில் இவர் அன்பர், இவர் பகைவர், இவர் உறவினர், இவர் உதாஸீநர், என உணர்தற்கு ஏற்ற குறி யொன்றினையும் யான் கண்டிலேன். எம்மரசே! பெருமாளைப் பிரிந்து கோஸலையார் எவ்வண்ணம் துன்புற் றிருக்கின்றனரோ, அவ்வண்ணமே இத் திருவயோத்தி முழுமையும் மகிழ்வற்ற மனிதர்க ளுடையதும், சோகங்கொண்ட யானை குதிரைக ளுள்ளதும், அந்தோ அந்தோவென்ற தீனமான தொனி எங்கும் பரவியதும், எங்கும் நெட்டுயிர்ப்பி னொலி பொருந்தியதும், அழகு குலைந்ததுமாகி எனக்குத் தோற்றுகின்றது" என்று ஸுமந்திரர் சக்கரவர்த்தியாரை நோக்கி விண்ணப்பஞ்செய்து நின்றனர். இவ்வண்ணம் தசரத சக்கரவர்த்தியார் அவருரைத்த மொழிகளை முற்றுங்கேட்டு மிகவும் மனத்துயரமடைந்து கண்ணீர் ததும்பி வாய்தழதழத்துச் ஸுமந்திரரை நோக்கிக் கூறலாயினர்: கேளாய் ஸாரதி! மிகவும்

கொடிய பாவசிந்தை கொண்ட கைகேயியின் வாக்கியத்தைக் கேட்டு மதி மயங்கி, ஆலோசனையில் திறமை யுடையவர்களும் ஜ்ஞானத்தாலும் வயதினுலும் மூத்தவர்களும் ஆகிய பெரியோர்களுடன் யான் ஆலோசனை செய்தேனில்லை; நட்பினர்களுடனும் அமைச்சர்களுடனும் மற்றும் நாட்டிலுள்ள பெரியோர்களுடனும் நன்காராயாமல், இவ்வண்ணம் பெண்புத்திகேட்டு,மதி மயங்கி விரைந்து தீச்செயல் செய்து மிக்காரையுங் கெடுத்து நானுங் கெட்டழிந்தேன்; இதுவரையிலும் ஆராயாமல் யாதொரு செயலும் செய்யாத யான் இக்குலம் முழுதும் அழியத்தக்க இத்தீச்செயலை இப்பொழுது ஆராயாமல் செய்தது தெய்வச் செயலெனவே நம்பல்வேண்டும். ஸுமந்திரரே! இதுகாறும் யான் உமக்குச் செய்த நன்றியை யறிந்து நீர் என்மீது அன்புடையீராகில், என்னை விரைவில் என் செல்வமக னிருக்குமிடங் கொண்டுபோய்ச் சேர்க்கக்கடவீர்: விரைந்து செல்லுகவென் றுரைக்கின்றன போல் என் பிராணன்கள் துடிக்கின்றன. இப்போழ்தும் என்கட்டளையே பயன் படுவதாகில், என் கட்டளையின்படி என் மகனைத் திருப்பி யழைத்துக்கொண்டு வரக்கடவீர்; என் அருமைப் புதல்வனைவிட்டு ஒரு முகூர்த்தகாலமும், யான் பிழைத்திரேன்; என் குமாரன் இதுவரையில் நெடுந்தூரஞ் சென்றிருந்து மீளானாகில் என்னையே இத்தேர்மிசை ஏற்றிக்கொண்டு என் பெறலரும் புதல்வ னிருக்குமிடங் கொண்டுபோய்ச் சேர்க்கக்கடவீர்; அரும்பு போன்ற பற்களை யுடையவனும், ஒப்பாரு மிக்காரு மில்லாத தனி வில்லியும், இளையோனுடனும் சீதையுடனுங் கூடி மகிழ்பவனுமாகிய என் மகன் எவ்விடத்தி லிருக்கின்றான்? அவனை யான் கண்குளிரக் காண்பேனாகில் உய்வேன்; செந்தாமரை யிதழ் போன்ற கண்களையும், அற்புதமான மணி குண்டலங்களையு முடையவனும், மஹாபாகுவுமாகிய என் மகனை யான் கண்ணுறேனாகி லிப்பொழுதே யமலோகம் போய்ச் சேர்வேன். இவ்விதமான ஆபத்தை யடைந்திருக்கையிலும் யான் இக்ஷ்வாகு நந்தனனான இராமனை இங்கே காண்கிலே னென்றால், இதனைவிடக் கடுந்துயரம் வேறென்றுளதோ? ஆ ராமா! ஆ லக்ஷ்மணா! ஆ வைதேஹி! நீங்கள் நெடுந்தூரத்தி லிருக்கின்றமையால், கடுந் துன்பமடைந்து அநாதனாகி யான் மரணாவஸ்தைப் படுவதை நீங்கள் காண்கிலீர்-என்றிவ்வண்ணம் பலவாறு புலம்பினார். பின்னும் துயரத்தினால் மனந் தவிப்புண்டு கரை காண்பதற்கரிதான துக்கக்கடலில் மூழ்கினவராகிக் கோஸலையை நோக்கிக் கூறுகின்றனர்: ஓ என் பிராணநாயகி! இராமனைப் பிரிந்த துயரமாகிய பெருங்கடலில் யான் மூழ்கிப்போயினேன். இவ்விசனமாகிய பரந்த பெருங்கடல் சீதாவிரஹமாகிய கரையளவு மெட்டியது; இஃது நெட்டுயிர்ப்புக்க ளென்னும் சுழிகளையும், கண்ணீரென்னும் நுரைஜலங்களையும், கைகளை யசைப்பதென்னும் மீன்களையும், புலம்பலென்னும் பேரொலியினையும், அவிழ்ந்த கூந்தல்க ளென்னும் பாசியையும், கைகேயியென்னும் படபாக்கினியையும், மந்தரையின் வாக்கியமென்னும் பெரிய முதலையையும், கொடிய கைகேயியின் வரங்களென்னும் பெருக்கையு முடையதாகி, என் கண்ணீரென்னும் மாரிக்குப் பிறப்பிடமாயிருக்கின்றது. இந்தச் சோகஸாகரமானது ஸ்ரீராமனாகிய ஓடமின்றித் தாண்டுதற்கு

அரிதாதலின், யானிப்பொழுது அக்கடலில் மூழ்கி யழுந்தி யிறப்பேனந்தோ! இத்தருணத்தில் நான் கண்ணுற விருப்புற்றும், லக்ஷ்மணனுடன் கூடிய என் அருமைமகனைக் காண்கிலேனே! இனி யான் எவ்வண்ண முய்வேன்-என்றிவ் வண்ணம் அழுது வருந்தி யுடனே மூர்ச்சைகொண்டு தரையில் வீழ்ந்தனர். ஸ்ரீராமசந்திரன் பொருட்டுச் சோகமதிகரித்து இவ்வண்ணம் புலம்பி மோகங் கொண்டு சக்கரவர்த்தி மொழிந்த மொழிகளைக்கேட்டுக் கோஸலையாரும் இனி யிவருயிர் வாழாரெனத் தேர்ந்து மிகவும் பயங்கொண்டு வருந்தினர்.

அயோத்தியாகாண்டத்தில் ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## அறுபதாவது ஸர்க்கம்.

சோகமடைந்து புலம்புகின்ற கோஸலையாரை

ஸுமந்திரர் தேற்றியது.



அநந்தரம் கோஸலையார் பேய்பிடித்தவர்போல அடிக்கடி நடுக்குற்று உயிர் மாய்ந்தவர்போலத் தரையில் வீழ்ந்து, தேர்ப்பாகரை நோக்கி, ஸுமந் திரரே! என் மகன் ஸீதாலக்ஷ்மணர்களுடன் எவ்விடத்தி லிருக்கின்றானோ, அவ்விடத்தில் என்னைக் கொண்டுபோய்விடக் கடவீர்; அவர்களை விட்டுக் கணப்பொழுதும், நான் உயிர்வாழ்ந்திரேன்; ஆதலின் இத்தேரை மீளவும் திருப்பி என்னைத் தண்டகாவனத்திற் சேர்க்கக் கடவீர். இப்போழ்து யான் அவர்கள்பின் செல்லேனாகில், யமலோகம் போய்ச் சேர்வேன் என்று வேண் டிப் புலம்பினர். ஸுமந்திரர் அதுகேட்டு மிக்க சோகங்கொண்டு அவரை நோக்கி, அம்மா கோஸலராஜன் திருமகளாரே! சோகத்தையும், மோகத்தை யும், துன்பத்தாலாகிய இந்தப் படபடப்பையும் விட்டு மகிழக் கடவீர்; இராக வன் ஸந்தாபம் சிறிதுமின்றி யரணியத்தி லினிது வாழ்வுறுவர்; இலக்குமண ரும் தருமமுணர்ந்தவ ராதலின், அல்லும்பகலு மிடைவிடாது, தேவர் திரு மகன் திருவடிகளைப் பணிந்து குற்றேவல்கள் செய்து, உயர்வற உயர்நல மடையத்தக்க நல்வினையினராகி மகிழ்கின்றார். ஸீதாதேவியும், தம்பர்த்தாவினி டத்திலே நிலைகொண்ட மனமுடையவ ராதலின், கோரமாகிய காட்டிடையி லும் தந்திருமாளிகையிற் போலவே இன்புற்று வாழ்ந்து, அச்சமென்பதின்றி விசுவாஸம் பூண்டிருக்கின்றனர். இவர் கடுங்கானகத்திடையே புகினும்,

நெடுநாள் கானந்திரிந்து பழக்க முடையவர்போல மகிழ்வுடன் சென்றனரே யன்றிச் சிறிதேனும் சிந்தை சலக்கமுற்றிலர். முன்பு வீதை இந்நகரில் பூந்தோட்டத்திலே சென்று எவ்வண்ணம் மகிழ்ந்தனரோ, அவ்வண்ணமே நிர்ஜனமான கடுங்கானகத்திலும் மகிழ்ந்து சஞ்சரிக்கின்றனர். தம் நாயகனருகி லிருக்கின்றமையால், *அவ்விராமனிடமே மனப்பற்றுடையராகி, முழுமதிபோன்ற முகமுடையரான பிராட்டி † பாலப்பருவ முடையவர்போல மகிழ்ச்சிகொண் டிருக்கின்றனரே யன்றிச் சிறிதேனும் அச்சங்கொண்டிலர்; இவர் மனமும் பெருமாளைச் சேர்ந்தது, இவராவியும் அவரதீனம்; ஆதலின், ஸ்ரீராமனை யிழந்து பாழடைந்த இத் திருவயோத்தி யவருக்கும் கடுங்கானகமே, அக்கானகமும் இப்பொழுது திருவயோத்தியே யன்றோ? இவர் வழியில் ஊர்களையும், நகரங்களையும், ஆறுகளையும், பலவகை மரங்களையுங் கண்டு, பெருமாளை யாயினும் இளையபெருமாளை யாயினும் நோக்கி, இஃது எத்தன்மையது, என்னபெயருடைய தென்று கேட்டுணர்ந்து, மகிழ்ந்தே எழுந்தருளுகின்றனர். இத்திருவயோத்தி தாண்டி இரண்டு நாழிகைவழித் தூரத்திலேயே பெருமகிழ்ச்சிகொண்டு சென்றனர். ஆதலின் நீர் அவர்களைக் குறித்துத் துன்புறற்க-என் றுரைசெய்தனர். பிறகு கைகேயி விஷயமாகப் பிராட்டி யருளிச்செய்த வாக்கியம் கோஸலையாரை மகிழ்விக்கு மென்றெண்ணிச் சூதர் மொழியலுற்றுப் பின்பு, அவ்வாக்கியம் இவரை மிகவும் துன்புறச் செய்யுமல்லது மகிழச் செய்யாதென்றறிந்து, 'அம்மா கௌஸல்யாதேவி! சீதாதேவி விரைவாகக் கூறிய ‡அவ்வாக்கியத்தை இப்போழ்து மறந்துவிட்டேன்; அஃது இப்போது எனக்குத் தோற்றவில்லை' யென்று சலம் கூறிக் கூறத் தொடங்கிய அந்த வாக்கியத்தை நிறுத்தி விட்டு, கோஸலையாரை மகிழ்விக்கத்தக்க மதுரமான வாக்கியங்களை மொழியலாயினர். "கேளீர் கோஸலராஜன் திருமகளாரே! வழிநடப்பதனாலாயினும், பெருங்காற்று வீசுவதனாலாயினும், புலி முதலிய கொடிய ஜந்துக்களைக் கண்ணுறுவதனாலாயினும் சந்திரவனது விரிகதிரின் வெப்பத்தினாலாயினும், மைதிலியினுடைய முழுமதிபோலத் திகழுந் திருமுகச்சோதி சிறிதும் சிதைவுற்றிலது; மலர்ந்த தாமரை

* ஸ்ரீராமனுகிய உத்தியானவனத்தில் விஹரிக்க விருப்பமுற்றவராகி எனவும் பொருள்படும்.

† பாலப்பருவமுடையவரை உவமையாக்கி யதனால், துன்பமுணராமையும், விளையாட்டிலேயே விருப்பமுடைமையும் கூறப்பட்டனவாயின.

‡ இவ்விடத்தில் பிராட்டி கைகேயியை இகழ்ந்த வாக்கியத்தைச் சூதர் சொல்லத் தொடங்கி, பின்பு அதனைக் கூறுதொழிந்ததாக விருக்கின்றது; முன்பெங்கும் பிராட்டியார் கைகேயியை இகழ்ந்ததாகக் கவி யருளிச்செய்திலர். ஆயினும், முன்பு இளையபெருமாள் மஹாராஜனை இகழ்ந்ததாகக் கூறுவிடினும், பிறகு ஸுமந்திரர் வாக்கியத்தால் அவ்வண்ணம் முன் யிகழ்ந்ததை வெளியிட்டனரன்றோ? அவ்வாறே இதனால் பிராட்டியும் முன்பு கைகேயியை இகழ்ந் திருப்பரென வுடன்படுக. இவ்வண்ணம் முன்பு கூறாது பின்பு கூறலாகுமோ வெனில், இஃது நாடகசைலியை யனுஸரித் திருக்கின்றமையால், நாடகலக்ஷணப்படி இவ்வண்ணம் மொழிவது மொக்குமென்க. இவ்வாறே பலவிடங்களிலும் வரும். பிராட்டியார் வாக்கியத்தை இங்குங் கூறுதொழிந்தமையால்

அஃது இஃதென் றெவ்வண்ண மறியலாகுமெனின், கேட்க: யுத்தகாண்டத்தில்(விஜகர் ஹேத்ரகைகேயீம் க்ரோசந்தீக்ருரீயதா)என்றுதொடங்கி, (ஸகாமாபவகைகேயி ஹதோயங் குலநந்தந:)அடி கைகேயி! ரகுகுல நந்தனரான இந்த ஸ்ரீ ராமன் கொலைசெய்யப்பட்டன ராதலின், உன் கோரிக்கை யீடேறிற்று, இனி நீ சந்தோஷ மடைகளென்று,கைகேயியைப் பிராட்டியார் இகழ்ந்ததாக வருளிச்செய்கின்றமையால், அவ் வாக்கியத்தினலே இங்கும் கைகேயியைப் பிராட்டியார் அவ்வண்ணமே இகழ்ந்தார் என் றுணர்க. பரதனுக்கு ராஜ்ஜிய மளிக்கும்படி வரங்கேட்பதினலேயே கைகேயிக்குத் தன்பயன் கிடைத்திருக்கப் பெருமாளைக் காடேற வெழுந்தருளும்படி வரங் கேட்டதற்குக் கருத்தென்னெனில், ஸ்ரீராமன் வனம்புகின், ஸீதையும் அவர் பிரிவை யாற்றுமல் உடன் புகுவள்; இவள் மிகவுங் கட்டழகி யாதலின், யாவனேனு மோரரக்க னிவளைப்பறித்தோடிவிடுவன்; மனைவியை யிழந்தபின், ஸ்ரீ ராமன் இறப்பனல்லதுய்யான்; அவனிறந்தபின் பரதனுக்கு ராஜ்ஜியம் நிலைத்துவிடும்; ஸ்ரீராமன் பிழைத்திருப்பனுகில், எக்காலத்திலாயினும் ராஜ்ஜியத்திற்குத் தீங்கு நேருமல்லது, அஃது நிலைபெருது; யாவரும் ஸ்ரீராமனுடைய திருக்கல்யாண குணத்தி லீடுபட்டு, அவனிடத்தி லன்புகூர்ந்திருக்கின்றமையால், அவனிறந்தாலல்லது சனங்கள் பரதனிடத்தில் அன்புள்ளவராகார்; ஆதலின், ஸ்ரீராமன் அழிந் திறக்கும்படியாகக் காட்டி லோட்டிவிடக் கடவதென்பதே யாகும். இக்கருத்தினையே பெருமாள் ஆரணியகாண்டத்தில் (கச்சித்ஸகாமா கைகேயீ ஸுகிதாஸா பவிஷ்யதி | யாநதுஷ்யதி ராஜ்யேந புத்ரார்த்தே தீர்க்கதர்சிநீ ||) என்றும், (யதபிப்ரேதமஸ்மாஸு ப்ரியம்வரவ்ருதஞ்சயத் | கைகேய்யாஸ்தத் ஸுஸம்வ்ருத்தம் க்ஷிப்ரமத்யைவ லக்ஷ்மண ||) என்றும் அருளிச்செய்கின்ருர். முன்சருக்கத்தின் கடையில் பிராட்டியார், ஸுமந்திரர் திரும்புங்காலையில் அழுதும், மௌனமடைந்தும், முகவொளி குன்றியும், பெருமாளையும் ஸுமந்திரரையும் கண்ணுற்றுக் கண்ணீர் பெருக்கி நின்றனரென் றருளிச்செய் திருக்கின்றமையால், பிராட்டியார் பெருமாளுக் கஞ்சி, மெல்லெனக் கைகேயியை இகழ்ந்திருக்கின்ருரென்று தோற்றுகின்றது; அங்கே பிராட்டியார் பெருமாளுக்குக் கேளாதபடி இகழ்ந்தமையால், கவியுமங்கு அருளிச்செய்யா தொழிந்தனர். அதைப்பற்றியே ஸாரதியும், யாதும் உரைசெய்திலள் என்றனர். கோஸலையார் மிகத் துன்புறுவ ரென்பதைப் பற்றியே இங்கும் மறைத்தனர்; யுத்தகாண்டத்தில் பிராட்டியார் பெருமாளைவிட்டுத் தனியேயிருந்தமையால், அங்கு வெளிப்பட வருளினரென் றுணர்க.

பிராட்டியார் இவ்வண்ணங் கைகேயியை யிகழ்ந்து வருந்தலாகுமோ வெனில், லோக பாவனையென்று முன்னமே சொல்லினேமிறே? அன்ருயின், (கைகேயி) கொடிய மாயையே !, (அயம்) இந்த, (குலநந்தந:) நல்வழிபற்றிக் குலமுயக்குமாறு நற்பிறவி பூண்ட சேதனன், (ஹத:) உன்னல் மீளவும் இடுகுழியி லிழிந்து மாயோனை மறந்து கெட்டலையுமாறு செய்யப் பட்டனன்; ஆதலின், கோரிக்கை யீடேறிற்றென்று நீமகிழ்வுறுக-என்று சேதனர்கள் நற்கதிபெறுமல் மாயைக்குள்ளகப்பட்டுக் கெட்டலைவதைக் கண்டு, லோகமாதா வாதலின் மிகச் சோகங்கொண்டு கண்ணீர்பெருக்கி, இவர்களையொரு விரகால் மீட்டு நற்கதி தந்தருள வேண்டுமென்று (யத்ப்ப்ரூபங்கா: ப்ரமாணம் ஸ்த்திரசரரசநா தாரதம்யேமுராரே:) என்கிறபடி பெருமாளைக்கடாக்ஷித்து, மாயையையு மிகழ்ந்து, உபதேசஞ் செய்யும் விதத்தை இளையபெருமாளே அருளிச் செய்துவிட்டமை யுணர்ந்து, யாவரையும் பேரின்ப முறுவிக்குங்கால மெப்பெழுதோவென்று சிந்தைகொண்டு திகைத்து நின்றனள் என்பது முன் சருக்கத்தின் கடையிலுள்ள பிராட்டியைப் பற்றிய சுலோகங்களுக்கு உண்மையான பொருளெனத் தேர்க.

போலவும் முழுமதிபோலவும் திகழ்கின்ற அவரது திருமுகமண்டலம் சிறிதும் வாட்டமுற்றிலது;செம்பஞ்சிரஸம் பூசாவிடினும், பூசியனபோலவே திகழ்கின்ற அவரது திருவடிகளும், செந்தாமரை மலர்போல் அழகுவாய்ந்து விளங்குகின்றன; * இப்பொழுதும் ஜாநகி அணிகளை யணிந்து கொள்வதி லாசையினால் தண்டைகளையு மணிந்துகொண்டு, அவை கல் கல் என்று ஒலிக்க விநோதமாக நடக்கின்றனர். ஸீதாதேவி ஸ்ரீராமனுடைய திருத்தோள்களைப் பற்றியவராகி, யானையை யாயினும், சிங்கத்தையாயினும், புலியையாயினும் கண்ணுறினும், சிறிதேனும் அச்சமுற்றிலர். ஆதலின், தேவரீர் அவர்களைக் குறித்தும், எங்களைக் குறித்தும், மஹாராஜாவைக் குறித்தும் சிறிதும் சோகமுறக் கடவீரல்லீர்; இந்த ஸ்ரீராம சரிதம் யாவருங்கேட்டுய்யும்படி மூவுலகங்களிலும் நிலைபெற்று அழிவற்றிருக்கப் போகின்றது; அம்மூவர்களும் சோகமென்பதை விட்டு மனமகிழ்வுற்றுப் பெருந்தவச் செல்வர்கள் சென்றவழியே நடந்து, வனவாஸம் பூண்டு காய் கனிகளை யுண்டு தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்து, பதினான்காண்டுகள் சென்ற பிறகு மீண்டிங்கெய்தி மகிழ்வுறுவர்கள்-என்றிவ்வண்ணம் உரை செய்து மனந்தேறச் செய்தனர். கோஸலையா ரிவ்வண்ணம் தேர்ப்பாகரால் தேற்றப்பட்டவராயினும், புத்திரசோகத்தை யடக்க ஆற்றலற்று, அடா என்னன்பா! அடா என் குழந்தாய்! அடா ரகுகுல நந்தனா! என்று கூவி யரற்றலாயினர்; புலம்பலைவிட் டொழிந்தாரில்லை.

அயோத்தியாகாண்டத்தில் அறுபதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## அறுபத்தோராவது ஸர்க்கம்.

கௌஸல்யாதேவி சக்கரவர்த்தியை யிகழ்ந்து புலம்பியது.

யாவர்க்கு மினியரான பெருமாள் காடேற வெழுந்தருளினரெனக் கேட்டுக் கோஸலையார் வருந்தி யழுது பர்த்தாவை நோக்கிக் கூறலாயினர்: என் பிராணநாதரே! தேவரீர் அருளுடையவரெனவும், பச்சாத்தாப முடையவரெனவும், கொடையாளரெனவும், பிரிய வாக்கியங்களையே அருளிச்செய்பவரெனவும், ரகுகுல துரந்தரரெனவும், மூவுலகிலும் தேவரீருக்குப் புகழ் மிக வளர்ந்து பரவி யிருக்கின்றது; இதுவரையில் சுகமாக வளர்க்கப்பட்ட ஸ்ரீராம லக்ஷ்மணர்க ளிருவரும் ஸீதையுடன் இப்போது வனத்திடையில் துன்பங்களை எவ்வண்ணம் பொறுத் துய்வார்கள்? முதிர்ந்த யௌவன முடையவளும், மிகவும் ஸுகுமாரமான மேனி யுடையவளும், எப்பொழுதும் துன்பமென்பதை யறியாதவ ளாதலின் ஸுகமுறுவிப்பதற்கே தகுதியுடையவளும், ஜனகமஹாராஜன் மகளுமாகிய ஸீதை வனத்தில் வெம்மை தண்மைகளை

---

* பெருமாளுடன் விரைவாகப் பின் செல்லவேண்டு மென்னு மாசையினால் பிராட்டி சிலம்புத் தண்டைகளை யணிந்து கொள்ளாமல் நடப்பவராயினும், அவற்றை யணிந்து கொண்டவர்போலவே விநோதமாக நடக்கின்றன ரெனவும் பொருள் கூறுவர்.

எவ்வண்ணம் பொறுத்துய்வள்! இதுவரையி லறுசுவையுள்ள நல்லுணவுகளை யுண்ட அவள் இப்பொழுது காய் கிழங்குகளை எவ்வண்ணம் புசிப்பாள்! இதுவரையில் மிகவும் செவிக்கினிய கீதவாத்திய கோஷங்களைக் கேட்டு இன்புற்ற அவள் இப்போழ்து மிகக் கொடிய புலி கரடி யானை சிங்கம் முதலிய விலங்குகளி னொலிகளை எவ்வண்ணங் கேட்பள்! மஹேந்திரனது துவஜம் போன்றவனும், நீண்டுருண்ட புஜங்களை யுடையவனும், சிறந்த பலமுடையவனுமாகிய என் அருமைமகன் இப்போழ்து தன் கையையே தலையணையாக வைத்துக்கொண்டு எங்கே துயில்கொண் டிருக்கின்றானோ! தாமரையிதழ் போன்ற வண்ணமுடையதும், மிக வழகிய அளங்களை யுடையதும், தாமரைபோல மணம்வீசுகின்ற உயிர்ப்பினையுடையதும், தாமரைமலர்போன்ற கண்களையுடையதுமாகிய என் மகனது முகமண்டலத்தை இனி நான் கண்டு களிப்பதெக்காலம்? என்னுடைய இந்த இதயம் வச்சிரம்போன்ற வலிமையுடையது, இஃது நிச்சயம்; என் செல்வமகனைக் காணாதிருக்கையிலும், ஆயிரமாச் சிதறுண்டுபட் டழியாம லிருக்கின்றதன்றோ! என்று புலம்பினார். மறுபடியும் சக்கரவர்த்தியை நோக்கிக் கூறுகின்றனர்: என் பிராணநாயகரே! ஸகலமான போக பாக்கியங்களையு மனுபவிக்கத்தக்க என் மைந்தர் தேவரீரால் காட்டிலோட்டப்பட்டவர்களாகி ஓடி யலைந்து திரிகின்றனர்களே! இவ்வண்ணஞ் செய்தது மிகக் கருணையற்ற செயலன்றோ? என்மகன் பதினான்காண்டுகள் வனத்திலுறைந்து பதினைந்தாவதாண்டில் இங்குமீண்டு வருவானாகிலும், பிறகு பரதன் தான் நெடுநாள் அனுபவித்த ராஜ்ஜியத்தையும் பொருளையும் விட்டுவிட விரும்பானே; ஒருகால் விடுவானாயினும், ஸ்ரீராமன் அதனை அங்கீகரியான். எங்ஙனமெனில், உலகத்தி லொருவர் ஞானங் குலம் வயது நல்லொழுக்கம் இவைகளிற் சிறந்த வேதியர்களைச் சிராத்தத்தில் நிமந்திரணஞ் செய்து, பின்பு தம் முறவினர்களைக் கண்டு, அவர்களிடத்தில் பக்ஷத்தாலிவர்களைத் துறந்து அவர்களை முன்பு புசிப்பித்து சிராத்தத்தை முடித்து, பின் பிவர்களை இஷ்டபந்தியில் புசிக்கும்படி வேண்டி, அமிர்தம்போன்ற நல்லுணவுகளை யிடினும், இஃது தமக்கிகழ்வென வுணர்ந்த இப் பெருந்தன்மையினர்கள், அவருடன் கலந் தவ்வுணவுகளை யுண்ணார்களன்றோ? மற்றொன்றினால் மேயப்பட்டு * நுனிகளின்றிக் கட்டையாயுள்ள புற்களை நல்ல ரிஷபங்கள் மேயுமோ? மூத்தோனும் திறமை யுள்ளோனுமாகிய என்மகன் அவ்வண்ணமே, தனக்கிளையோனால் புசிக்கப்பட்ட இந்த ராஜ்ஜியத்தை இகழாது ஏற்றுக்கொள்வனோ? நாய் நரிமுதலியன உண்டு மிகுந்த மாம்ஸங்களைப் புலி பசியுறினும் புசிக்க விருப் புறாமைபோல என்மகனும் மற்றொருவனால் அனுபவிக்கப்பட்ட ராஜ்ஜியத்தை நன்கு மதியான். நாய் முதலியவற்றால் தீண்டப்பட்ட ஹவிஸ்ஸு நெய் புரோடாசம் (மாவினால் செய்யப்பட்டது) யூபஸ்தம்பம் முதலிய வைகளைப் பெரியோர்கள் யாகத்தில் உபயோகப் படுத்து

* தம்கொம்பை வெட்டுவதாகிய தமக்கு மானக்கேடான செய்கையை நல்ல ரிஷபங்கள் ஸகிக்காமை போல் எனவும் பொருள்படும்.

வார்களோ? ஒருவனால் சுவைபெறவுண்ணப்பட்ட ஸுரையை மற்றொரு சூரன் உண்பானோ? ஸோமயாகத்தில் தாழ்ந்தோனால் முன்புண்ணப்பட்ட ஸோமரஸத்தை யுயர்ந்தோர் பின்பு உண்பார்களோ? உண்ணார்களன்றோ, அவ்வண்ணமே என்மகன் இவ்வவமதிப்பைப் பொறுத்து, பரதனால் அனுபவிக்கப்பட்ட இந்த ராஜ்ஜியத்தைக் காமுறான். தன் வாலை யொருவன்பற்றி யிழுப்பதை வீரமுள்ள வேங்கைப்புலி பொறுத்திராமை போல, ராமனும் இவ்விகழ்வைப் பொறான்; இவன் போர்செய்ய முயலுவனாகில், பதினான்குலகிலுமுள்ள தேவாஸுரர்கள் முதலிய வெல்லா வுயிர்களு மொன்று சேர்ந்தாலும், இவனை வென்று வெற்றிகொள்ளுந் திறமையின ராவார்களோ? ஆகிலும், நாமே அதர்மஞ் செய்து தருமத்தை யழித்து உலகினைக் கெடுப்பது தகுதியற்றதென வெண்ணி யன்றோ, என் மகன் இவ்வவமதிப்பையும் பொறுத்துக் காடேறச் சென்றனன். இல்லாவிடின், சிறந்த வீரமும் தீரமும் வலிமையும் கொண்ட என் புதல்வன் தங்கப் பூணணிந்த சிறந்த பாணங்களால், ஊழிகாலத்திற் போலவே எல்லாப் பூதங்களையும் ஏழுகடல்களையும் எரித் தழித்து விடானோ? சிங்கம்போன்ற பலமும், காளைபோன்ற நோக்குமுடைய அத்தன்மையனாகிய என் மகன், பெருமீனாகிய தன் தந்தையாலேயே சிறுமீன் கொல்லப்படுதல் போல, தந்தையான உம்மாலேயே 'யழிக்கப் பட்டனனே!' தருமவழி தவறாத நற்புதல்வன் தேவரீரால் இவ்வண்ணம் காட்டிலோட்டப் பட்டனனென்றால், தேவரீரிடத்திலும் உலக நீதி யுளதோ?—

గతిరేకాపతిర్నార్యా ద్వితీయాగతిరాత్మజః।
తృతీయాజ్ఞాతయోరాజన్ చతుర్థీనేహవిద్యతే॥

கதிரேகாபதிர்நார்யா த்விதீயாகதிராத்மஜ꞉ ।
த்ருதீயாஜ்ஞாதயோராஜன் சதுர்த்தீநேஹவித்யதே ॥

ஸ்திரீகளுக்குப் பதியே முதலாவது கதி; இரண்டாவது பிள்ளை; மூன்றாவது தாய் தந்தைகள்;*நான்காவது இங்கில்லை. தேவரீர் இளையாளுக்கு ஆளாகி என்னைப் பாதுகாவாமையால், எனக்கு முதலாவது கதியுமில்லை; இராமன் வனஞ் சென்றமையால், இரண்டாவது கதியுமில்லை; தாய் தந்தையர்களும் அருகி லின்மையால், மூன்றாவது கதியுமில்லை; தேவரீரிங் கிருக்கின்றமையால், தேவரீரை விட்டு வனம்புகவும் விருப்புற்றிலேன்; ஆதலின், யான் ஒருகதியு மின்றிப் பல வகையாலும் தீவினையினளாகி யழிந்தேன். அடியாள் ஒருத்திமாத்திரமே யன்று; தேவராலே நாட்டுடன் கூடிய இவ்விராஜ்ஜியமும் அழிக்கப்பட்டது; மந்திரிகளுடன் தேவரீருமழிந்தீர்; என் மகனுடன் யானும் அழிந்தேன்; இந்நகரத்தோர்களு மழிந்தனர்கள். தேவரீருடைய பிள்ளையும் மனையாளுமாகிய

---

* பிள்ளை முதலிய பந்துக்க ளில்லாவிடின் சுதந்தரமாக வலிப்பது. (பிதாரக்ஷதி கௌமாரே பர்த்தாரக்ஷதி யௌவநே। வார்த்தகேதநயோரக்ஷேத் நஸ்த்ரீஸ்வாதந்த்ர்ய மர்ஹதி ॥) என்று வசன மிருப்பதும் காண்க.

இருவருமே மகிழ்ந்தனர்கள் - என்றிவ்வண்ணந் துன்பமடங்காமல் புலம்பி யிகழ்ந் தழுதனர். சக்கரவர்த்தி மிகக் கொடியவையான இவ்வன்மொழி களைக் கேட்டு மிகத் துன்புற்று, ஆராயாது தாம் செய்த தீச்செயலை நினைந்து சோக மதிகரித்து மயல்கொண்டு திகைத்து மயங்கினர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தோராவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## அறுபத்திரண்டாவது ஸர்க்கம்.

தாமுரைத்த வன்மொழிகேட்டு வருந்திய சக்கரவர்த்தியை நோக்கி அதனைப் பொறுத்தருளும்படி கோஸலையார் வேண்டிக்கொண்டது.

இவ்வண்ணஞ் சினமுஞ் சோகமுங்கொண்டு கோஸலையாரால் உரைக்கப் பட்ட வன்மொழிகளைச் சக்கரவர்த்தியார் செவியுற்றுச் சிந்தைகொண்டு மூர்ச் சை யடைந்தனர். நெடுநேரத்திற்குப் பிறகு மூர்ச்சை தெளிந்தெழுந்து, உஷ்ணமாகவும் தீர்க்கமாகவும் உயிர்த்துக் கோஸலையாரை யருகிற் கண்டு மீளவுஞ்சிந்திக்கலாயினர். அங்ஙனஞ் சிந்திக்கையில், சப்தத்தைக்கேட்டுச் சப் தம் உண்டாகுமிடநோக்கி அம்பு எய்கிற திறமுடைய தாம் முன்பு தெரியாமை யாற் செய்த பாபச்செயல் மகாராஜருக்கு நினைவு வந்தது. அந்த விசனத்தினு லும் ராமசோகத்தினுலும் மனங்கலங்கித் தவிப்புற்று எரிக்கப்பட்டவராகி நடுக் குற்று, கோஸலையினது கோபத்தைத் தணிக்கும்பொருட்டு அவளை நோக் கிக் கைமுகிழ்த்துத் தலை குனிந்து கூறுகின்றனர்: அடி என் பிராணநாயகி! யானுன்னைக் கைகுவித்துப் பணிந்து வேண்டுகின்றேன்; நீ கைகேயிபோல ன்றி விரோதிகளிடத்திலும் அன்பு கூர்ந்தவளும், கொடுமையற்றவளு மாகின் றனையன்றோ?—

భర్తాతుఖలునారీణాం గుణవాన్నిర్గుణోపివా।
ధర్మంవిమృశమానానాం ప్రత్యక్షందేవిదైవతం॥
సాత్వంధర్మపరానిత్యం దృష్టలోకపరావరా।
నార్హసేవిప్రియంవక్తుం దుఃఖితాపిసుదుఃఖితం॥

பர்த்தாதுகலுநாரீணாம் குணவாந்நிர்குணோபிவா ।
தர்மம்விம்ருசமாநாநாம் ப்ரத்யக்ஷந்தேவிதைவதம் ॥
ஸாத்வந்தர்மபராநித்யம் த்ருஷ்டலோகபராவரா ।
நார்ஹஸேவிப்ரியம்வக்தும் துஃகிதாபிஸுதுஃகிதம் ॥

நற்குண முடையவனுயினும், துர்க்குண முடையவனுயினும், தரும முணர்ந்த வநிதையர்களுக்குப் பர்த்தாவேயன்றோ கட்புலனுகிய தெய்வம்? ஆதலின் நீ, என்றும் தருமத்திலேயே நிலைகொண்டவளும், ஜனங்களின் ஏற்றத் தாழ்ச்சிகளை நன்குணர்ந்தவளுமாதலின், இப்பொழுது துயரமுற்றிருந்தாலும், மிகுந்த துன்பக்கடலி லழுந்தி வருந்துகின்ற என்னை நோக்கி இவ்வண்ணம் பிரியமற்ற வன்மொழி மொழிவது தகுதியன்று. இவ்வண்ணம் வன்மொழியா லென்னை வருத்தற்க-என்று வேண்டி வுரைசெய்தனர். சக்கரவர்த்தி இவ்வாறு தீனமா யுரைசெய்த நன்மொழியைக் கேட்டுக் கோஸலையார் அநுதாபங் கொண்டு, தூம்பினின்றும் மழைநீர் தாரை தாரையாகப் பெருகுவதுபோலக் கண்ணீர் பெருக்கி யழுதுகொண்டே தம் பர்த்தாவை நோக்கிச் சிரத்தில் தாமரை மொக்குப்போன்ற அஞ்சலியைவைத்துப் பணிந்து, பர்த்தாவி னிடத்தில் இவ்வாறு அபசாரப் பட்டேனேயென மனக் கவலையினுல் பதைத்து நடுங்கி வாய் தழுதழுத்துக் கூறுகின்றனள்: என் பிராணநாதரே! தேவரீர் என் பிழையைப் பொறுத்தருளக் கடவீர். தரையில் வீழ்ந்து தண்டம் ஸமர்ப்பித்து வேண்டுகின்றேன்; தேவரீர் இப்படி வேண்டும்படி அவ்வளவு பாவியாயினேனே! ஆ, கெட்டேன்; மீளவும் வேண்டி என்னைப் பாவியாக்கற்க; இனியென்னை யடித்தல்லவோ தண்டிக்கவேண்டும்?

నైషాహిసాస్త్రీభవతి శ్లాఘనీయేనధీమతా।
ఉభయోర్లోకయోర్వీర పత్యాయాసంప్రసాద్యతే॥

நைஷாஹிஸாஸ்திரீபவதி ச்லாகநீயேநதீமதா ।
உபயோர்லோகயோர்வீர பத்யாயாஸம்ப்ரஸாத்யதே ॥

யாவளொருத்தி மிகப் புகழத்தக்க சிறந்த புத்தியும், வீரமும், நல்லொழுக்கமு முடைய பர்த்தாவைத் தான் நல்வார்த்தை சொல்லி வேண்டுவதை விட்டு, அவனுல் வேண்டி நன்மொழி கூறப்படுகின்றனளோ, அவள் இம்மை மறுமை யிரண்டிலும் இன்பமற்று அழிவாளன்றோ? இவ்வகைப்பட்ட தருமங்களையும் அறிவேன்; தேவரீர் ஸத்தியவாதி யென்பதையும் அறிவேன்; ஆகிலும், நான் புத்திரசோகம் பொருமல், மொழிதற்கரிய மொழிகளை மொழிந்தேன் :—

శోకోనాశయతేధైర్యం శోకోనాశయతేశ్రుతం।
శోకోనాశయతేసర్వం నాస్తిశోకసమోరిపుః॥

சோகோநாசயதேதைர்யம் சோகோநாசயதேச்ருதம் ।
சோகோநாசயதேஸர்வம் நாஸ்திசோகஸமோரிபுః ॥

சோகமே தைரியத்தையும் அழிக்கின்றது; சோகமே பல சாஸ்திரங்களையுங் கற்றுத் தேர்ந்த நல்லுணர்வினையும் அழிக்கின்றது; சோகமே மற்றுமுள்ள வெல்லாவற்றையும் அழிக்கின்றது; ஆதலின், உயிர்களுக்குச் சோகத்திற்கு நிகரான பகை வேறொன்றுமில்லை; சத்துரு சினத்தோடு நோக்கி யடித்த காயத்தைப் பொறுத்தாலும் பொறுக்கலாகும்; ஒருவர்க்கு நேருஞ்

சோகம் மிகவும் அற்பமாயினும் அதனைப் பொறுப்பது மிகவும் அரிதாகும். என் மகன் வனவாஸஞ் சென்று இன்றைத் தினத்திற்கு ஐந்து நாளாயினும், மிகச் சோகங்கொண்ட வெனக்கு ஐந்து வருஷங்களானதுபோ லிருக்கிறது; அல்லும் பகலும் அவனையே நினைந்துகொண்டிருக்கின்ற எனக்குச் சோகம், நதிகளின் பிரவாஹத்தினது வேகத்தினால் கடல்நீர் மேலெழுந்து பெருகுவதுபோலப் பெருகுகின்றது-என்று பலவிதமாகக்கூறித் தம் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினார். அப்பொழுது கதிரவனும் வெப்பமற்ற கதிருடையவனாகி மறைந்தனன்; சந்தியும் நீங்கி இரவும் தோன்றிற்று. கோஸலையார் வாக்கியத்தினால் தேற்றப்பட்ட சக்கரவர்த்தியும் மிக்க சோகத்தினால் வருத்தப்பட்டவராகிக் கண் துயின்றனர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்திரண்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

இந்தச் சருக்கத்தில் (வனவாஸாயராமஸ்ய பஞ்சராத்ரோத்யகண்யதே என்று) சக்கரவர்த்தித் திருமகன் வனத்திற் கெழுந்தருளி, ஐந்துநாளே யானதா யிருக்கின்றது. ஐம்பத்தேழாவது சருக்கத்தில் (பரத்வாஜாபிகமனம் ப்ரயாகேசஸஹாஸநம்| ஆகிரேர்கமனந்தேஷாந் தத்ரஸ்தைருபலக்ஷிதம்) என்றும், (ததஸ்ஸாயாஹ்நஸமயே த்ருதீயேஹநிஸாரதி:| அயோத்யாம்ஸமநுப்ராப்ய நிராநந்தாந்ததர்சஹ) என்றும், ஸுமந்திரர் பெருமாள் திருச்சித்திர கூடம் வரையில் எழுந்தருளியதை யறிந்து, பின்பு புறப்பட்டு மூன்றாவது தினம் திருவயோத்தி சேர்ந்ததா யிருக்கின்றது. இவை எவ்வண்ண மொக்குமெனில், சொல்லுகிறோம்: பெருமாள் 'கங்காநதியைத் தாண்டி எழுந்தருளின தினந்தான் வனவாஸத்திற்கு முதல்; முதல் ராத்திரி பெருமாள் கங்கையின் தென்கரையில் மரத்தடியி லெழுந்தருளி யிருந்தது, இரண்டாவது பிரயாகத்தில் பரத்துவாஜாச்சிரமத்தில், மூன்றாவது யமுனாநதி தீரத்தில், நான்காவது சித்திரகூட மெழுந்தருளியது; நான்காவது தினம் உதயத்திலே பெருமாள் சித்திரகூட மெழுந்தருளுவதை யறிந்து சுமந்திரர் புறப்பட்டுச் சாயங்காலம் திருவயோத்தி சேர்ந்தது; ஆகவே இங்கு கோஸலையார் வாக்கியப்படி ஐந்தாவது தினமென்பதற்கு விரோதமில்லை; (த்ருதீயேஹநிஸாரதி:) என்பதற்குச் சுமந்திரர் புறப்பட்ட மூன்றாவது தினம் மாலையில் திருவயோத்தி சேர்ந்தாரென்றுபொருளன்று; புறப்பட்டதினம் பகல் மூன்றாவது யாமத்தில் திருவயோத்தி சேர்ந்தாரென்று பொருள்; என்று சிலர் கூறுகின்றனர்கள். வேறு சிலர் பெருமாள் திருவயோத்தியை விட்டுப் புறப்பட்ட தினம் முதலாகவே வனவாஸத்தின் கணக்கென்றும், ஸுமந்திரர் வந்ததினம் ஐந்தாவது தினமென்று கோஸலையார் சொல்லினால் ஏற்படுகின்றமையால், அக்கணக்கின்படி நான்கு தினங்களாகின்றனவே யன்றி ஐந்துதினமாகவில்லை யென்றும் மறுத்துரைத்து, பெருமாள் திருவயோத்தியை விட்டுப் புறப்

## அறுபத்துமூன்றுவது ஸர்க்கம்.

சக்கரவர்த்தி தாம் முன்பொரு ரிஷிபுத்திரனைக் கொலை செய்ததைக் கோஸலையாருக் குரைத்தது.

இராமலக்ஷ்மணர்கள் அரணியஞ்சென்ற ஆறுவது நாள் இராத்திரி இவ்வாறு விசாரமுற்றுத் துயில்கொண்ட தசரதசக்கரவர்த்தி புத்திர சோகத்தினுல் மனம் தவிப்புண்டு ஒரு முகூர்த்தகாலத்தில் துயிலொழிந்து அர்த்தராத்திரியில் கண் விழித்துக்கொண்டு பலவாறு சிந்திக்கலாயினர். இராமலக்ஷ்மணர்களை வனத்திற்குச் செல்லவிடுத்த விசனத்தினல், சூரியனை இராகு பற்றுதல்போல, அவர் மனத்தைப் பெருந்துயர மொன்று சூழ்ந்துகொண்

பட்டு முதல்ராத்திரி தமஸாநதியின் கரையிலும், இரண்டாவது ராத்திரி கங்கைக் கரையில் குஹப்பெருமா ளருகிலும், மூன்றுவது ராத்திரி தென்கரையின் மரத்தடியிலும், நான்காவது ராத்திரி பரத்துவாஜாச்சிரமத்திலும், ஐந்தாவது ராத்திரி யமுனைக் கரையிலும், ஆறுவது ராத்திரி திருச்சித்திரகூடத்திலும் எழுந்தருளி யிருந்தார். நான்காவது தினம் பரத்துவாஜாச்சிரமத்திலே பெருமாள் எழுந்தருளிய பொழுதே சித்திரகூட மெழுந்தருளப் போகின்றுரென்பதை யறிந்து, ஐந்தாவது தினங் காலையில் பெருமாள் அப்படியே புறப்பட்டதையும் அறிந்து, குஹனது தூதர்கள் வந்துரைத்தனர்கள். ஸுமந்திரர் மூன்று ராத்திரி யங்கிருந்து மருநாளுதயத்திற் புறப்பட்டு ஸாயங்காலத்தில் திருவயோத்தி சேர்ந்தனர். இஃது ஆறுவது தினமாதலின், கோஸலையார் ஐந்து ராத்திரிகள் ஆயினவென் றுரைப்பதற்கு விரோத மில்லையென்று பொருளுரைக்கின்றனர்கள். (ததஸ்ஸாயாஹ்நஸமயே த்ருதீயேஹநிஸாரதி:) என்பதில், (அஹநித்ருதீயே) என்பதற்குப் பகல் மூன்றுவது யாமம் என்று பொருள் கூறின் (ஸாயாஹ்நஸமயே) என்னும் பதம் பயனற்றதாகின்றது; ஆதலின், அதற்குப் புறப்பட்ட மூன்றுவது தினமென்றே பொரு ளுரைக்க வேண்டும்; சோகத்தால் குதிரைகளை இவர் தூண்டாமையால், குதிரைகளும் சோகங்கொண்டு மெல்ல நடந்தமையால், வர மூன்றுநாளாகுவதும் பொருந்தும்; அன்றியிலே (திவஸாந்) என்னும் பதம் மாத்திர மிருக்குமாயின், கபிஞ்சலாதிகரணத்தால் மூன்றுதினமேயென்று பொருள் கூறலாகும்; (பஹூந்) என்றிருப்பதால் அந்நியாய மிங்குப் பொருந்தாது; ஆதலின், ஸாரதி பெருமாள் திருச்சித்திர கூடத்திற் கெழுந்தருளியதையுந் தெரிந்துகொண்டே நாலைந்து தினம் அங்கிருந்து புறப்பட்டதாகவே பொருள் கூறவேண்டும்; ஆதலின், பெருமாள் ஸுமந்திரரை விட்டுப் பிரிந்து கங்கையைத் தாண்டி முதல் ராத்திரி மரத்தடியில், இரண்டாவது ராத்திரி பிரயாகையில், மூன்றுவது ராத்திரி யமுனைக் கரையில், நான்காவது ராத்திரி சித்திரகூடத்தி லெழுந்தருளி யிருந்தனர். ஐந்தாவது தினம் தூதர்கள் வந்து குஹப்பெருமாளுக்கு அந்தச் செய்தியை யுரைத்தது; ஆக ஐந்துதினம் வரையில், ஸுமந்திரர் அங்கிருந்து, ஆறுவது தினம் புறப்பட்டு அதற்கு மூன்றுவதாகிய எட்டாவது தினம் மாலையில் திருவயோத்தி சேர்ந்தது; அன்றைத்தினமே கோஸலையார் ஸ்ரீராமபிரான் வனவாஸம் ஐந்துநாளாயிற்றென்றுரைத்தது; அஃது பெருமாள் திருச்சித்திரகூடஞ் சேர்ந்த தினம் முதல் கணக்கிட்டுரைக்கப் பட்டனவே யன்றிப் புறப்பட்ட தினம் முதலன்று; ஆகப் பெருமாள் திருவயோத்தியை விட்டுப் புறப்பட்டுப் பத்துநாளாயிற்றென்றுஞ் சிலர் மொழிகின்றனர். இதில் கூறிய இரண்டாவதுபக்ஷமே மேலாகும்.

டது. அத்துயரத்தினால், அவர் பலவிதமாகச் சிந்திக்கையில், அவர்க்குத் தாம் முன்பு செய்த தீவினை யொன்று நினைவுவந்தது. அப் பாவத்தொழிலை நினைந்ததும் மஹாராஜர், புத்திரசோகத்தினால் வருந்துகின்ற கௌஸல்யா தேவிக்கு அதனை யுரைக்க வெண்ணி, அவளை நோக்கிக் கூறலாயினர் :

యదాచరతికల్యాణి శుభంవాయదివాశుభం।
తదేవలభతేభద్రే కర్తాకర్మజమాత్మనః॥
గురులాఘవమర్థానా మారంభేకర్మణాంఫలం।
దోషంవాయోనజానాతి సబాలఇతిహోచ్యతే॥

யதாசரதிகல்யாணி சுபம்வாயதிவாசுபம் ।
ததேவலபதேபத்ரே கர்த்தாகர்மஜமாத்மந: ||
குருலாகவமர்த்தாநா மாரம்பேகர்மணம்பலம் |
தோஷம்வாயோநஜாநாதி ஸபால இதிஹோச்யதே ||

ஓ கலியாணி, என் பிராணநாயகி! யாவனொருவன் நல்வினையையோ, தீவினையையோ, எதனைச் செய்கின்றனனோ, அவ்வவ்வினையின் பலனையே யவனடைவ னல்லது, வேறு பலனை யடையா னன்றோ? யாவனொருவன் தான் செய்ய முயன்றவினைப்பயன்களின் ஏற்றத்தையும் தாழ்மையையும், அவ்வினையின் எளிமையையும் வலிமையையும், அதனால் விளையும் நன்மையையும் தீமையையும், முதலிலே நன்காராய்ந் துணராமல் செய்கின்றனனோ, அவன் மூடனெனவே கூறப்படுகின்றனன். எவனாயினும் மாஞ்சோலையை யழித்துவிட்டுப் பலாசமரங்களுக்கு நீர் பாய்ச்சி வளர்ப்பனோ? முதலில் பலாசுகளின் பூவினைக்கண்டு இதற்குத்தக்க நல்லகனியும் உண்டாகுமென்றெண்ணி யொருவன் வளர்ப்பனே யாயினும், கடையில் அவன் கனியைக் காணாமல் துன்புறுவானன்றோ? அதுபோலவே, விளையும் பயனை யறியாமல் ஒருவினையைச் செய்பவன் கடைசியில் துன்பத்தையே யடைவான். அங்ஙனமே யானும் ஆலோசனை செய்யாமல் என்மகனைக் காடேறச் செல்லவிட்டு இப்பொழுது சோகங்கொண்டு வருந்துகின்றேன்; மாமரத்தை வெட்டிப் பலாசினையே வளர்த்தவனாயினேன்.

இத்துயர மனுபவிக்கும்படி யான் முன்புசெய்த பாபமொன்றுண்டு, அதனை உரைக்கின்றேன் கேள்: யான் இளமையில் பற்பல அஸ்திர சஸ்திரங்களையுங்கற்று சப்தவேதியென்னும் அருமையான பாணத்தையும் பெற்றேன். அதனால் 'இவ்விளங்குமாரன் ஒருருவையும் கண்ணுறாவிடினும், சப்தத்தைச் செவியுற்றே கட்புலனாகாதவுருவைக் கொல்லவல்ல சப்தவேதியென்னும் பாணத்தையுடையவன்' என்று யாவராலும் புகழப்பட்டவனாயினேன். அதனால் யான் செருக்குக்கொண்டு ஒருகொடிய பாவஞ் செய்தேன். சிறுவன் அறியாமையால் தானே விஷத்தையுண்டு வருந்துமாறு, யான் சுயமே கொடிய பாவஞ்செய்து (அத்யுத்கடை: புண்யபாபை ரிஹைவபலமச்நுதே) என்கிறபடி அதன்பயனை இம்மையிலேயே யநுபவிக்கலாயினேன்; அற்ப மனிதனொருவன் பின்வரும் பயனையுணராது பலாசின் பூவினைக்

கண்டு மோகங்கொள்வது போலவே, யானும் பின் விளைவதை யறியாது ஒரொலியைக் கேட்டு மோஹங் கொண்டு, கட்புலனுகாத பொருளைத் தொனி கேட்டடிப்பதாகிய தீமைசெய்தேன்; அத்தீவினையின் பயன் இங்கு வாய்த்தது. அஃதென்னவெனில், ஓ தேவி! முன்பு ஒருகால் உனக்கு விவாஹமாவதற்கு முன்னர் யான் பாலகுமாரனுகி இளவரசா யிருக்கையில், மதத்தையும் காமத்தையும் பெருக்கவல்ல மழைகாலம் நேர்ந்தது; கதிரவனும் கதிர்களினுல் நீர்களை வற்றச்செய்து, மாண்டோர்கள் திரியத்தக்க கொடிய தென்றிசையினை யடைந்தனன். உடனே வெம்மை யென்பது உள்ளடங்கிற்று; கறுத்திருண்ட நீருண்ட கொண்டல்கள் விண்டல மெங்கும் நிறைந்து திகழ்ந்தன; மண்டூகங்களும், சாதகங்களும், மயில்களும் மகிழ்ந்தன; பறவைகள் மழையினுல் நனைந்த சிறகுடையனவாகி, மூழ்கினபோல மிக வருந்தி, காற்று மழையினு லசைத்து நனைக்கப்பட்ட மரங்களி லடங்கின; பொழிந்தனவும், பொழிகின்றனவுமாகியுள்ள மழைநீர்களினுல் நனைக்கப்பட்ட மதயானையும், மலைபோலசைவற்றுக் கடல்போலக் கறுத்துத் திகழ்ந்து நின்றது; மலைகளினின்றும், சில விடங்களில் வெண்மையுள்ளனவாகியும், சில விடங்களில் செம்மையுள்ளனவாகியும், சில விடங்களில் கலக்கமற்றனவாகியும், சில விடங்களில் துகள் படிந்து கலக்கமுற்றனவாகியும் அருவிகள் பலவகைப்பட்ட பாம்புகள்போலப் பெருகின. மிகவும் இன்பந்தருவதான அக்காலத்தில் யான் வேட்டமாட விருப்புற்று வில்லும் கணையும் எடுத்துக்கொண்டு தேர்மீதேறிச் சரயூநதியின் கரையிற் சென்று, ஐம்புல ஆசையை அடக்காதவனுகி, அங்குத் துறைகளில் நீர் குடிக்க வரும் மஹிஷங்களையும், மதயானைகளையும், மற்றுமுள்ள புலி கரடி பன்றி முதலிய கொடிய விலங்குகளையும், அடித்துக் கொல்ல நினைத்து, அவ்வண்ணமே யடித்துக்கொண்டிருந்தேன்.

அப்பொழுது இரவுமாகி இருள் மூடியது. அவ்வேளையில், ஒரு ரிஷிகுமாரன் அங்குவந்து குடத்தில் நீரை மொள்ள, அஃது யானை நீர்குடிக்குந் தொனிபோ லொலித்தது; உடனே யான் அஃது யானையென்றே எண்ணி அவ்வொலியுண்டாகிய இடத்தையும் அவன் தூரத்தையும் ஊஹித்துக் குறியிட்டுச் சரந்தொடுத்து விடுத்தேன்; இவ்வண்ணம் யான் யானையே இலக்கென வெண்ணி விடநாகத்திற் கொப்பான வாளியை விடுத்தவுடன் அவ்விடத்தில் ரிஷியின் தொனி யொன்று கேட்டது; அந்த ரிஷி மார்பில் பாணத்தினு லடிக்கப்பட்டு; ஐயையோ வென்று கூவி நீரிலேயே விழுந்தனன். பின்பும் அங்கிருந்து, அந்தோ! என்போன்ற அஜாத சத்துருவான தவசியின்மீது கூரிய கணை வந்து வீழ்வதற்குக் காரணம் யாது? நான் இரவில் நீர்கொண்டு போவதன் பொருட்டே இங்கெய்தினேனே! என்னை யடித்தவன் யாவன்? ஏனடித்தனன்? யார்க்கு நான் என்ன தீங்கு செய்தேன்? யான் தவம் பூண்டு புலன்களை வென்று காட்டில் காய் கிழங்குகளைப் புசித்துப் பிழைத்துக் கொண்டிருக்கின்றேனே! என்னைப் போன்றவர்களையும் கொலை செய்யும்படி விதி யுளதோ? ஜடைதிரித்து மரவுரியுடுத்துப் பிழைக்கின்ற என்னைக் கொல்வதினுல் யார்க் கென்ன பயன்? யான் அவர்க்கென்ன பிழை செய்தேன்!

ஒரு பயனுமின்றித் தீமை விளைவிக்கத் தக்க இக்கொலையினை யார்தான் நல மென வுகப்பர்கள்! குருவின் பத்தினியைப் புணர்ந்த கொடும்பாவியை யாவ ராகிலு முகப்பரோ? என் உயிர் போனாற்போகிறது; யான் உயிர்மாய்ந் திறக் கின்றேனே யென்று சிறிதுந் துன்புற்றிலேன்; என் தாயினையும் தந்தை யினையும் நினைந்தே மிகத் துன்புறுகின்றேன். என் தாய் தந்தைக ளிரு வரும் மூப்பினர்களாகி, என்னால் நெடுநாளாகப் பாதுகாத் தளிக்கப்பட்டனர் களே! இப்பொழுது யானொரு கணையினால் அடிபட்டு இறக்கின்றேனே! யானிறந்த பின்னர் அவர்கள் எவ்வண்ணம் பிழைத் துய்வார்கள்? மதிகெட்ட வனும் பாவியுமாகிய யாவன் இவ்வண்ணம் யாங்கள் மூவரும் இறக்குமாறு செய்தனனோ! என்று கூவிப் புலம்பி யழுதனன்.

மிகப்பரிதாபமான அம்மொழி கேட்டவுடனே, பிரம்மஹத்திசெய்தேனே யென்று யான் மிகுந்த பயமும் துயரமுங்கொண்டு நடுங்கி வருந்தித் திகைத்துநின்றேன்; எனது கையினின்றும் கணையுடன் கோதண்டமும் நழுவித் தரையில் வீழ்ந்தது; யானும் சோகத்தினால் மதிமயங்கி மகிழ்வுகுன்றி ஒளி யிழந்து வருந்தி அவ்விடத்திற்குச் சென்றேன். ஆங்கு ஸரயூநதியின் கரையில் பாணத்தினா லடிபட்டு ஒரு ரிஷி குமாரன், ஜடை யவிழ்ந்து புரளவும், தண் ணீர்க்குடம் நீர் கொட்டுண்டு கவிழ்ந்து கிடக்கவும், உடம்பு துகளினாலும் இரத்தத்தினாலும் பூசப்பட்டு வருந்தவும், மிகப் பீடைகொண்டு படுத்திருக்கக் கண்டேன். அவனும் என்னைக்கண்டு யான் மிக நடுக்கங்கொண்டு வருந்து வதை யறிந்து, என்னை நோக்கினாலே எரிப்பவன்போல நோக்கி, 'ஓய் ராஜ னே! இவ்வனத்தில் வாழ்கின்ற என்னால் உனக்கென்ன தீங்கு செய்யப் பட் டது? என் தாய் தந்தையர்கள் கட்புல னழிந்தவர்களும், திறமை யற்றவர்க ளும், மூப்பினர்களும், மிக நீர் வேட்கைகொண்டவர்களும், என்னை யொருவ னையே தஞ்சமாக வுடையவர்களுமாகி யிருக்கின்றனர். அவர்களுக்குத் தண் ணீர்கொண்டு போவதன்பொருட்டே நானிங்கெய்தினேன்; யான் உன்னாலடிக் கப்பட்ட வளவில், அவ்விருவர்களும் கூட அடிக்கப்பட்டவர்க ளாயினர்களே! யானிறந்த பின்னர் அவர்களை யார் பாதுகாத் தளிப்பார்கள்? ஐயோ! அவர் கள் நீர் வேட்கையினால் மிக வருந்தி, குமாரன் தீர்த்தங்கொண்டு வருவா னென்று என்வரவை நெடுநேரமாய் எதிர்பார்த் திருப்பார்களே! ஐயோ! தாகத்தினால் அவர்கள் என்ன தவிக்கிறார்களோ! யானிவ்வண்ணம் சரத்தினா லடிபட்டுப் படுத்திருப்பதை என் தாய் தந்தையர்கள் உணராமல் மிகத்துன் புறுவ ரென்றால், சிறந்த தவத்திற்கும், பற்பல நூல்களைக் கற்றதற்கும் பயன் யாது மிலதன்றோ? அவர்கள் இச்செய்கை யறிந்தனராயினும், நடக்கக் காலும் காணக் கண்ணும் தேகத்தில் சக்தியுமில்லாத அவர்கள் என்செய்வார்? காற்று முதலியவற்றால் முறிக்கபபட்ட ஒரு மரத்தை மற்றொரு மரம் கண்ணுறினு மென்செய்யும்? ஓ ரகுகுலத்தரசே! ஆகலின், நீயே விரைவாகச் சென்று இச் செய்தியை என்தந்தையிடம் பணிந் துரைசெய்க; உரைக்கின் உன்மீது அவர் கோபங் கொள்ளார்; இல்லாவிடின், காட்டுத்தீ வனத்தைப்பற்றி எரிப்பது போல உன்னைக் கோபங்கொண் டெரிப்பர், இங்கெதிரில் ஒரு கொடி வழி

யிருக்கின்றதே, அதனைப் பற்றிச் செல்வாயாகில், எம்மாச்சிரமம் போய் சேர்வாய்; அங்கெய்தி இச்செய்தியை யுரைத்து அவரை நல்வார்த்தை சொல்லி வேண்டுக; இல்லாவிடின் அவர் உன்னைச் சபித்து விடுவார். என் மார்பில் புதைந்த இந்தபாணம், நதியின் வேகம் மணற்குன்றினில் தாங்கி யதனையறுத் தழிப்பதுபோல, என் இதயத்தை உபத்திரவப்படுத்து கின்றது; ஆதலின், இக்கணையினை மேலெடுத்து என்னை வருத்த மற்றவனாகச் செய்து செல்வாய்' என்று மொழிந்து வருந்தினன்.

அடி என் பிராணநாயகி! யான் அம்மொழியைக்கேட்டு மிகத் துயரங் கொண்டு, கணையை எடுக்கின் இவன் இறப்பான்; இவ்வண்ணமே செல்வேனாகில், மிகவும் அவஸ்தைப் படுகின்றான்; யாது செய்வோ மென்று மிகவும் சிந்தைகொண்டு முடிவு பெறாமல், சோகக் கடலில் மூழ்கித் திகைத்து நின்றேன். யானவ்வண்ணஞ் சிந்தையுற்றதை முனிகுமார னறிந்து, மொழிவதற்குந் திறமையின்றி மரணாவஸ்தை யடைந்திருந்தபோதிலும், தீரங் கொண்டு மிகுந்த வருத்தத்துடன் என்னை நோக்கி, சக்கரவர்த்தி! நீ என்னைக் கொலைசெய்தேனே யென்று துன்புறற்க; தீரத்தினால் சோகத்தை யுள்ளடக்கி மனந்தேறுக; பிரஹ்மஹத்தி செய்துவிட்டேனே யென் றஞ்சற்க; பிரஹ்மஹத்திதோஷம் உனக்குறாது; யான் அந்தண னல்லேன்; நீ மனக்கவலை யுறற்க; யான் சூத்ரஸ்திரீயிடத்தில் வைசியனுக்குப் பிறந்தவன்-என்றுரைத்து, அத்துயரத்தைப் பொறுக்க ஆற்றலற்றுத் தவித்தனன். யானும் அதுகேட்டுக் கிஞ்சித்துச் சோகந்தணிந்து, அந்தப் பாணத்தை யவன் மார்பினின்றும் மேலிழுத் தெடுத்தேன்; உடனே யவன் என்னைக் கண்ணுற் றஞ்சி யுயிரை விட்டனன். அவ்வண்ண மவன் மார்பினில் கூரிய கணையினாலடிபட்டு நீரினாலும் குருதியினாலும் நனைந்தவனாகி, நெடுநேர மழுது அடிக்கடி நெட்டுயிர்ப்பு விட்டு வருந்தியதைக் கண்ணுற்று யான் மிகுந்த விசனமடைந்தவனாயினேன் என்று மொழிந்து புலம்பினர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்துநான்காவதுஸர்க்கம்.

*சக்கரவர்த்தி கோஸலையார்க்குத் தமது சாபத்தை யுரைத்துச் சோகமடங் காமல் தம் மகனையே நினைந்து வானுலக மடைந்தது.*

தவசியைக் கொலைசெய்தேனே யென்று மிக வருந்தி இவ்வண்ணம் புலம்பிய சக்கரவர்த்தியார் கோஸலையாரை நோக்கி மீளவும் உரைக்கலாயினர்: கேளடி என் பிரியநாயகி! யானறியாமையால் அக்கொலை செய்து மிக வருந்தி மயங்கி, இனி யாதுசெய்யின் நலமுளதாகுமென்று மிகச்சிந்தைகொண்டு பிறகு அந்த ரிஷிகுமாரன் கொணர்ந்த குடத்தை யெடுத்து நீரை நிறைத்துக்

கொண்டு, அவனுரைத்தவழியே சென்று அவ்வாச்சிரமஞ் சேர்ந்தேன். அங்கு அக்குமாரனது மாதாபிதாக்கள் மிக மூப்பினர்களும், கட்புல னழிந்தவர் களும், திறமை யற்றவர்களும், தஞ்ச மற்றவர்களுமாகி, சிறகொடிந்த பறவை கள்போல மிக வருந்தித் தம் குமாரன் இதுவரையில் ஏன் வந்திலனோ வென்று அவனது கதைகளையேபேசி அவனையே எதிர் பார்த்துக்கொண்டு, அவன் குணங்களையே புகழ்ந் துரைத்துக்கொண் டிருந்தனர். எழுந்திருக்கவும் சக்தியற்றவர்களாய், என்பொருட்டாகத் தம் புத்திரனைக்காணும் ஆசையு மொழிந்து நாதனற்றவர்களா யிருக்கின்ற அவர்களை யான் கண்ணுற்று அரு கிற் சென்று, அவர்களது நிலையைநோக்கி, இவர்கள் எவ்வண்ணம் உய்வார் களோ? எவ்வண்ணம் துன் புறுவார்களோ? எவ்வண்ண மென்னைச் சபிப் பார்களோ? என்று, இருமடங்கு அச்சமும் சோகமுங் கொண்டு, மெல்ல மெல்ல அவரைக் கிட்டிச் சென்றேன்.

என் காலடி யோசையைக் கேட்டு அந்த ரிஷி தன் மகன் வருவதாகவே நினைத்து என்னை நோக்கி, அடா என்னருமைப் புதல்வா! நீ இதுகாறும் ஏன் தாமஸஞ் செய்தனை? விரைவாக நீர் கொணர்ந்து தருக; நீர்விளையாட்டுக் கொண்டு இதுவரையில் தாமஸஞ் செய்தனையோ? உன் மாதா இங்கே நீர் விருப்புற்று மிக வருந்துகின்றனளே, விரைவாக வந்து நீர் கொடு; யாங்கள் மூப்பினர்களும், திறமையற்றவர்களு மாதலால், ஒருகால் உன் தாயாயினும் யானுயினும் வன்மொழி மொழிந் திருக்கினும், சினமுறாது பொறுத் தகமகிழ் வாய்; கதியற்ற வெங்களுக்கு நீயே கதி; கட்புலனற்ற வெமக்கு நீயே கண்ணு கின்றனை; எம்முயிர்கள் உன்மீதே ஆயத்தங்களாயின; இனியன மொழிந்து எனெம்மை 'மகிழ்விக்கின்றிலை என்று கூவி வேண்டி யழைத்தனர். அது கேட்ட யான் மிக்க பயங்கொண்டு பதிலுரைக்க வாயெழாமல் மயக்குற்றேனு யினும், தீரங்கொண்டு அம்முனியை நோக்கி, தவச் செல்வரே! அடியேன் தேவரீர் குமாரனல்லேன்; தசரதனென்னும் அரசன்; பக்வானே!' நல்லோர் பழிக்கத் தீச்செயல்செய்து, சுயங்கிருதாநர்த்தமான துன்பமடைந்தேன். யான் வில்லெடுத்துக்கொண்டு கொடிய விலங்குகளை யடிப்பதன் பொருட்டுச் சரயூநதியின் கரையில் வந்து பற்பல விலங்குகளை அடித்து வருகையில், துறைமுகத்தில் தேவரீர்குமாரன் குடத்தில் நீர்மொள்ளுந் தொனியைக் கேட்டு, யானை நீர் குடிப்பதாக வெண்ணி, ஓர் கணையைத் தொடுத் தெய்தேன்; உடனே யங்கெய்திப் பார்க்கையில், தேவரீர்குமாரன் அக்கணையினுல் மார்பில் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்து கிடந்தனன்; யான் அறியாமல் தொனி யைக் கேட்டே யானையென் றெண்ணி யடித்தே னல்லது, மனம்றிந் தடித்தி லேன்; அநந்தரம் தேவரீர் குமாரனது வாக்கியத்தினுலேயே யான் அக்கணை யினை மார்பினின்றும் பேர்த்தேன்; உடனே யவனங்கே உயிர்நீத்துப் பொன் னுலக மடைந்தனன். நீங்க ளிருவரும் கட்புல னழிந்தவர்களே யென்றும், மூப்பினரே யென்றும், இனி எவ்வண்ண முய்வீர்களோ வென்றும் அவன் புலம்பி யிறந்தனன். யானறியாம லிப்பிழை செய்தேன், தேவரீர் பொறுத் தருள்க என்றிவ்வண்ணமுரைத்து வேண்டினேன். அம்முனியும் எனது

கேட்டவுடனே கண்ணீர் விட்டுப் புலம்பிச் சோகத்தை யடக்கத் திறமையின்றி, என்னை நோக்கி, அடா தசரதா! நீயே நேராகவந்து இச்செய்தியையுரைத்திராயாகின், உன்தலை யாயிரஞ் சிதறுண்டு வெடித்துவிடும், க்ஷத்திரியன் வானப்பிரஸ்தனைக் கொலைசெய்த தென்பது, அவன் தேவேந்திரனாகிலும், அவனை யவ்வதிகாரத்தினின்றும் வீழ்வித் தழிக்கும்; பிரஹ்மாதியாகிய சிறந்த தவமுடைய ரிஷியை யாவனொருவன் கொலைசெய்யக் கருதி, மனமறிந்து, ஆயுதத்தை யெய்கின்றானோ? அவன் சிரம் பல சிதறுண்ண வெடிக்கு மென்பதி லையமில்லை; நீயும் அறியாமல் இக்கொலை செய்தமையால், பிழைக்கின்றனை; அறிந்து செய்திருப்பாயாகில், இப்பொழுதே இக்ஷ்வாகுவின் குலமே யழிந்துவிடும்; நீ யழிவா யென்பதில் கேட்கவேண்டுமோ? என்று, முனிந் துரைத்து, மீளவு மென்னை நோக்கி, அடா வேந்தா! எங்களை என் மகன் எங்கே இறந்திருக்கின்றனனோ? அவ்விடத்திற் கழைத்துக் கொண்டுபோய்ச் சேர்க்கக் கடவை. அவ்விடத்தில் பாணத்தா லடிபட்டுக் குருதியில் நனைந்து அவிழ்ந்து பரவி யசைந்த மரவுரி கூந்தல்களை யுடையவனும், லோகாந்தர மடைந்தவனுமாகிப் புவியில் படுத் திறந்து கிடக்கின்ற எம்மைந்தனைக் கண்ணுற விரும்புகின்றோமென்று மொழிந்தனர். உடனே யானவர்களை யழைத்துக்கொண்டுபோய் அந்தக் குமாரனருகி லுட்காரவைத்து, அவர்கள் கைகளைப் பிடித்து, அக்குமாரனைத் தடவக் காட்டினேன்; உடனே யவ்விருவரும் பிள்ளையைத் தடவிப் பார்த்து, அவ்வுடலின்மேல் வீழ்ந் தழுது புலம்பினர்கள். அப்பொழுது அவன் தந்தை யப்பிணத்தை நோக்கி, அடா எம்மருமைத் திருக்குமாரா! இப்பொழு தெம்மைக் கண்டு, நீ ஏன் பாதம் பணிந்திலை; ஏன் இன்மொழி மொழிந்திலை; அடா புதல்வா! தரையில் படுத் துறங்கு கின்றனையோ? அன்றி, சினங்கொண்டு பேசுகின்றிலையோ? யானுனக்குப் பிரியமுண்டயே னல்லனாகிலும், தாயையாயினுங் காண்; அடா என்னருமை மைந்தா! ஏனென்னைத் தழுவிக் கொள்ளுகின்றிலை; இனிமையாக மொழியாய்; இவ்வண்ணம் நீ பேசாம லிருப்பையாகில், மற்று யாவன் பற்பல கலைகளைப் பயிலவுஞ் செவியுற்று மகிழ்வோம்? யாவன் காலையி லெழுந்து நீரிலாடி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, புத்திர சோகத்தினால் வருந்துகின்ற எம்மைப் பணிவிடைசெய்து மகிழ்விப்பன்? ஒரு செயலுஞ் செய்யத் திறமையற்ற என் பொருட்டு யாவன் காய் கனி கிழங்கு முதலிய நல்லுணவுகளைக் கொணர்ந் தளித்துப் பசியாற்றுவான்? உன்மீது மிக வன்புடையவளும், கட்புலனற்றவளும், திறமை குன்றியவளு மாகிய இந்த உன் மாதாவை யான் எவ்வண்ணம் பாதுகாத் தளிப்பேன்? அடா என் மகனே! நீ இப்பொழுது என்னை விட்டு யமன் வீடு செல்லற்க நிற்க; நாளைத் தினம் என்னுடனும், தாயுடனுங் கூடியே மகிழ்வுற்றுச் செல்வாய்; யாங்க ளிருவரும் காட்டிடையில் திக்கற்றவ ராதலின், நீ சென்றவுடனே உன்னைத் தொடர்ந்து யமலோகம் சேர்வோ மல்லது,

இங்குத் துன்புற் றுய்யோம்; அங்கு யமதர்மராஜனையுங் கண்டு தர்ம தேவா! எம்மீ தருள் செய்வாய், இப்புதல்வன் எம்மைப் பாதுகாத் தளிக் கக் கடவன். நீயே இவ்வுலகினுக் கிறைவ னாதலின், இப்பிள்ளையை எமக் களிக்க; இத்தன்மையனாகிய எனக் கிவ்வொரு வரமளித் தருள்க; என்று வேண்டிக் கொள்வேன்; என்றிவ்வண்ணம் பலவாறாகப் புலம்பி மீளவும், மகனை நோக்கி, அடா என் புத்திரா! பாவச் செயலினனாகிய இந்த க்ஷத் திரியனால் நீ கொல்லப் பட்டமையால், முற்பிறப்பில் நீ ஏதேனும் பாவஞ் செய் திருக்கினும், அப்பாவமுந் தீர்ந்து தூய்மையனாயினை; ஆதலின், எனது ஸத்தியத்தினால் போர்முகத்தில் படையெடுத்துப் பின் செல்லாது போர்செய் திறந்தவர்க ளெவ்வுலகினை யடைகின்றனர்களோ? அவ்வுல கினையே நீயும் அடைந்து மகிழ்ச்சியுற்று நெடுநாள் வாழ்வுறக் கடவை. அன்றியில், ஸகரமஹாராஜன், சைப்பியன், திலீபன், ஜனமேஜயன், நஹு ஷன், துந்துமாரன், இவர்கள் எக்கதியினை யடைந் தனர்களோ? வேத மோதி யொழுகிய நல்லோர்க்கும், சிறந்த தவஞ்செய்தோர்க்கும், எக்கதி வாய்க்கின்றதோ? பூதானஞ் செய்தவர்களும், எப்பொழுதும் அறாமல் செந்தீவளர்ப்போர்களும், பரத்தையரைக் கனவிலும் காமுறாது, தம்மனைவி யரை யன்புடன் மகிழ்விப்பவர்களும், எக்கதி பெறு கின்றனர்களோ? ஆயிரங் கோதானஞ் செய்தோர்க்கும், தாய் தந்தைகளுக்குப் பணிவிடை செய்து பாதுகாத் தளிப்போர்க்கும், பிரயாகம் முதலிய தீர்த்தங்களிலும், அக்கினியிலும், ஒரு விருப்பத்தினா லுயிரை விடுபவர்களுக்கும், எக்கதி விதிக்கப் படுகின்றதோ? அவ்வக் கதிகளை யடையக் கடவை. எமது குலத்திற் பிறந்தோன் நரகில் விழான்; யாவனொருவன் உன்னைக் கொலை செய்தனனோ? அவனே நரகில் வீழ்வான்; என்றிவ்வண்ணம் பலமுறை யுரைத் தழுது புலம்பினர். பின்னர் தேர்ந் தெழுந்து, பத்தினியுடன் அக் குமாரனுக்குச் செய்யத்தக்க கடன்களைச் செய்து முடித்தனர். அப் பொழுது அக்குமாரன் திவ்விய தேஹந் தரித்து, தேவேந்திரனுடன் திவ்விய விமானமேறி, வானுலகம் செல்ல முயன்று, இந்திரனுடன் கூடித் தாய் தந்தைகளை நோக்கி, மனந்தேற்றி, எந் தந்தையர்களே! தேவர்களுக் கடியேன் பணிவிடை செய்த நற்செயலினால், அடியேன் சிறந்த நற்கதி யடைந்தேன்; தேவர்களும் விரைவில் என்னருகில் வந்து சேர்வீர்க ளென்று உரைசெய்து, அவ்விமானத்துடன் இந்திராதியர்களால் பூஜிக்கப் பட்டவனாகி, தேவலோகம்போய்ச் சேர்ந்தனன். அம்முனியும், பாரியை யுடன் நீர்க் கடன்களையும் முடித்து விட்டு, பயபத்தியுடன் கைகுவித்து நிற்கின்ற என்னை நோக்கி, அடா தசரத ராஜனே! என் மகனை ஒரு கணை யினா லடித்துக் கொலைசெய்தனை யாதலின், என்னைக் கொலை செய்யக் கடவை. இப்பொழு திறப்பதில் சிறிதுந் துன்புற்றிலேன்; என் மகனை நீ யறியாமல் கொன்றமையால், யானும் உன்னைச் சபிக்கப் போகின்றேன்; அடா யானிப்பொழுது புத்திரசோகத்தினால் மரணமுறும்படி நீ செய்த்

மையால், நீயும் புத்திர சோகத்தினால் மரணமுறக் கடவை. க்ஷத்திரியனாகிய உன்னால் அறியாமையால், என் குமாரன் கொலைசெய்யப் பட்டமையால், உனக்குப் பிரஹ்மஹத்தி நேர்ந்திலது; இத் தன்மையதாகிய சோகம் உனக்கும், கொடையாளனுக்குக் கொடையென்பது விளைவில் நேர்வதுபோல நேரும்; என்றிவ்வண்ணம் தீனமாகப் புலம்பிப் பத்தினியுடன் சிதையில் படுத்தெரிந்து பொன்னுலக மடைந்தனர். இப்பொழுது யான் மிகத் துன்பமுற்றுச் சிந்தைகொண் டிருக்கையில், இஃது என் நினைவில் தோற்றியது; அடி என் பிராணநாயகி! யான் இளமையில் செய்த அத்தீச்செயலின் பயன் இப்பொழுது நேர்கின்றது; அபத்தியஞ் செய்து கொண்டு நல்லன்னத்தை யுண்ணினும், பிணி வளரு மல்லது, நீங்குமோ? அவ்வண்ணம் யான் முன் னித்தீச்செயலைச் செய்துவிட்டுப் பின் யாது செயினும், அப்பயன் வாய்த் தனுபவிக்காமல் தீருமோ? யானிப்பொழுது புத்திரசோகத்தின லிறக்கப்போகின்றமையால், அம்மஹாமுனியின் சாபம் பலிக்கின்றது; அடி கோஸலையே! யானுன்னையும் கண்களால் நன்கு காண்கிலேன்; கைகளா லென்னை நன்கு பற்றிக் கொள்ளா யென் றுரைத் தழுது; மீளவும் கௌஸலையாரை நோக்கி, அடி என் பிரிய மனைவி! மிகவுங் கொடிய யான் என்னரும் புதல்வனைக் காடேறச் செல்லவிட்டேனென்பது எனக்கு மிகத் தகும்; என் திருமகன் என் மொழி கேட்டு மறுமொழி கூறாமற் சென்றன னென்பதும் அவனுக்கே தகும்;—

దుర్వృత్తమపికఃపుత్రం త్యజేద్భువివిచక్షణః
కశ్చప్రవ్రాజ్యమానోవా నాసూయేత్పితరంసుతః॥

துர்வ்ருத்தமபிகஃபுத்ரந் த்யஜேத்புவிவிசக்ஷணஃ
கச்சப்ரவ்ராஜ்யமானோவா நாஸூயேத்பிதரம்ஸுதஃ.

அறிவுள்ள யாவனாயினும், என்னைப்போல மகன் மிகத் தீச்செயலினனாயினும், அவனைக் காடேறச் செல்ல விடுவனோ? தந்தையால் காடேறச் செல்ல விடப்பட்ட எந்தப் புத்திரனாயினும், தந்தையினிடத்தில் அஸூயை கொண்டு மறுத் துரையானோ? இப்பொழுது என் திருமகன் இங்கெய்தி என்னைத் தடவித் தழுவிக் கொள்வானோ? கனவிலாயினும் வாய்ப்பனோ? யமலோகஞ் சென்ற மனிதர்கள் என் திருமகனை எப்படி காண்பார்கள்? காணார்களோ? அடி கோஸலையே! யான் உன்னைக் காண்கிலேன்; எனக் குணர் வழிகின்றது; இந்த யமதூதர்களும் வந்தென்னைத் துரைப்படுத்து கின்றனர்கள். யானிவ்வண்ணம் இறக்குங் காலையிலும், தருமமறிந்தவனும், ஸத்திய முடையவனும், உண்மையாகிய தோளாண்மை யுடையவனுமாகிய என் திருமகனைக் காணப் பெற்றிலேனே? இதைவிட எனக்குத் துன்பமென்பது முளதோ? என் திருமகனைக் காணாமையா லுண்டாகிய சோகத்தீயென் னுயிரினை முதுவேனிற் பருவத்தில், வெயில் நீரைச் சோஷிக்கச்

செய்வதுபோலச் சோஷிக்கச் செய்கின்றது ; பதினன்காண்டுந் தீர்ந்து, பதினைந்தாவ தாண்டில் திரும்பி எழுந்தருளிய என் திருமகனுடைய அழகிய காதணி விளங்குவதும், தாமரை யிதழ்போன்ற திருக்கண்களை யுடையதும், மிக வழகிய புருவ முடையதும், குருக்கத்தி முகிழ்போன்ற பற்களையும், எள்ளுப்பூப் போன்ற நாசியையும் உடையதும், புன்னகை யுடையதுமாகிய திருமுக மண்டலத்தை யாவர் காண்பார்களோ ? அவர்கள் மனிதர்க ளல்லர் ; தேவர்களே யாவார்கள். முழுமதிபோலத் திகழ்ந்தும், தாமரைபோல மலர்ந்து, மணங் கமழ்ந்து முள்ள என் திருமகன் திருமுக மண்டலத்தைக் கண்டு மகிழ்வுறுவார்க ளல்லரோ ? மிக நல்வினையினர்கள். வனவாஸந் தீர்ந்து மீண்டெழுந் தருளி வக்ரகதியினை விட்டு, நல்வழி சேர்ந்த சுக்கிரனைப்போலத் திகழ்ந்து, திருவயோத்தி சேர்ந்த என் திருமகனைக் கண்டவர்க ளல்லரோ ? இன்புறுவார்க ளென்று நினைந்து நினைந் தழுது, மீளவுங் கோஸலையாரை நோக்கி, அடி என் பிராண நாயகி ! என் மனம் மோஹங்கொண்டு மிக வருந்துகின்றது ; தொனி, பரிசம், உருசி, உருவம், மணம், இவைகளி லொன்றினையு முணர்கின்றிலேன் ; புலன்க ளைந்து மழிந்தன ; எண்ணெயற்ற பின்னர்த் தீபத்தின் ஒளிகள் முன்போலத் திகழுமோ ? நதியின் வேகம் கரையினைக் கரைப்பதுபோல இத்துன்பம் என்னைக் கரைத் தழிக்கின்றதென் றுரைத்துத் தன் திருமகனை யுத்தேசித்து, அந்தோ ? ராகவா ! அந்தோ ? நீண்டுருண்ட திருத்தோளா ! அந்தோ ? என் துயரந் தீர்த்தருளவல்ல கோமானே ! அந்தோ ? தந்தை யிடத்தில் மிகப் பிரிய முடையோனே ! அடா எனக்குத் தஞ்சமாகியவனே ! அடா என் திருமகனே ! யானிப்பொழு திறக்குங் காலையில் இங்கிராமல், எங்கெய்தியிருக்கின்றனையென்று கூவிப் பின்னும் அடி கோஸலராஜன் திருமகளே ! யானிப்பொழு திறக்கின்றேன் ; அடி ஸுமித்திரை ! இறந்து விடுகின்றேன் ; அடி பாவி சண்டாளி கைகேயி ! குலத்தைக் கெடுத்த கொடும்பாவீ ! உன்னால் இறக்கின்றே னென்று புலம்பிக் கோஸலையார் ! ஸுமித்திராதேவி ! இருவரருகிலும், உயிர் வாழ்வின் முடி வடைந்தனர். சக்கரவர்த்தியார் இவ்வண்ணந் தம் சாபத்தை யுரைத்துத் திருமகனை நினைந்து புலம்பி, அன்றிரவு இரண்டுயாமம் சென்றபின், மொழியற் றெப்பொழுது ஒழிந்தனரோ ? அப்பொழுதே யவர் உயிரை விட்டுத் துயில் கொண்டவர்போலப் படுத்திருந்தனர்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்துநான்காவது சருக்கம் முற்றிற்று.

---

வைசியனுக்குச் சூத்திரப் பெண்ணிடத்தில் பிறப்பவன் கரணனென்னும் ஜாதியுடையவனுகின்றான். அவனுக்கு வேதாதிகள் ஓதவிதியின்மையால், அவன் நித்தியகருமம் செய்ததாகவும், ஹோமம் பண்ணியதாகவு மிருக்கின்ற தொக்குமோ

## அறுபத்தைந்தாவதுசருக்கம்.

### சக்கரவர்த்தியார் இறந்ததை யுணர்ந்து யாவரும் புலம்பியது.

---

அநந்தரம் இரவு நீங்கிப் பொழுது விடிந்த பின்னர், மறுநாளுதயத்தில் ஸூத மாகதவந்திகளும், மங்கள பாடகர்களும், பாடுவோர்களும், சக்கரவர்த்தியார் திருமாளிகை சேர்ந்து, வெவ்வேறாக சக்கரவர்த்தியைப் புகழ்ந்து பாடித் துதி செய்கையில், அவ்வொலி எங்கும் பரவி யொலித்தது ; தாளமுறையின்படி கைகளினால் பலவகை வாத்தியங்களை வாதிக்க வல்லவர்களும், யாவரும் வியப்புறத்தக்க நற்செயல்களைக் கவியாகப் பாடினர்கள் ; அவ்வொலியாலும், அவ்வரண்மனையுள் கூடுகளிலும், நீடங்களிலும், மரங்களிலு மிருக்கின்ற பறவைகளெல்லாந் துயிலுணர்ந்து தொனி செய்தன ; பிராஹ்மணர்கள் புண்ணிய கதையும், காயகர்கள் வீணாநாதமும், சக்கரவர்த்தியார் விஷயமாகிய பதங்களின் கானதொனியும், ஒன்று சேர்ந்து அவ்வரண்மனை யெங்கும் நிறைந்தன ; உடனே பெண்கள் அலி கூனர் குறளர் முதலிய அரண்மனையுள் புகத்தக்க பரிசாரகர்கள் தூய்மையராகிப் பொற் குடங்களில் நிறைந்துள்ள ஹரிசந்தனஞ் சேர்ந்து, மணங்கமழு நன்னீர்களையும், மற்றும் மங்கள வஸ்துக்களையும், சித்தஞ்செய்து நின்றனர்கள். இவ்வண்ணஞ் சக்கரவர்த்திக்குச் சித்தஞ் செய்யத்தக்க மங்களத் திரவியங்கள் யாவும், எல்லா லக்ஷணங்களையு முடையனவும், விதியின்படி பூஜிக்கப்பட்டனவும், நற்குணங்களை யுடையனவாகித் திகழ்கின்றனவுமாக விளங்கின ; அப்பொழுது யாவரும் வெய்யோ னுதயமாகு மளவுங் காத்திருந்தும், சக்கர

---

வெனின், அவனுக்கு வைதிக மந்திரங்களால், நித்திய கருமங்களும், ஓமமு மில்லையாயினும், தாந்திரிகமாக உளதென வுணர்க. (நமஸ்காரேணமந்த்ரேண பஞ்சயஜ்ஞான்ஸஹாவயேத்) என்று, சூத்திரனுக்கும், ஹோமாதிகாரம், தாந்திரிகமாயுளதென விதியிருக்கின்றமையால், அவனை விடச் சிறந்த கரணனுக்கு அவ்வதிகாரம் உளதென்பதில் ஐயமென்ன? .

ரிஷி குமாரன் ரிஷி யிருவரும், பிரஹ்மஜ்ஞானிகளா யிருக்க ; இக்குமாரன் ஆயுதப்பயிற்சி யுற்றவர்களது கதியை யடையும்படி கோரிய தென்னெனில், (த்வாவிமௌபுருஷௌலோகே ஸூர்யமண்டலபேதிநௌபரிவ்ராட்யோகயுக்தச்ச சரேணபிமுகோஹத:) என்று, யோகியும், போரில் இறந்தவனும், ஒரே லோகத்தை யடைகின்றனர்கள். என வசன மிருப்பதால் விரோத மில்லை.

இதில் ஜனமேஜய னடைந்த கதியையும் அடைகவென்றிருக்கின்றது; ஜனமேஜயன், பரீக்ஷித்து மஹாராஜன் குமார னாதலால், அவன் கலியுகாதியிலேயே யிருந்தமையால், இவனை முன் திரேதா யுகத்தில், எவ்வண்ணங் கவி கூறினரெனில், இவன் வேறொருவனே யன்றி, யவனல்லனென வுணர்க.

வர்த்தியார் விழித்திலராதலின், ஏனினும் சக்கரவர்த்தியா ரெழுந்திலர்? துயிலே கொண்டனரோ ? மயலே கொண்டனரோ ? நெடுந் துயிலே கொண்டனரோ ? என்று, சங்கை கொண்டனர். அப்பொழுது சக்கர வர்த்தியா ரருகில் படுத்திருந்த வனிதையர்கள் வந்தும், விநயத்தினாலும், நீதியினாலும், தூரநின் றெழுப்பினர்களே யன்றி, இவர் படுக்கையைக் கிட்டித் தொட் டெழுப்பி யிலர் ; ஆயினும், இவர் துயில்கொண்டனர்போ லிலரோ ? இறந்தனரோவென் றவர்க ளையமுற்று, அலைகள் மோதுந் தோறும், புல்லின் நுனி நடுங்கி யசைவதுபோல நடுக்குற்று வருந்தினர் கள். உடனே யவர்கள் மஹாராஜனை நன்றாகக் கண்ணுறுகையில், எவ் வண்ணஞ் சங்கை கொண்டனரோ ? அதன் நிச்சயம் பிறந்து புலம்பினர் கள். கோஸலையார் ! சுமித்திராதேவி ! இருவரும், புத்திர சோகத்தால் நெடுநேரம் விழித்துத் துயின்றமையால், அக்காலையில் அவர்களும் விழித் திலர் ; அப்பொழுது கோஸலையார் சோகத்தால் மிக வருந்தி, முகவொளி குன்றி, இளைத்து, உற்பாத காலையில் தோற்றுந் தூமகேதுவால் மறைக் கப்பட்ட விண்மீன்போலத் திகழ்ந்திலர் ; மற்ற ஸ்திரீக ளெல்லோரும், மஹாராஜரருகில் கோஸலையாரும், அவரருகில் ஸுமித்திரா தேவியும் படுத்து, முக வொளியற்றுத் துயில்வதையும், சக்கரவர்த்தியார் துயின் றவராகியே நெடுந்துயில் கொண்டதையு மறிந்து, கூவி யழுதனர்கள். காட்டிடையில் யூதபதி யிறக்கையில், யானைப்பேடுகள் கூவிச் சூழ்வது போலச் சூழ்ந்து கூவுகின்ற அவர்களது அழுகுரலைக் கேட்டுக் கோஸலை யார் ஸுமித்திரையா ரிருவரும் கண்விழித்து, மஹாராஜனைக் கண்ணுற் றும், தொட்டெழுப்பியும், எழுந்திராம லிறந் திருப்பதை யறிந்து, ஹா பிராணநாதா ! என்று, கூவித் தரையில் வீழ்ந்து, புரண்டு, துகள் படிந்து, விண்ணினின்றும் வீழ்ந்த விண்மீன்கள் போலத் திகழ்ந் திலர் கள். இவ்வண்ணம் இவர்கள் வீழ்ந் தழுவதையுங் கண்டு, கைகேயி முத லிய தேவிகளும் வீழ்ந்து, மயல்கொண் டழுதனர்கள். இவ்வாறு தேவிக ளெல்லோருங் கூடி யழுகையில், அவ்வொலியால் அவ்வரண்மனை முழு தும் பிரதித்தொனி பொருந்தி யொலிக்கச் செய்கையில், வானுலக மடைந்த சக்கரவர்த்தியாரது திருமாளிகை முழுதும், அச்சங்கொண்டும், நடுக்குற்றும், தீனமாகப் புலம்பியும், வருந்தியும், இறந்த மஹாராஜனைச் சூழ்ந்து, ஒருவர்க் கொருவர் கைகளைப் பற்றிக்கொண்டு, சக்கரவர்த்தி தேவிகள் யாவரும் அநாதைகளாகிக் கூவிக் கேவிப் புரண் டுருண் டழுது புலம்பினர்கள்.

அயோத்தியாகாண்டத்தில் அறுபத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## அறுபத்தாறுவது சருக்கம்.

### சக்கரவர்த்தியார் தேவிகள் முதலிய் வனிதையர்க ளெல்லோரும் புலம்பியது.



அநந்தரம் அணைந்த அக்கினி போலவும், நீரற்ற பெருங்கடல் போலவும், ஒளிகுன்றிய வெய்யோன் போலவும், பொன்னுலக மடைந்து, திகழ்வற்றுக் கிடக்கின்ற சக்கரவர்த்தியாரைக்கண்ணுற்றுக் கோஸலையார் பர்த்தாவின் சிரத்தை யெடுத்து, மடியில் வைத்துக் கொண்டு, கண்ணீர் பெருக்கிக் கைகேயியை நோக்கி, அடி பாவி கைகேயீ ! இப்பொழுது உனது கோரிக்கை யீடேறிற்று ? இனிப் பகையற்றுக் கைம்பெண்ணாகி, இவ்விராஜ்ஜியத்தை யாண் டின்புற்று மகிழ்க ; அடி கொடியாளே ! தீச் செயலினளே ! நீ ஒரே பிடிவாத முடையளாகி, பர்த்தாவையுந் துறந்து கொன்றனையே ? என் திருமகன் என்னை விட்டுக் காட்டுக் கெழுந்தருளி விட்டனன். பர்த்தாவோ வானுலக மடைந்தனர். ஆதலின், கொடிவழி யில் துணையற்றவள்போல யான் ஒரு பொழுதும் உயிர்வாழ விருப் புறேன் ;—

భర్తారంతంపరిత్యజ్య కా స్త్రీ దైవతమాత్మనః
ఇచ్ఛేజ్జీవితుమన్యత్ర కైకేయ్యాస్త్యక్తధర్మణః||

பர்தாரந்தம்பரித்யஜ்ய காஸ்த்ரீதைவதமாத்மனஃ
இச்சேஜ்ஜீவிதுமந்யத்ர கைகேய்யாஸ்த்யக்ததர்மணஃ.

கற்புடைய யாவள் தனக்குத் தெய்வமாகிய பர்த்தா! இறந்த பின்னர், அவருடன் அநுமரணஞ் செய்யாமல், அவரை விட்டு விட்டுப் பிழைத் திருக்க விருப்புறுவள் ? தருமத்தை முற்றுந் துறந்த இந்தக் கைகேயி யொருத்தியே பர்த்தாவைத் துறந்து, உயிர்வாழ விருப்புற்றன ளந்தோ ? பொருளாசை கொண்டவன் விஷந் தீண்டிய அன்னத்தையும், எறிய மனம் வராமல், அதைத் தின்பதினால் வருந் தீங்கினையும் அறியாமல், அதைப் புசிப்பது போலவும், எட்டியைத் தின்றவன் விஷத்தினா லுண் டாகுந் தோஷங்களை யறியாமல், விஷ மேறுமையால், பயமற் றிருப்பது போலவும், இக்கைகேயியும், கூனியினால் பொருளாசைகொண்டு, இதனால் விளையுந் தீங்குகளையு மறியாமல், பயமு மின்றி, இந்த ரகுகுலத்தையே கெடுத்தனளே பாவீ ? முன்பு கைகேயீ ! இவ்விரண்டு வரங்களையும், கேட்டுக் கொள்ளாம லிருக்கையிலே, இப்பொழுது இவைகளையே வர மாகக் கொடுத்து, சக்கரவர்த்தியார் என் திருமகனைக் காடேற வோட்டின ரந்தோ ? இச்செய்தியை ஜனக சக்கரவர்த்தியுங் கேட் டென்போலவே

அவளை நோக்கி, அடி ஜனகராஜன் திருமகளே! நீ இந்தச் சுயம்வரக் கதையினை நிகழ்ந்தவாறு மதுரமாகக் கூறினை, இதனால் யானும் மிக மகிழ்ந்தேன்; வெய்யோன் மறைந் திரவை நிகழ்வித்தனன்; பகலின் உணவின் பொருட்டு அங்கங்குச் சென்று மாலைப்பொழுதில் உறங்குவதன் பொருட்டுக் கூடில்வந்தடைந்த பறவைகளின் ஒலி மிக வொலிக்கின்றது; இந்த முனிவர்களும் நீரிலாடிப் பூர்ணகலசங்களைக் கையிலேந்திக் கூடி வருகின்றனர்கள்; ரிஷிகளால் செய்யப்பட்ட அக்கினி ஹோத்திரங்களின் புகை மாடப்புறுவினுடல்போலச் சிவப்புற்றதாகிக் காற்றினால் மேலெழுகின்றது; இருள்மூடி யிருக்கின்றமையின், இலை யுதிர்ந்த மரங்களும், இலைகளடர்ந்தனபோலத் தோற்றுகின்றன; ஆதலின், இவ்விடத்தில் திசைகளும் காணப்படுகின்றில; இரவில் திரிகின்ற ஜந்துக்களும் எங்கும் திரிகின்றன; தபோவனத்திலுள்ள இந்த மான்களும், வேதியின் ஓரங்களில் படுத்திருக்கின்றன; இந்த இரவு விண்மீன்களால் அலங்காரஞ் செய்யப்பட்டதாகி வளர்கின்றது; சந்திரனும், நிலவென்னும் வெண்பட்டுடுத்து வானிடைக் காணப்படுகின்றனன்; ஆதலின், யான் விடை கொடுக்கின்றேன்; நீ சென்று ஸ்ரீராமபிரானுக்கு அநுசரா யாகுக; நீ யுரைத்த மதுரவாக்கியங்களினாலே யான் மிக மகிழ்ந்தேன்; ஆதலின், யானளித்த ஆடையாபரணதிகளை என்னெதிரிலேயே யணிந்துகொண்டு திகழ்க; என்று மொழிந்தனள். பிராட்டியாரும் அதுகேட்டு அவ்வண்ணமே சிங்காரித்துக்கொண்டு அநஸூயையைப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு பெருமாளை நோக்கி, யருகிற்சென்று நின்றனர். பெருமாளும் பிராட்டி இவ்வண்ணம் சிங்காரங்கொண்டிருக்கக் கண்டு மகிழ்ந்து வினவுகையில், பிராட்டியார் நிகழ்ந்த வண்ண முரைத்தனர். மனிதர்கள் பெறற்கரிய அநஸூயையின் அந்தப் பூஜையைக் கண்டு இளையபெருமாளுடன் பெருமாள் மகிழ்வுகொண்டு அன்றிரவை யங்குப்போக்கி மறுநாளுதயத்திலெழுந்து நீரிலாடி ஹோமஞ்செய்து விளங்குகின்ற ரிஷிகளைக் கண்டு குசலம் வினவி யருளி விடைகேட்டனர். அந்த ரிஷிகளும் பெருமாளை நோக்கிக் கேட்டருளீர் சக்கரவர்த்தித் திருமகனே! இவ்விடத்தில் ராக்ஷஸர்கள் அல்லும் பகலும் எங்குந் திரிந்து, அசுசியாயிருப்பவர்களையும், ஊக்கமற்றிருப்பவர்களையும் கொல்லுகின்றனர்கள்; பலவகை யுருவங்கொண்டு யாவரையும் வெருட்டுகின்றனர்கள்; குருதியை யுண்ணத்தக்க கொடிய விலங்குகளும் பரவியிருக்கின்றன; இவைகள் எங்களைத் தின்ன வருத்துகின்றன; ஆதலின், ஸ்ரீராமபத்திரா! இவைகளைக் கொலைசெய்து எம்மைப் பாதுகாத் தளிக்கக்

கடவை. மஹாரிஷிகள் சாட்டில் கந்தமூலபலங்கள் கொண்டு வருவதன் பொருட்டுச் செல்லும் வழி இதோ காணப்படுகின்றதே? இந்த வழியினாலேயே நீ யடர்ந்தவன மேற வெழுந்தருளுவது தகும்; இவ்வழியே எழுந்தருளிக் கொடியவர்களைக் கொலைசெய்து எம்மைப் பாதுகாக்கக் கட்வையென்று வேண்டி யுரைத்தனர்கள். என்றிவ்வண்ணம் அம்முனிவர்களால் வேண்டி யாசீர்வாதஞ்செய்து பின்றொடர்ந்து வழிவிட்டனுப்பப்பட்ட பெருமாளும் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனுங்கூடி, கதிரவன் மேகமண்டலத்தி னுட்புகுவதுபோல அந்தக் கொடிய தண்டகாவனத்தினுட் புகுந்தருளினர்.

அயோத்தியாகாண்டத்தில் நூற்றுப்பத்தொன்பதாவது சருக்கம் முற்றிற்று.

# அயோத்தியாகாண்டமும்

முற்றுப்பெற்றது.

ஸ்ரீஸீதா லக்ஷ்மண ஸமேத ஸ்ரீராமசந்திர பரப்ரஹ்மணேநம:.

